KALKI 22.8.2004 ரூ.6.00

# கல்கி

## விஜய் Vs விக்ராந்த்!

### யார் இந்த ஜெராக்ஸ் ?

- சேலம் சலசலப்பு!
- ஒலிம்பிக்ஸ் திருவிழா

இலவசம்: சென்னை ஸ்கேன்

சென்னை வாசகர்களுக்கு மட்டும்

வசூல் ராஜா
4 ஸ்டூடண்ஸ்
சினிமா விமர்சனம்
12,96

ஒலிம்பிக்ஸ்
திருவிழா
84,85

சுரண்டப்படும்
நிலத்தடி நீர்
– பகீர் ரிப்போர்ட்
28-30

ராமதாஸ் செய்வது
நியாயமா?
– தராசு பதில்!
24-26

ஒத்த
அறிவு நிலை
– அமரர் கல்கி
46,47

தில்... தில்...
தினேஷ்!
88,89

அசத்தல் மாநாடு:
அதிரடி நோக்கம்!
81,83

இதழ் 'கல்கி பதில்கள்'
பகுதியில் பரிசு பெற்றவர்கள்
முழு முகவரியை எழுதி
அனுப்பினால் '[illegible]' திரைப்பட
கேஸட் அனுப்பி வைக்கப்படும்

# கல்கி 22.8.2004

# வட்டமேஜை

# சுற்றி வளைச்ச வெற்றி!

✉ ரஜினி மகளுடன் என்ன தகராறு என்ற மன்மதனின் (சிம்பு) பேட்டியைப் படித்து ஜென்ம சாபல்யம் அடைந்தோம்.
திருவாரூர், ஆர்.ராமசுப்ரமணி

✉ ரஜினிகாந்தின் மகளைப் பற்றி சிம்புவின் வாயைப் பிடுங்கும் முயற்சியில் வெற்றி பெற, எவ்வளவு சுற்றி வளைக்க வேண்டியுள்ளது!
மதுரை, இரா. கல்யாண சுந்தரம்

✉ தலைப்பில் பரபரப்பு; செய்தியில் பிசுபிசுப்பு. சிம்பு மனத்தின் செய்தியைத்தான் சொல்கிறேன்.
சென்னை, சுந்தரம்

✉ ராஜிராதாவின் 'ஆண்டவன் அனுகுமுறை' துணுக்கு ரசிக்கும்படி இருந்தது.
குட்டலாடம்பட்டி, கொ. மூர்த்தி

✉ நாகேந்திர பாரதியின் 'பொறுக்காத சூடு' கவிதை கண்களில் கசிவை உண்டாக்கியது.
சென்னை, ஆரூர்சேகர்

✉ தேர்ந்தெடுத்து, பார்லி.க்கும் சட்டசபைக்கும் அனுப்பிய எம்.பி.கள், எம்.எல்.ஏ.க்கள், வாக்காளர்களுக்கு பட்டை நாமம் சார்த்தி, புறக்கணிப்பு என்ற பெயரில் விவாதங்களில் இடம் பெறாமல் இருப்பதை, கண்டித்து தலையங்கம் எழுதி யோசனை கூறியதற்கு பாராட்டு!
ஈரோடு, ரேவதிப்ரியன்

✉ 'அருள்வாக்கு' பற்றி... ஸமஸ்கிருதத்தைத் தூக்கிப் பிடிக்கிற செய்தி. ஆன்மிகம் கடந்து, இது போல மொழி மாச்சர்யங்களைக் கடந்து தரமான இலக்கியம் என்ற ஒரே பார்வைதான் கல்கியோடு என்னைப் போன்ற வாசகனைக் கட்டிப் போட்டிருக்கிறது. நல்ல விஷயங்கள் எந்த மொழியில் இருந்தாலும் வரவேற்கிற காலம்தானே இப்போது. மொழியை வைத்து அரசியல் நடத்திய காலம் போய்விட்டது. மொழியை வைத்து ஆன்மிகம் என்றாலும், அதுவும்...
மயிலாடுதுறை, இரா. இராஜேந்திரன்

✉ கள்ளான் விமர்சனம் 'கன்' என்று இருந்தது.
பொன்மலை, ஆர். பிரகாஷ்

✉ நம்ம கல்கி வாசகர்கள் கவிதைச் சிந்தனையில் கல்கண்டு பஞ்சாமிர்த மழை பொழிய வைத்துள்ளனர். 'சிருடைச் சிறுவன்' பட பரிசுப் போட்டி முடிவுகள் எண்ண எண்ண இனிக்குதே!
திருவண்ணாமலை, எல்.எம். அபிதா

✉ ஆசிரியர் பக்கத்தில் அந்த கொழு கொழு மழலையின் (கொட்டாவி) இயற்கையான களைப்பு, 'தூள் க்ளிக்'காக இருந்தது.
வியாசர் காலனி, சுகந்தி நாராயண்

✉ 'வருமா அப்படி ஒரு காலம்?' மனுஷ்ய புத்திரனின் சிறு பத்திரிகைகள், பற்றிய பார்வை உண்மையானதே! இலக்கியம்

இயற்றுவதும், படிப்பதும் ஒரு பித்து. கணக்குப் பார்த்தால், அந்த சுகமான உணர்வுதான் மிச்சம். அதுவே உச்சம்.
கும்பகோணம்,
சாமிநாதமூர்த்தி



✉ இரண்டாவது பரிசு பெற்ற 'அகத்தின் அழகு' சிறுகதை இருவேறுபட்ட தம்பதிகளின் உள்ளுணர்வை மென்மையாக வெளிப்படுத்தியது. உணர்வு பூர்வமான கதை.
மேலகிருஷ்ணன்புதூர்,
ஆர்.கே. லிங்கேசன்

✉ 'நாற்காலிக் கனவுகள்' செய்தியில், விஜயகாந்த் படத்தைப் போட்டிருப்பது குசும்புதானே?
மதுரை, என்.பாலகிருஷ்ணன்

✉ வான்முட்டும் வாயுகுமாரன் - கல்கியால் கிடைத்த அனுமன் தரிசனம்!
சென்னை, ஹரிஹரன்

✉ அன்னம் எழுதிய 'கண்ணாடி மனசு' சிறுகதை மனசுக்கு இதமாய் இருந்தது.
காமநாயக்கன்பாளையம்,
மா. மோகனராசன்










# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
செ. ஏக்நாத் ராஜ்
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

Bharathan Publications
Private Limited,
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

## நூபுர கங்கை!

முருகப் பெருமானின் ஆறுபடை வீடுகளில் ஒன்று திருமாலிருஞ் சோலை. இது மதுரை யருகேயுள்ள அழகர் கோவில் மலைமீது உள்ளது. இந்தத் திருமாலிருஞ் சோலைக்கு மேலே 'நூபுர கங்கை' எந்த நேரமும் தீர்த் தத்தைக் கொட்டிய படி உள்ளது. நூபுரம் என்றால் நெற்றி. மலையின் உச்சிக்கு அடுத்த நெற்றிப் பகுதியில், பல நூற்றாண்டுகளாக வற்றாமல் கொட்டும் நூபுர கங்கைத் தீர்த்தத்தில் நீராட பக்தர்கள் கூட்டம் திரள்கிறது.

படம், தகவல் :

இரா. கல்யாண சுந்தரம், மதுரை



## ஹலோ ஐடியா!

என் நண்பன் ஃபோன் நம்பரைக் கொடுக்கும் போது தொடர்பு கொள்ள வேண்டிய நேரத்தையும் கொடுத்தான். எதற்கு என விசாரித்தேன்.

"இது பக்கத்து வீட்டு போன் நம்பர்... டீ.வி.யில் முக்கியமான தொடர் பார்க் கும்போது ஃபோன் வந்தால், தொந்தரவாக எண்ண வாய்ப்புள்ளது - தகவல் கொடுக் கத் தவறலாம். அதே நேரம் செய்தி நேரம் என்றால், யாரும் சிரமமாக எண்ண மாட் டார்கள். நாமும் நீண்ட நேரம் பேசலாம்" என்றான்.

- சு. காந்திராஜ், செங்கை





## கெக்கே... கெக்கே...

தேநீர்க் கடையில் காகம் ஒன்று 'கேக்'கைத் திருடிச் சென்று மரத்தில் அமர்ந்தது. அந்த மரத்தின் அடியில் இருந்த கொக்கு, காகத்திடம் கேக் தரும்படி கேட்டது. "இல்லை" என்று சொல்ல காகம் வாயைத் திறக்க, கேக் கீழே விழ, கொக்கு அதனைச் சாப்பிட்டு விட்டு காகத்தைக் கேலி செய்தது. இதனை அடிப்படையாகக் கொண்டு

'காக்கை கேக்கைக் கோக்க
கொக்கு கேக்கைக் கேக்க
காக்கை கேக்கைக் கக்க
கொக்கு கெக்கக் கெக்கே'

என்ற குழந்தைப் பாடலை கவிமணி கா. அப்துல் கபூர் தமது 'அரும்பு' என்ற கவிதைத் தொகுதியில் எழுதியுள்ளார். சுவையாக இருப்பதுடன், இதில் வல்லின எழுத்துக்கள் மட்டுமே அமைந்தது சிறப்பானதும்கூட.

- ஆர். கணேசன், சேலம்

## எப்படி வந்தது?

'ருத்ரன்' என்றால் 'சிவன்', 'அட்சம்' என்றால் 'கண்', 'சிவனது கண் போன்ற மணி' என்ற புனிதப் பொருளிலேயே ருத்ராட்சத்துக்கு அப் பெயர் ஏற்பட்டது.

சித் + அம்பரம் = சிதம்பரம். சித் என்பது அறிவு. அம்பரம் என்பது வெட்டவெளி. பஞ்சபூதத் தலங்களில் இறைவன் ஆகாச வடிவமாக விளங்கும் தலம் என்பதைக் குறிப்பிடுவதுதான் சிதம்பரம்.

- எஸ்.வி.அமிர்தகௌரி,
தூத்துக்குடி





தூத்துக்குடி மாவட்டம் சூரன்குடி தொடக்க கூட்டுறவு வேளாண் வங்கியில் பணிபுரியும் கந்தசாமி, கிராம மக்களிடம் விழிப்புணர்வை ஏற்படுத்தும் பிரசார நாடகங்களில் நடித்து வருகிறார். அறிவொளி இயக்கம் நாடகம் ஒன்றில் காலரா நோயாளியாக நடித்து, பிரபலம் ஆனதால், இவர் இப்பகுதியில் 'காலரா கந்தசாமி' என்றே அழைக்கப்படுகிறார்.

'பொது சுகாதாரம், குடிநீர் சேமிப்பு, ஜாதிச் சண்டைகள் போன்றவற்றை மக்களிடம் பிரசாரம் செய்தால் எடுபடாது. சிறு சிறு, கலை நிகழ்ச்சிகள் மூலம், பாமர மக்களின் மனத்தில் பதிய வைக்கலாம்'' என்கிறார் காலரா கந்தசாமி.

- டி.எல்.ரெட்டி,
வேலிடுபட்டி




# நாலு, அஞ்சு விஷயம்



## புத்தர் தந்த மகிழ்ச்சி!

ஜப்பானில் 'சிரிக்கும் யட்சன்' சிலை ரொம்பப் பிரசித்தம் பெரிய தொப்பையுடன், இருகைகளையும் தூக்கியபடி, காதுவரை நீண்ட சிரிப்பு முகத்துடன் உள்ள சிலை, இன்று எல்லா இடத்திலும் இருக்கிறது. இதைச் சிலர் 'சிரிக்கும் புத்தர்' என்று தவறாகக் கூறுகிறார்கள்.

ஆசையை அகற்றியவர் புத்தர். தவம் செய்து ஞானம் பெற்றவர். திரிகரண சுத்தி பெற்றவர். அவர் தவம் செய்து கொண்டிருந்தபோது யட்சன் ஒருவர் அவரைத் தூக்க நினைத்தான். ஒவ்வொரு முறையும் அவனுக்குத் தோல்விதான் மிஞ்சியது.

இதைக் கவனித்த புத்தர் சற்று மனம் இறங்கினார். ஒருநாள் அவன் நினைத்த படி அவரைத் தூக்கி தன்தலை மீது வைத்துக் கொண்டான். அப்போது அவன் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. பணமோ, பதவியோ தராத பரிபூரண மகிழ்ச்சி அது!

மகிழ்ச்சியைக் குறிக்கும் இந்த யட்சன் சிலை அதிர்ஷ்டமானதாக உலகம் முழுவதும் போற்றப்படுகிறது.

**- லக்ஷ்மி சிவகுமார், சென்னை**



## கவனிப்பாரா சிதம்பரம்?

சமீபத்தில் என் தோழியுடன் பேசிக் கொண்டிருந்தபோது ஒரு விஷயம் அறிந்தேன். என்ஜினியரிங் படிக்கும் மகனுக்காக கல்விக் கடன் வாங்கி இருக்கிறாள். இப்படி உயர் கல்விக்காக பெறப்படும் கல்விக் கடனுக்கு வட்டி விகிதம் 10.5% என்பது எனக்கு மிகவும் வியப்பளித்தது. கார் போன்ற ஆடம்பரப் பொருள்கள் வாங்கக் கொடுக்கப்படும் கடன்களுக்குக் கூட, வட்டி விகிதம் 7%க்குள் தான். பெர்சனல் லோன், வீட்டு வசதிக்கடன் போன்றவற்றிற்கும் வட்டி விகிதம், இதை விடக் குறைவு. இன்று ஏறி வரும் கல்விக் கட்டணங்கள் காரணமாக, மெரிட்டில் இடம் கிடைத்தாலும் நடுத்தரவர்க்கத்திற்குக் கூட இதுபோன்ற கல்விக் கடன்கள் கட்டாயமாகிவிட்டன. கல்விக் கட்டணமாக வருமான வரியில் இரண்டு சதவிகித சர்சார்ஜ் விதித்து, கல்விக்கு முக்கியத்துவம் கொடுத்து வரும் நிதியமைச்சர் ப. சிதம்பரம், கல்விக் கடனுக்கான வட்டி விகிதத்தைக் குறைக்க ஆவன செய்ய வேண்டும்.

**- வி. கல்யாணி, திருநெல்வேலி**

ஒரு நாவல் படிப்பதுபோல
ஒரே மூச்சில் படித்து முடிக்கலாம்!

# கம்பராமாயணம்

# உரைநடையில்

முனைவர் அ. அறிவொளி

**912 பக்கங்களில் - இரண்டு தொகுதிகள் - விலை ரூ. 225**

**சலுகை விலை ரூ. 175**

★ இந்நூலில் 112 தலைப்புகளில் 912 பக்கங்களில் காப்பியக்கதையை விரிவாகக் கூறியுள்ளார் முனைவர் அ. அறிவொளி அவர்கள்.

★ காப்பியத்தில் உள்ள எல்லாச் செய்திகளையும் ஒன்றுவிடாமல் இதிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

★ கம்பராமாயணத்தில் காணப்படும் சுவையான பாடல்கள் அனைத்தையும் கதைப்போக்கில் பொருத்தமான இடங்களில் பார்க்கலாம்.

★ காப்பியத்தில் தோன்றும் சிக்கலான பகுதிகளை இந்நூல் மிக நுணுக்கமாகவும் அற்புதமாகவும் விளக்குகிறது.

★ நுட்பமான பகுதிகளை முன்னும் பின்னும் தொடர்புபடுத்திக் காட்டும் அழகே அழகுதான்!

★ கதையில் வரும் மாந்தர்கள் துடிப்புடன் செயல்படுகிறார்கள். அண்ணனுக்குப் பணிவிடை செய்வதில் நிகரற்று விளங்கும் இலக்குவன், அண்ணன் சொல்லைச் சட்டமாக ஏற்றுப் செயல்படும் பரதன், தாயன்பே உருவான கோசலை, ஞானியான சுமித்ரை, செருக்கு வாய்ந்த கைகேயி, மரபுக்கும் வாய்மைக்கும் இடையே கட்டுண்டு துடிதுடித்து இறக்கும் தயரதன், அளப்பரும் ஆற்றல் பெற்ற அனுமன், அறத்தின் நாயகரான இராமரைச் சார்ந்த வீடணன், அண்ணன் என்ற பாசத்துக்குக் கட்டுப்பட்டு உயிர் துறந்த கும்பகருணன் ஆகிய எண்ணற்ற மாந்தர்களை மறக்கவொண்ணா வகையில் விவரித்துச் சொல்கிறார் ஆசிரியர்.

---

**45 ஆண்டுகளாகக் கம்பனில்**
**அனுபவம் பெற்றவரின் சீரிய படைப்பு இது.**

---

இந்நூலினை நேரில் பெற,
சென்னை வர்த்தமானன் (✆ : 24364174) ; கோவை விஜயா (✆ : 2382614 / 2394614); சேலம் சந்திரா (✆ : 2265635); திருச்சி திருச்சி புக் ஹவுஸ் (✆ : 2705098 /2764198); மதுரை செல்வி (✆ : 2343510 / 2345169); நெல்லை அருள் நந்தி சிவம் (✆ : 2339692) ஆகிய இடங்களில் சலுகை விலையினை (ரூ.175) மட்டும் ரொக்கமாகச் செலுத்தி உடனே பெற்றுக் கொள்ளலாம்.

தபாலில் பெற, கீழ்க்கண்ட முகவரிக்குக் கடிதம் எழுதுக. வி.பி.பி.யில் அனுப்புகிறோம். சலுகை விலை ரூ.175+ தபால் மற்றும் கட்டுச் செலவு ரூ.25 சேர்த்து ரூ.200 மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூலினைப் பெறலாம்.

**வர்த்தமானன் பதிப்பகம்**
40, சரோஜினி தெரு, தியாகராய நகர், சென்னை - 17. ✆ : 24364174





# விஜய் Vs விக்ராந்த்!

இரண்டாவது ஞாயிற்றுக்கிழமை என்றாலே கோலிவுட்டுக்கு கொண்டாட்டம் தான். சினிமாக்காரர்களின் அதிகார பூர்வ விடுமுறை நாளான அன்றைய தினத்தில், ஒரு ஃபிலிமைக் கூட யாரும் கிள்ளிப் போட மாட்டார்கள். அப்படிப்பட்ட நாளில் 'கில்லி' விஜய், எப்படி போட்டோ செஷனில்? அதுவும் காலைப் பனித்துளி ரோஜாக்கள் போன்ற நியா, லக்ஷ்மிராய் ஆகிய புத்தம் புது வரவுகளோடு, விதவிதமாக போஸ் கொடுத்துக் கொண்டிருந்தார். ஆச்சர்யம்! கொஞ்சம் இளமையாகவும் மாறியிருந்தார். "பத்து நிமிஷம் இடைவேளை" என புகைப்பட நிபுணர் சலுகை காட்ட, ஹீரோவை நெருங்கி, "ஹலோ விஜய்!" என்றோம்.

"நான் விஜய் இல்லை! அவரோட தம்பி விக்ராந்த்" என்றார் அச்சு அசலாக தொண்ணூற்று ஒன்பது புள்ளி ஒன்பது விழுக்காடு விஜய் போலவே இருந்த விக்ராந்த்.

"விஜய்க்கு உடன் பிறப்புகள் யாரும் இருப்பதாகத் தெரியவில்லையே? நீங்கள் எந்த வகையில் தம்பி" என்றதும், "நான் அவரது சித்தி மகன். மனசு, அத்தைமகள் ரத்தினமே போன்ற படங்களைத் தயாரித்த ஷீலாதான் எனது அம்மா. அப்பா சிவா, கெமிக்கல் பிஸினஸ் செய்கிறார். தாத்தா நீலகண்டனும் திரைப்படத் தயாரிப்பாளர்தான். இதையெல்லாம் விட, அண்ணன் விஜய், தமிழ் சினிமாவில் முன்னணிக் கதாநாயகன். பெரியப்பா பெரிய இயக்குனர், பெரி



• லக்ஷ்மிராயுடன்...

# – யார் இந்த ஜெராக்ஸ் நடிகர்?

யம்மா, மாமா இரண்டு பேருமே பாடகர்கள். குடும்பச் சூழ்நிலை காரணமாக சின்ன வயதிலேயே சினிமா ஆர்வம் வந்துவிட்டது! இதனால் லயோலா கல்லூரியில் விஜய் அண்ணன் படித்த அதே விஷுவல் கம்யூனிகேஷன், இரண்டாமாண்டு படித்துக் கொண்டிருக்கிறேன். இப்போதே வாய்ப்பு வந்துவிட்டது. அதுவும் வெற்றிப்பட இயக்குனர் ஆர்.வி. உதயகுமார் கையாலே மோதிரக் குட்டு. தைரியமாகத் தலையைக் கொடுத்துவிட்டேன்'' என்று நடிக்க வந்த கதையை, பளிச் என்று சொன்ன விக்ராந்த், இப்போது 'கற்க கசடற' படத்தின் மூலம் அறிமுகமாகிறார்.



இயற்பெயர் சந்தோஷ் என்றாலும், அண்ணனைப் போலவே 'வி' வரிசையில்



பெயர் வைக்க வேண்டும் என்று விரும்பி, இந்தியாவின் முதல் போர்க் கப்பலான விக்ராந்த்தின் பெயரையே இயக்குனர் முன்மொழிய, அதை அனைவரும் வழிமொழிந்திருக்கிறார்கள். என்னது?! தோற்றம் அண்ணனைப் போல, படிப்பது அதே லயோலாவின் விஸ்காம் துறையில்! பெயர் 'வி' வரிசையில்! விஜய் வழியை அப்படியே பின்பற்றப் போகிறாரா இந்த விக்ராந்த்?

''நிச்சயமாக இல்லை. ஆனால் அண்ணன் பெயரைக் கெடுக்க மாட்டேன். அதனால்தான் தொடக்கத்திலேயே அவரிடம் அறிவுரைகள் கேட்கப் போனேன். ''கேமரா முன்னால் நின்று நடிப்பது போல நினைக்காதே. கதையில் வரும் சூழ்நிலைக்கு, உனது பாத்திரம் நிஜவாழ்க்கையில் எப்படி உணர்ச்சிகளை வெளிப்படுத்துமோ, அதையே நீயும் செய். ஆனால் ஒரே டேக்கில் நடித்து விடு. இரண்டாவது டேக் என்றால், 'இப்படி நடி' என்று சொல்லித் தருவார்கள். அது உனது இயல்பைக் கெடுத்து விடும்'' என்றார். முக்கியமாக ''பாரதியார் கவிதைகளையும், கல்கியின் 'பொன்னியின் செல்வனை'யும் தினசரி வீட்டில் ஒரு மணி நேரம் வாய்விட்டு உரக்கப்படி; உனது வசன உச்சரிப்பு நன்றாக முன்னேறும்'' என்றார். அண்ணன்தான் எனக்கு பலம் என்று விஜய் காவியம் பாடியவரிடம், ''அண்ணன்தான் உங்களுக்கு பலவீனமும் கூட என்று நினைத்துப் பார்த்தீர்களா? உங்களை விஜய்யின் நகலாக ரசிகர்கள் நினைத்து விட்டால், உங்கள் சினிமாக் கனவுக்கு ஆபத்து இருக்கிறதே'' என்று பயம் காட்டினோம்,

• தியாவுடன்...



அசரவில்லை விக்ராந்த்.

''அண்ணனைப் போல கதைத் தேர்வில் கவனம் செலுத்தினாலே போதும், தோல்வி என்னைத் தொடாது'' என்றவர், 'கற்க கசடற' படத்தில், அதிரடி காதல் நாயகனாக அறிமுகமாகிறாராம்.

**– ஸ்ரீ சக்கரம்**

அட்டை, படங்கள்: **'கற்க கசடற'** படத்திலிருந்து

# அத்தாளநல்லூர் ஆண்டாள்

அத்தாளநல்லூர் என்ற அந்த குக்கிராமம், தாமிரபரணி ஆற்றங்கரைக் காற்றை துய்த்தபடி அமைதியாயிருந்தது. வெயிலை வீணாக்காமல் வீதியில் விளையாடிய சிறுவர்களை அழைத்து, 'கோயிலைப் பார்க்க வேண்டுமே?' என்று நாம் கேட்க, கோபுரவாசலையொட்டிய வீதியில் அவர்கள் தலைதெறிக்க ஓடுகிறார்கள். விரைவில் திரும்புகிறார்கள். கொசுறாக ஒரு சிறுவன் அவர்களோடு 'டுர்'ரென்று கற்பனை வாகனத்தில் ஓடி வந்து, கோயிலருகே பிரேக் போடுகிறான். தூரத்தில் பட்டர், கையில் சாவிக் கொத்துடன் நடந்து வருகிறார். கனிந்த புன்னகையுடன் கோபுரவாசல் திறந்து விடுகிறார்.

"பெருமாள் பெயர் ஆதிமூல நாதர்..." என்று அறிவித்துவிட்டு, ஸ்தல வரலாறு சொல்கிறார். வைணவத் தமிழின் துழாய் மணம் கமழ அவர் சொல்லும் கஜேந்திர மோக்ஷ கதை, செவியைக் குளிர்வித்து நெஞ்சை நிறைக்கிறது.

"உயர்ந்த சரணாகதி தத்துவத்தின் விளக்கம் இந்தப் புராணம். பக்தனின் பாதத்தைப் பிடித்த முதலைக்குத்தான் முதலில் மோக்ஷம் சித்தித்தது. நாமும் கஜேந்திரனைப் போல 'ராமா! கிருஷ்ணா! உன்னையன்றி எனக்கு வேறு கதியில்லை..' என்று அவனிடம் சரணடைந்தால், புனரபி ஜனனம் புனரபி மரணம் என்று பிறப்பெடுத்துழலும் சம்சார ஜலதியிலிருந்து நம்மை விடுவிப்பான்..."

குரலுயர்த்தாமல் பேசிவிட்டு, நெய்தீபமேற்றி தீபாராதனை செய்கிறார் பட்டர். அதே மென்குரலில், ஏறியேறி இறங்கும் மெட்டில், உணர்ச்சி ததும்ப அவர் உச்சரிக்கும் தொண்டரடிப் பொடியாழ்வாரின் பாசுரம், நமக்குள் முறுக்கிக் கொண்டு நிற்கும் போலி வைராக்கியங்களைத் தகர்க்கிறது. கண் விளிம்பில் நீர் கட்ட பெருமாள் திருவுருவம் கலங்கலாகத் தெரிகிறது.

கர்பகிருஹத்துக்கு வெளியே உத்ஸவ மூர்த்தங்களுக்கு ஆராதனை செய்கிறார். "உத்ஸவர் பெயர் கஜேந்திர ரக்ஷண பெருமாள்". சன்னதியின் இடது புறத்தில் ஆண்டாள் நாச்சியார். கண்ணனை மணவாளனாகப் பெற்ற பெருமிதத்தின் பிரகாசம், அந்தத் திருமேனி முழுவதும் துலங்கி, அவள் இதழ்களின் புன்னகையில் முத்தாய்ப்பு கொள்கிறது.

பிரசாதம் பெற்றுக் கொண்டு, "நீங்கள் பாடிய பாசுரம் ரொம்ப உருக்கிவிட்டது" என்று சொன்னால், சிரிக்கிறார். "நானா பாடினேன்...? ஆழ்வார்கள் அன்னிக்கே அப்படிப் பாடி வைச்சுட்டுப் போயிட்டா... அந்த பக்தியின் பிரகாசத்துலதான் இன்னிக்கு நாம பெருமாளைப் பார்த்துப் புரிஞ்சுக்கறோம்... இல்லேன்னா நமக்கென்ன தெரியும்..."

வியப்பும் மரியாதையும் மேலிட, நாம் கேட்டுக் கொண்டேயிருக்கையில்,

"அதிகம் பேசி உங்களைச் சங்கடப் படுத்தக் கூடாது. தூரத்துலேருந்து வந்திருக்கேள். நிறைய வேலைகள் காத்திருக்கும்..." என்று விடை கொடுக்கிறார்.

வெளியேறுகையில், இந்தியாவின் எண்ணற்ற அத்தாளநல்லூர்களையும், அடிப்படை வசதிகள்கூட இன்றி அவற்றில் வாழ்ந்து, இறைப்பணி செய்யும் பட்டர்கள், குருக்கள்மாரையும் எண்ணி நன்றி செலுத்தத் தோன்றுகிறது. இந்த தேசத்தின் பண்புகளோடு உயரிய எளிமையையும் கட்டிக் காப்பவர்கள் அல்லவா...?

பிரியா விடைபெறத் திரும்பிப் பார்க்கையில், ஆண்டாளின் புன்னகை ஆமோதிக்கிறது.

ஆசிரியர் பக்கம்



# ஹாலிவுட் பேய்க்கதை

"இவ்வளவு ரொமாண்டிகா ஒரு வலைத் தளம் இருக்கா" என ஆச்சரியப்பட வைக்கிறது 1000words.com இங்கே காதல், புகைப்படங்களாய் ஜொலிக்கிறது. காரணம் எல்லாமே காதல் தம்பதிகளின் கல்யாண ஆல்பம் என்பதுதான். கறுப்பு - வெள்ளை புகைப்படங்கள் 'காலத்தை மிஞ்சிய அழகுடையவை' என்ற கமெண்ட்டுடன் மின்னுகின்றன. (இந்த வலைத்தளத்தை அமைத்திருப்பது கலிபோர்னியா ஜோடிங்கோ!)

நம்ம ஊரு பேய்க்கதை ஹாலிவுட்டில் எடுபடுமா? எடுபடணும் என்று சவால் விட்டு 'The Village'-ஐ எடுத்திருக்கிறார், மனோஜ் நைட் சியாமளன் (நம்மூருக்காரர்!). ஒரு கிராமமும், அம் மக்களின் பேய்கள் பற்றிய நம்பிக்கையையும், அதற்குப் பயந்து அவர்கள் ஊரை விட்டு வெளியே வராமல் வாழ்வதையும் காட்டியுள்ள மனோஜ், அவர்களின் மூட நம்பிக்கையை மாற்ற, ஹீரோவும், கண்ணில்லாப் பெண்ணாருத்தியும் ஊரை விட்டு வெளியே சென்று திரும்பும்போது, பேய்கள் அவர்களுடன் வந்து விடுவதாக மிரட்டியுள்ளாராம். படம் ஏக குழப்பம் என விமரிசனம் வந்து குவிந்துள்ளது rottentomatoes.com-ல்.

"மேட்ரிக்ஸ் II & III-ல ஹீரோயினா நடிக்க என்னைக் கேட்டாங்க. ஸ்கிரிப்டைப் படிச்சுப் பார்த்தேன். திருப்தியில்ல. 'முடியாது'ன்னு சொல்லிட்டேன்" என சொல்லியிருப்பவர் லாரா தத்தா. சொன்னது dial bollywood.com-ல். (அழகிங்க சொன்னா நம்ப வேண்டியதான்)

ஜாலி SMS

முதல் SMS: நீ ரொம்ப அழகு. உன் கண்கள் கவர்ச்சியானவை. ஏண்டா என்னை உன் வசீகரத்தால மயக்கிட்டே?

அடுத்த SMS: என் முந்தைய SMS-ஐ தவறாக உங்கள் நம்பருக்கு அனுப்பியதற்கு ஸாரி!

- ப்ரெளஸர்

# வசூல் ராஜா MBBS

**வ**ராக்கடன்களை வசூல் செய்து தரும் ரவுடி ராஜா ராமனின் (கமல்) பெற்றோர், மகனை ஒரு நல்ல டாக்டர் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் அவருக்கு டாக்டர் பெண் (சினேகா) பார்க்கப் போன இடத்தில், குட்டு உடைந்து விடுகிறது. கூடவே பெற்றோரின் மனமும். நொந்து போகும் வசூல் ராஜா வரிந்து கட்டுகிறார். நிஜமாகவே எம்.பி.பி.எஸ். படித்து டாக்டராகியே தீருவது, என்ற வெறியோடு மருத்துவக் கல்லூரிக்குள் நுழைந்தால், ரவுடி ரகசியம் உடைத்த பிரகாஷ்ராஜ்தான் அங்கே தலைமை மருத்துவர். விடுவாரா அவர்? முடிவில் அவரே ஒப்புக் கொள்ளும் ஒரு சூப்பர் டாக்டராக கமல் எப்படி பரிமாணம் பெறுகிறார் என்பதை, கலக்கல் காமெடித் திருவிழாவாகக் காட்டியிருக்கிறார் இயக்குனர் சரண். இதற்கு கமலின் அபார ஈடுபாடு கை கொடுத்திருக்கிறது.

முதலாண்டு மாணவராக கமல் வகுப்பறைக்குள் நுழையும்போது, பேராசிரியர் எனக் கருதி மாணவர்கள் எழுந்து நிற்பது, ராகிங் செய்யும் சீனியர்களை தமது புஜத்தைக் காட்டி மிரட்டி, பதிலுக்கு அவர்களை ராகிங் செய்து ஜூனியர்களோடு ரசிப்பது என்று தொடக்கத்திலேயே களைகட்டிவிடுகிறது கமலின் நகைச்சுவை ராஜாங்கம். கூடவே வளைய வரும் சினேகாதான் தமது இளம் பருவத் தோழி பாப்பு என்பதை அறியாமல், பாப்புவைப் பார்க்க அவரிடமே உதவி கோரும் கமல், சினேகாவிடம் காதல் வயப்பட்ட பிறகு காட்டுகிற உணர்ச்சிகள் இருக்கிறதே, அத்தனை யதார்த்தம்!

ஒரு மருத்துவராக சதா கோபமும், கடுகடுப்புமாக கமலைக் குறி வைக்கும் பிரகாஷ்ராஜூம், ரவுடியாக இருந்த போதும் அன்பு வழிந்தோடும் மனிதராக கமலும், படத்தின் மைய இழையான 'அன்பே மருந்து' என்ற அனுபவத் தத்துவத்தைத் தூக்கிப் பிடிக்கும் அற்புதமான முரண்கள்.

நொடிக்கொரு வெடிச்சிரிப்பை வசன மாலையாகக் கோத்திருக்கும் கிரேசி, 'என்னைவிட்டால் காமெடி எழுத ஆளில்லை' என்கிறார்.

ஒரு பாடலுக்குக் கூட யாரும் எழுந்து செல்லாவண்ணம் கட்டிப்போடுகிறார் பரத்வாஜ். "கலக்கப் போவது யாரு", "காடு திறந்தே கிடக்கின்றது" மெட்டுக்களை, காதுகள் நிரந்தரமாய் அடை காத்துக் கொள்ளும்.

மசாலா படங்களால் மண்டைக் காய்ந்து கிடக்கும் தமிழ் ரசிகர்களுக்கு, 'சிரிப்பு வைத்தியம்' செய்வதில் டாக்டரேட் வாங்கி விடுகிறது கமல் - சரண் கூட்டணி.

**- விஷ்வல்தாசன்**

# மாணவர் போராட்டம்;
# காவல்துறையின் மூர்க்கம்!

பள்ளிக் கல்வி இயக்குனரிடம் மனு கொடுக்க மாணவர்களுக்கு உரிமை இல்லையா?... மார்க்ஸிஸ்ட் கட்சியின் மாணவர் பிரிவான எஸ்.எஃப்.ஐ.யைச் சேர்ந்த சிறு குழு, கல்வி வணிகமயமாக்கப்படுவதை எதிர்த்து மனு கொடுக்க முயன்றிருக்கிறது. அவர்களிடமிருந்து இயக்குனர் மனுவைப் பெற்றுக் கொண்டிருந்தால், எந்தச் சந்தடியும் சச்சரவும் இல்லாமல் விஷயம் முடிந்து போயிருக்கும். அவ்வாறு செய்வதற்குப் பதிலாக, ஊர்வலம் சென்ற சிறு மாணவர் குழுவைத் தமிழக காவல் துறை தடுத்து நிறுத்தியதும், அவர்களைத் திரும்பப் போகச் சொன்னதும் நியாயமற்ற செயல்கள்.

இளமையும் கொள்கைத் துடிப்பும் இணைகிறபோது, மாணவர்கள் பிடிவாதக்காரர்களாகத்தான் இருப்பார்கள். அவர்களை கவனமாகவும், காயப்படுத்தாமலும் கையாள்வது தான் பொறுப்புள்ள அரசின் கடமை. அரசின் ஆணையும் வழிகாட்டலும் சீரியதாய் இல்லாவிட்டால் பிரச்னைதான். மாணவர்களின் மனுவைப் பெற்றுக் கொள்ளுமாறு கல்வி அதிகாரிக்கு அரசே உத்தரவிட்டிருக்க வேண்டும். மாறாக,




**கல்கி**



2004 ஆகஸ்ட் 22
தாரண ஆவணி 6
மலர் : 63
இதழ் : 4


தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




அவர்களைக் கைது செய்து லாக்-அப்பில் தள்ளும் விதமாகக் காவல்துறை செயல்பட்டிருக்கிறது. சென்னை, நுங்கம்பாக்கம் காவல் நிலைய லாக்-அப் அறையில், தம்மைக் காவல் துறையினர் துன்புறுத்தியதாகவும், வயிற்றில் எட்டி உதைத்ததாகவும் புகார் செய்திருக்கிறார் மாணவப் போராளி வெண்மதி. லாக்-அப்பில் என்ன நடந்தது என்பதை, விசாரணை மூலம்தான் உறுதி செய்ய முடியும் என்றபோதிலும், கடந்தகால அனுபவங்களின் அடிப்படையிலும், செய்தித்தாள், புகைப்படங்கள், தொலைக்காட்சியில் பார்க்கக் கிடைத்த அத்துமீறல் நிகழ்வுகளின் அடிப்படையிலும், வெண்மதியின் புகாரை நம்புவதற்கே தோன்றுகிறது. மாணவியைக் கைது செய்ய பெண் போலீஸார் யாரும் அகப்படாமல்போனது, அதிசயத்திலும் அதிசயம்; அக்கிரமத்திலும் அக்கிரமம்.

தமிழக அரசோ, இது விஷயமாக எந்த ஒரு நடவடிக்கையும் எடுக்காமல் (இத்தலையங்கம் எழுதப்படும் வரை) மௌனமாக இருக்கிறது.

முதல்வரோ, கல்வி அமைச்சரோ, கல்வித் துறைச் செயலரோ, உள்துறைச் செயலரோ... யாருமே பொறுப்பேற்று மாணவர்களை அமைதிப்படுத்தும் முயற்சியில் ஈடுபடவில்லை.

விளைவு...? அனைத்து மாணவர்களுமே அனுதாபப் போராட்டத்தில் இறங்கிவிட்டனர். உணர்ச்சிகளின் பெருக்குடன் ரௌடித்தனமான போக்கும் இணைய, பச்சையப்பன் கல்லூரியில் கல்லெறிதல், அதன் விளைவாக வழிப்போக்கரான ஒரு மூதாட்டிக்குத் தலையில் காயம் என்று விளைவுகளின் சங்கிலித் தொடர், விபரீத எல்லைகளுக்குச் சென்று கொண்டிருக்கிறது. தமிழகம் தழுவிய மாணவர் போராட்டம் வெடிக்கிற அபாயம் ஏற்பட்டிருக்கிறது.

சட்டக் கல்லூரி மாணவர் பிரச்னையைக் கையாண்டதுபோல், இந்தப்




பிரச்னையையும் அரசு அலட்சியத்துடனும், காவல்துறை அகம்பாவத்துடனும் கையாண்டுள்ளன.

வெண்மதிக்கும் எஸ்.எஃப்.ஐ. மாநிலச் செயலர் செல்வாவுக்கும் காயம் ஏற்பட்டு, மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்ட பிறகும், அரசு தரப்பில் யாரும் சென்று அவர்களைச் சந்திக்கவில்லை. 'இப்படி நேர்ந்ததற்கு வருந்துகிறோம்... உடனடியாக சம்பவம் குறித்து விசாரணை நடத்தப்படும். விசாரணை முடிவுகள் அறியப்படும் வரையில் சம்பந்தப்பட்ட காவல் துறை ஊழியர்களை தற்காலிகப் பணி நீக்கம் செய்கிறோம்' என்று முதல்வர் அறிவித்திருப்பாரேயானால், நீடித்த மாணவர் போராட்டத்துக்கே இடமில்லாது போயிருக்கும்.

நியாயமாகப் பார்த்தால், வெண்மதியின் மருத்துவ செலவுகளையும், செல்வாவின் சிகிச்சை செலவுகளையும் அரசே ஏற்றிருக்க வேண்டும். ஆனால் அரசு மருத்துவமனையிலிருந்து 'டிஸ்சார்ஜ்' செய்யப்பட்ட வெண்மதி, தொடர்ந்து தனியார் மருத்துவமனையில் சிகிச்சை பெற வேண்டியிருந்திருக்கிறது.

இந்த விஷயத்தில் அரசு காட்டும் அசிரத்தை, மாணவப் போராளிகளுக்கு இழைக்கப்படுகிற அநீதி மட்டுமல்ல... அதுவே காவல் துறையின் தவறுகளுக்கும், அத்துமீறல்களுக்கும் அரசு வழங்குகிற மௌன அங்கீகாரமும்கூட. மௌனமான அங்கீகாரம்தான் என்றாலும், வலிமையான அங்கீகாரம்.

உள்துறையைத் தமது கட்டுப்பாட்டில் வைத்துள்ள முதலமைச்சர், இதை உணராமல் இருப்பது வருத்தத்துக்குரியது. போராட்டத்தில் ஈடுபட்ட மாணவர்கள் கம்யூனிஸ்ட்கள் என்பதால், முதல்வர் கட்சிக் கண்ணோட்டத்தில் இப்பிரச்னையை அணுகியிருப்பாரேயானால், அது முற்றிலும் தவறு! மாணவ உணர்வு என்பது எக்கட்சியிலும் ஒன்றுதான்.

●

# தனியா தெரியணுமா?

நடிகை கௌதமி உள்ளே போகிறார். நடிகர் ஸ்ரீகாந்த் வெளியே வருகிறார். மும்தாஜ் பெரிய பார்ஸலுடன் காரில் ஏற, நடிகர் அர்ஜுன் காரிலிருந்து இறங்குகிறார். சென்னை, மயிலாப்பூர், டாக்டர் ராதாகிருஷ்ணன் சாலையில் உள்ள 'பீ' ரேமாண்ட்ஸ் லிமிடெட் ஷோருமில்தான் இந்த ஷாப்பிங் அமர்க்களம்.







"தனியா தெரியணும். நம்ம டிரஸ் மாதிரி வேறே யாரும் போட்டிருக்கக் கூடாது" என்று ஆசைப்படுபவர்களுக்காக மட்டுமே இயங்கி வரும் டிஸைனர் பிரெட் ஸ்டோர் அது! லேட்டஸ்ட் ஃபேஷன் ரகங்கள் குவிந்திருக்கின்றன.

"அன்ஷு" அரோரா சென், அஷிஷ் அண்ட் ஸ்மிதா சோனி, கிருஷ்ணா மேதா, பிரியதர்ஷினி ராவ், பூஜா நாயர், சுஜித் முகர்ஜி, ராஜேஷ் பிரதாப் சிங் போன்ற தலை சிறந்த ஃபேஷன் டிஸைனர்களின் கை வண்ணத்தில் உருவான பிரெட் ரேஞ்ச் ஆடைகள் மட்டுமே இங்கே கிடைக்கின்றன. இந்த ஆடைகளை வடிவமைத்தவர் பெயரும் ஆடையின் உட்புறத்தில் பொறிக்கப்பட்டிருப்பது கூடுதல் சிறப்பம்சம்" என்கிறார் ரேமாண்ட்ஸ் நிறுவன அதிகாரி பாலோமிதாவன்.

ஷாருக்கான், சச்சின், ஐஸ்வர்யாராய் போன்ற வி.ஐ.பி.களுக்காக மட்டுமே பிரத்யேகமாக ஆடை தைத்துத் தந்த ஃபேஷன் டிஸைனர்கள், உயர்மட்ட மேன்மக்களுக்காகவும் ஆடை தைத்து தர முன் வந்திருப்பது சந்தோஷமான சமாசாரம்தான். ஆனால்... விலை... கொஞ்சம் தலை சுற்ற வைக்கும்.

பிரத்யேகமா தெரியணும்னா முதலில் பர்ஸ் இளைக்கணும்போல!

- ஐஸ்

படங்கள்: ஸ்ரீஹரி

# ஊர் கூடி விவசாயம்!

* யோகேஷ்வர் க்ருஷி வயலின் முதல் ஏர் பூட்டி ஓட்டப்படுகிறது!

மும்பையிலிருந்து நூற்றி ஐம்பது கி.மீ. தொலைவில் உள்ளது ரோகா கிராமம். அங்கு பிறந்தவர் தாதாஜி என்றழைக்கப்படும் பாண்டுரங்க சாஸ்திரி ஆத்வாலே.

ஜப்பானில் 1954ஆம் ஆண்டு நடைபெற்ற இரண்டாவது உலக சமய மாநாட்டில், ஆத்வாலே ஒரு கட்டுரை வாசித்தார். அதன் சாராம்சம் பகவத் கீதையை அடிப்படையாகக் கொண்டிருந்தது. இன்றைய உலகின் சமூகப் பிரச்னைகளுக்கு அதில் தீர்வுகள் சொல்லப்பட்டிருந்தன. வெளிநாட்டு அறிஞர்கள் பலரும், ''இந்தக் கொள்கைகளின் அடிப்படையில் இப்போது இந்தியாவில் எந்த கிராமமாவது செயல்பட்டு வருகிறதா'' என, கேட்க ஆத்வாலே, அதிர்ச்சியடைந்துக் மிகுந்த வெட்கத்துடன் ''அப்படி எதுவும் இல்லை'' என்று பதிலளித்திருக்கிறார். அந்த நிமிடத்தில் அவரது மனத்தில் உறுதி ஒன்று உருவானது.

தமது தந்தையார் மும்பையில் நிறுவியிருந்த பகவத் கீதை பாடசாலையைத் தொடர்ந்து நடத்தினார். அதில் பத்தொன்பது மாணவர்களைத் தேர்வு செய்து, அவர்களுக்கு இரண்டு ஆண்டுகள் கடுமையாகப் பயிற்சியளித்தார். கிராமங்களுக்குச் சென்று ஆன்மிகம், சமயம் மற்றும் வழிபாடுகள் பற்றி, மக்களுக்கு எடுத்துக் கூறுமாறு பணித்தார். பகவத் கீதையின் கோட்பாடுகளை ஒரு சமூக சக்தியாக மாற்றியமைத்தார். 1957ல் முதன் முதலாக மஹாராஷ்டிராவில் 'ஸ்வாத்யாய' உருவானது.

ஸ்வாத்யாய என்பது மனிதர்கள் யாவரையும் ஒன்றிணைப்பது. கிராம வயலில் அவர்கள் அனைவரையும் ஒற்றுமையுடன் உழைக்க வைப்பதன் மூலமாக, கடவுளுக்கு பக்தி செலுத்து





* பனையபுரம் கிராமத்தில் குத்தகை வயலில் யோகேஷ்வர் க்ருஷிக்காக கூடி நிற்கும் கிராமத்து ஆண்களும், பெண்களும்



* தாதாஜி



* ஜெயஸ்ரீ தால்வாகர்

வதே ஸ்வாத்யாயவின் முக்கியக் குறிக்கோளாகும்.

கல்லணை அருகே பனையபுரம் கிராமத்தைத் தேர்வு செய்தது ஸ்வாத்யாய. கிராம மக்களில் பெரும்பாலோரை ஒன்றிணைத்து, யோகேஷ்வர் க்ருஷி உருவாக்கப்பட்டது.

கிராமத்தில் ஒரு நிலத்தைக் குத்தகைக்கு முதலில் எடுத்துக் கொண்டு, ஒவ்வொரு வீட்டிலிருந்தும் ஒரு கைப்பிடியளவு விதை நெல், உரம் பெறப்படும். நாற்று நடுதல், ஏர் ஓட்டுதல், களை பிடுங்குதல், தண்ணீர் கட்டுதல், விளைந்த பின்னர் அறுவடை செய்தல் என, அனைத்திலும் அவர்களது உழைப்பு இருக்க வேண்டும்.

அறுவடையில் கிடைத்த நெல்லில் ஒரு பகுதியை, குத்தகைக்கு என்று வயல் உரிமையாளரிடம் தந்து விட வேண்டும். குத்தகை போக மீதமுள்ள நெல்லை 'மகாலக்ஷ்மி' என்கின்றனர். கிராமத்தில் வசித்து வரும் ஏழைகளுக்கு அது பிரசாதமாக அனுப்பி வைக்கப்படுகிறது. இதுவே யோகேஷ்வர் க்ருஷி எனப்படுகிறது.

சமீபத்தில் பனையபுரம் கிராமத்தில் ஒரு ஏக்கர் வயலை குத்தகைக்குப் பெற்று, அதில் கிராம மக்களை ஒன்றிணைத்துச் செயல்படச் செய்து வருகிறது ஸ்வாத்யாய. தமிழகத்தில் இங்குதான் இத்திட்டம் முதன்முதலாக செயல்படுத்தப்பட்டுள்ளது. மஹாராஷ்டிரா, மத்தியப் பிரதேசம், உத்தரப் பிரதேசம், ராஜஸ்தான், ஹரியானா, ஆந்திரா உட்பட பத்தொன்பது மாநிலங்களில் ஒரு லட்சத்துக்கும் மேற்பட்ட கிராமங்களில் யோகேஷ்வர் க்ருஷி செயல்பட்டு வருவதாகச் சொல்லப்படுகிறது. ஸ்வாத்யாய எனப்படுகிற அமைதிப் புரட்சியின் செயல்பாடுகளில், எவரிடமிருந்தும் பணம் பெறப்படுவது இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

''இது கடவுளின் வயல். இங்கு உழைப்பதன் வாயிலாக, கடவுளுக்கு விவசாயிகள் தங்கள் பக்தியைச் செலுத்துகின்றனர். யோகேஷ்வர் க்ருஷியில் இருந்து விளையும் நெல், இறைவனின் பிரசாதமாகத் தரப்படுகிறது. இதன் மூலமாகக் கொடுப்பவர் உயர்ந்தவர், வாங்குபவர் தாழ்ந்தவர் என்கிற ஏற்றத்தாழ்வு நீங்குகிறது. அந்த வயலில் பணிபுரியும் அனைவரும் கடவுளின் குழந்தைகள்'' என்கிறார் பாண்டுரங்க சாஸ்திரி ஆத்வாலேயின் மகளான, ஜெயஸ்ரீ தால்வாகர்.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

ஹோம தரிசனம் ! ஆத்ம நிம்மதி !!

# ஒவ்வொரு மாதமும் பௌர்ணமி நாளில் "ஆன்மீகம்" தெய்வீக மாதஇதழும்

# ஸ்வாமி கண்ணன் பட்டாச்சார்யா அவர்களும் இணைந்து நடத்தும்,

## அன்பர்கள் இஷ்டப்படும் ஹோம பூஜையில், நேரிலேயே கலந்து கொள்ளும் வாய்ப்பு!

ஹோமதரிசனம், வாசகர்கள் எடுத்த முயற்சிகள் வெற்றியடையவும், எவ்வித தடங்கலின்றி சந்தோஷமாக வாழவும், செய்தொழிலில் லாபம் பெறவும், மகப்பேறு பெற்று மகிழவும், திருமணத்தடைகள் நீங்கி, சுதுகலம் பெறவும், கடன் தொல்லையிலிருந்து விடுபடவும், பிள்ளைகள் கல்வியில் முதல் நிலை பெறவும், தீராத நோய்களிலிருந்து நிவாரணம் பெறவும், நவகிரஹ தோஷங்களிலிருந்து விலகி நலம் பெறவும், பிரிந்த குடும்பத்தினரும், தம்பதியினரும் ஒன்று சேரவும், உத்தியோகம் மற்றும் அயல்நாடு செல்லவும் நினைக்கும் ஒவ்வொரு வருக்காகவும், மாதா மாதம் பௌர்ணமி அன்று திருவல்லிக்கேணியில் சகல நன்மைகளும் கிடைக்க வேண்டி காலை 08.00 மணி முதல் 10.00 மணி வரை "ஆன்மீகம்" தெய்வீக மாத இதழ் சார்பாக கீழ் கண்ட விவரப்படி சிறப்பான ஹோமங்களை நடத்தவிருக்கிறோம்.

**30.08.04. ஞாயிறு - தீராத வியாதிகள் விலக - ஸ்ரீ தன்வந்திரி ஹோமம்**

சகல உயிர்களுக்கும் மூலம் ஆதிதேவனான பகவான் விஷ்ணுமூர்த்தி ஆவார். [illegible] ஸ்ரீ தன்வந்திரி ஹோமத்தில் கலந்து கொண்டு நாம் அனைத்து விதமான நன்மைகளையும் அடையலாம். தீராத வியாதிகள் நீங்கி திடமான உடல் உறுதியையும், நீண்ட ஆயுளையும் பெற்றிட அன்புடன் அழைக்கிறோம்.

| | | | | |
|---|---|---|---|---|
| ஆவணி | 30.08.04 | ஞாயிறு | தீராத வியாதிகள் விலக | ஸ்ரீ தன்வந்திரி ஹோமம் |
| புரட்டாசி | 28.09.04 | செவ்வாய் | சத்ரு பயம் விலக | ஸ்ரீ நரசிம்ம ஸுதர்சன ஹோமம் |
| ஐப்பசி | 28.10.04 | வியாழன் | செல்வம் பெருக | ஸ்ரீ லக்ஷ்மி குபேர ஹோமம் |
| கார்த்திகை | 26.11.04 | வெள்ளி | நவகிரஹ ப்ரீதி உண்டாக | ஸ்ரீ நவகிரஹ ஜெயாதி ஹோமம் |
| மார்கழி | 26.12.04 | ஞாயிறு | சகல காரியம் ஜெயப்ரதம் உண்டாக | ஸ்ரீ மஹாபிம பூஜையும், வாயு ஸுக்த ஹோமமும் |
| தை | 25.01.05 | செவ்வாய் | திருமண பாக்கியம் கை கூடி வர | ஸ்ரீ ஸ்வயம்வரகலா பார்வதி ஹோமம் |
| மாசி | 24.02.05 | வியாழன் | சர்வதோஷ நிவர்த்தி அடைய | ஸ்ரீ வாஸ்து நவக்கிரக ஹோமம் |
| பங்குனி | 25.03.05 | வெள்ளி | வழக்கு வியாஜ்யங்களில் வெற்றி கிட்ட | ஸ்ரீ ஸுக்த ஜெயாதி ஹோமம் |
| சித்திரை | சித்ரா பௌர்ணமியன்று | செய்வினை விலக | ஸ்ரீ ஸுதர்சன ஹோமம் | |
| வைகாசி | வைகாசி பௌர்ணமியன்று | கல்வி செல்வம் உண்டாக | ஸ்ரீ நீல சரஸ்வதி ஹோமம் | |
| ஆனி | ஆனி பௌர்ணமியன்று | தடைகள் அனைத்தும் விலக | ஸ்ரீ ராஜ கணபதி மஹாமந்த்ர ஹோமம் | |
| ஆடி | ஆடி பௌர்ணமியன்று | நினைத்த காரியங்கள் சித்தியாக | ஸ்ரீ துர்கா ஸுக்த - பஞ்ச ஸுக்த ஹோமம் | |

ஜோதிட சாஸ்த்திரசிம்மம், வாஸ்து சாஸ்த்திர விற்பன்னர், யோக ஆஞ்சனேய சக்தி பீடாதிபதி பூஜ்யஸ்ரீ ஸ்வாமி கண்ணன் பட்டாச்சார்யா அவர்களின் தலைமையில், வேத சாஸ்திரங்களில் பாண்டித்யம் பெற்ற வித்வான்களைக்கொண்டு, ஸ்ரீ யோக ஆஞ்சநேயர் சக்தி பீடம், 177/84, வெங்கட்ரங்கம் பிள்ளைத்தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5 ல் சிறப்பு ஹோமங்கள் மேற்கண்ட விவரப்படி ஒவ்வொரு மாதங்களிலும் நடைபெற இருக்கின்றன.

மேலே குறிப்பிட்டுள்ள ஒவ்வொரு மாதங்களில் நடைபெறும் ஒரு ஹோமத்தில் பங்குபெற கட்டணம் ரூ.500/- எல்லா ஹோமங்களிலும் பங்கு பெறவும், முன்பதிவு செய்யவும் கட்டணம் ரூ.4500, செலுத்தி, நேரில் கலந்து கொள்ளலாம். நேரில் கலந்துகொள்ள இயலாதவர்கள் பெயர், நட்சத்திரம், இராசி, கோத்ரம் முதலியவைகளைக் குறிப்பிட்டு, என்ன பரிகாரத்திற்காக ஹோமம் செய்ய வேண்டும் என்பதையும், தங்களது விலாசத்தையும் எழுதி அனுப்பவும். பிரசாதங்கள் தபால்மூலம் அனுப்பப்படும்.

வைகானச தர்ம சாஸ்திரம், ஜோதிடம், வாஸ்து என ஒரு கோடியே 25 லட்சம் கிரந்தங்களை எழுதியவரும் ப்ருகு, அத்ரி, காஸ்யபர், மரீசி ஆகிய மகரிஷிகளுக்கும் குருவானவருமான ஸ்ரீ விகனஸ மஹரிஷியின் அபூர்வ புகைப்படத்துடன் ஹோமத்தில் வைத்து பூஜிக்கப்பட்ட அட்சதை, மஞ்சள் ரட்சை, குங்குமம், ஹோம பஸ்மம், 3x3 அளந்த செம்புத் தகட்டினாலான யந்திரத்துடன் வெள்ளியால் செய்யப்பட்ட லக்ஷ்மி டாலரும் மஹாஹோமத்தில் பங்குபெறுபவர்களுக்கு பிரசாதமாக வழங்கப்படும்.

ஸ்ரீ விகனஸ மஹரிஷியின் பூஜிக்கப்பட்ட படம், இருக்கும் வீடுகளிலோ, அலுவலகங்களிலோ எந்த விதமான தோஷங்களும் அண்டாது என்பது உறுதி.

எடுத்த முயற்சிகளில் வெற்றிகளை உண்டாக்கும் ஹோமத்திற்காக 'Homadharisanam' எனும் பெயரில் ரூ. 500/ அல்லது ரூ. 4500, - Cheque/D.D./M.O. மூலம் அனுப்ப வேண்டிய முகவரி

# ஹோம தரிசனம்

68, நடுத்தெரு . (ஸ்ரீ கபாலீஸ்வரர் கோயில் அருகில்) மயிலாப்பூர், சென்னை - 4.

Tel : 52067068. Fax : 044-5206 6525. E-mail:sivasiva@vsnl.net

ஹோமத்தின் மூலம் தெய்வத்தை ப்ரீதி செய்து வேண்டியதை நிறைவேற்றிக் கொள்வதும் ஒரு சிறந்த வழி!

ஜீ... ஜீ... காதைக் கொடுங்க...

# பட்சியார் சொன்ன பரம ரகசியங்கள்!

—புலனாய்வு பாணியில் ஒரு கற்பனை கிசு. கிசு!



பட்சியார் படபட வெனச் சிறகுகளை அடித்தபடி டேபிளில் வந்து அமர்ந்த போது, அவருக்காகத் தயாராக வைத்திருந்த பொன்னாடை போர்த்தப்பட்டது. இருக்காதா பின்னே...?

'கழுத்தையறுத்தபடியே இருந்தாலும், காலை மட்டும் வாரியே விடமாட்டார்கள்' என கம்யூனிஸ்டுகளைப் பற்றி அவர் கணித்ததை மன்மோகன்சிங் கூட மறுக்க முடியாதே!

சற்றுக் கூச்சத்துடன் பொன்னாடையை வாங்கிக் கொண்ட பட்சியார்,

"ஆட்டுக்கு தாடியிருந்தால்கூட பரவாயில்லை. ஆட்சிக்கு கவர்னர் பதவி என்ற ஒன்று இல்லாமல் போக ஆவன செய்யுங்கள்' என ஜனாதிபதியிடம் ரகசியமாக மனு ஒன்று தந்திருக்கிறார்கள்'' என்றார் நிதானமாக.

"ஓ! சட்டம், ஒழுங்கு சரியில்லை என கவர்னரிடம் இவர்கள் தந்த மனுவுக்குத் தக்க நடவடிக்கை எடுக்கவில்லையென்பதால் அவரது வேலைக்கே உலை வைக்கிறார்களாக்கும்?!" என்றோம்.

''மனுவை ஜனாதிபதியிடம் தந்தது 'இவர்கள்' அல்ல ஓய்! 'அவர்கள்!'' என்றபடி விஷமச்சிரிப்பு சிரித்தார் பட்சியார்.

''பட்சியாரே! பட்டென சஸ்பென்ஸை உடைக்கிறீரா?'' என்றோம்.

'' 'அவர்கள் கட்சியைச் சேர்ந்த அமைச்சர்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து ரொம்ப, ரொம்ப ரகசியமாக மாறுவேடத்தில் சென்று அப்துல் கலாமிடம் மேற்படி மனுவைத் தந்துள்ளனர்'' என்றார்.

"எதற்காகவாம்?" என்றோம்.

''அமைச்சர்களின் தலை உருளும் போது 'தோட்டத்திலிருந்து' ராஜ் பவனுக்குத் தானே கார் பறக்கிறது. ராஜ் பவனிலேயே 'ராஜா'வை இல்லாமல் செய்து விட்டால்...? என யோசித்துதான் காயை நகர்த்தியிருக்கிறார்களாம் மாண்புமிகுக்கள்!" என்றார் பட்சியார்.

''கலாம் என்ன சொன்னாராம்?'' என்றோம் திகைத்தபடி. "பார்க்கலாம்!" என்றாராம்.

"ரொம்பதான் உட்டாலக்கடி நியூஸா தர்றீரே..."

"உட்டாலக்கடிக்கே இப்படி அலுத்துக்





கொண்டால் எப்படி? இந்த உடான்ஸையும் கேளும்!" என்றார் பட்சியார் பரபரப்பாக.

"சொல்லித் தொலையும்!"

"பௌர்ணமியன்று நிலாவை வெளியே வரச் செய்யாமல் மறைக்க முடியுமா, அல்லது மேக கூட்டங்களை ஏற்படுத்தி நிலாவை இருட்டடிப்புச் செய்ய முடியுமா என, வான இயல் வல்லுநர்களுடன் தீவிரமாக கலந்தாலோசித்தபடி இருக்கிறாராம் அந்த சென்ட்ரல் மினிஸ்டர்!"

"எதற்காக?"

"ஆட்சி கலையாமல் இருக்க வேண்டுமென்று வருகிற பௌர்ணமியன்று, அர்த்த ராத்திரியில் அம்மையார் யாகம் ஒன்று நடத்தப் போகிறாரென்று ஊரே அல்லோல கல்லோலப்படுகிறதே! உமது காதில் அந்தச் செய்தி விழவில்லையோ?" என விசித்திரமாக நம்மைப் பார்த்தார்.

"ஓஹோ! நிலாவை மறைச்சுட்டால் யாகத்தை நிறுத்திவிடலாம்னு இந்தச் சதியாலோசனையா?" எனக் கூறி நிமிர்ந்தோம்.

"சூரியன் தயவில்லாமல் நிலவுக்கு வெளிச்சம் வராதுன்னு சின்ன வயசில சயின்ஸ் பாடம் படிச்சிருப்பீரே?!" என சொல்லிவிட்டு, அர்த்த புஷ்டியோடு சிரித்தார் பட்சியார்.

"தலை சுத்தறது சுவாமி! அடுத்து என்ன அல்வா வெச்சிருக்கீர்?" என்றோம்.

"அடுத்து நான் சொல்லப் போறது ரொம்ப வாஸ்துவமான... அடச்சே, வாஸ்தவமான நியூஸ்!"

"ஓ! வாஸ்து மேட்டரா? கேரள ஜோசியர், மேடத்திற்கு ரொம்ப தோஸ்து ஆயிற்றே! எடுத்துவிடும் உம் சரக்கை!" என பச்சைக் கொடி காட்டினோம்.

உற்சாகமான பட்சியார், மண் சொம்பில் (லல்லு உபயம்) வைக்கப்பட்டிருந்த கேப்பங்கூழை உறிஞ்சியபடி, "வாஸ்து என்ற பெயரில் வீட்டு ஜன்னல், வாசற்படி, காம்ப்பௌண்ட் சுவரை எல்லாம் இடித்து, மாற்றிக் கட்டுவது பற்றி கேள்விப்பட்டிருப்பீர். ஆனால் நான் கேள்விப்பட்ட மெகா பட்ஜெட் புராஜெக்டைப் பற்றி நீர் கனவிலும் நினைத்துப் பார்த்திருக்கமாட்டீர்" என பீடிகை போட்டார்.

"விஷயத்திற்கு வாரும்!" என்றோம்.

"வடமாநிலங்களிலும், வட கிழக்கு மாநிலங்களிலும் மழையும், வெள்ளமும் சக்கைப் போடு போட்டுக் கொண்டிருக்கும் வேளையில், தமிழகம் மட்டும் வறட்சியால் வறண்டு கொண்டே வருகிறது, அல்லவா? ஆதலால்..."

"ஆதலால்?!"

"வாஸ்துபடி தமிழகத்தை வட இந்தியாவில் பெயர்த்து வைக்க வேண்டுமென்ற கேரள ஜோசியரின் யோசனைக்கு, செயல் வடிவம் தர முடியுமா என அமெரிக்க புவியியல் வல்லுநர்களை கலந்தாலோசித்து வருகிறாராம் அம்மா!"

"அப்படிப்போடு அரை பிளேடை! கடைசி கப்ஸாவையும் இந்த பிட்ஸாவைச் சாப்பிட்டபடியே கக்கிவிடும்" என்றோம்.

"இறுதிப் போட்டிகளில் மண்ணைக் கவ்வுவதையே வாடிக்கையாகக் கொண்ட நம்ம கிரிக்கெட் அணியினர், அதைத் தடுக்க ஒரு அதிரடி திட்டம் தயாரிச்சிருக்காங்களாம்" என்றார் பட்சியார்.

"என்ன திட்டம்?"

"இனிமேல் செமி ஃபைனலிலேயே தோற்று விடுவது என்பதுதானாம் அது!" என்றபடி நம்மை நோக்கிய பட்சியார், அடுத்த மேட்டருக்குள் நுழையத் தயாரான போது, பின்னங்கால் பிடறியில் பட வெளியே பறந்தோம் நாம்.



**-பாஸு**

தமிழின் இன்றைய சிறு பத்திரிகைகளை கவனித்தால், அதில் பிரதானமாக இரண்டு மாற்றங்கள் நிகழ்ந்திருப்பதைக் காணலாம்.

முதலாவது மாற்றம். எல்லாச் சிறு பத்திரிகையிலும் யாராவது யாரையாவது நிராகரித்துக் கொண்டிருக்கிறார்கள். முன்பெல்லாம் அனைத்துச் சிற்றிதழ்களும் கூடி, பெரும்பாலும் வெகுஜன எழுத்தாளர்களை நிராகரிக்கும். இப்போது சிற்றிதழ் எழுத்தாளர்களின் இலக்கு, வெகுஜன எழுத்தாளன் மட்டும் அல்ல. ஒவ்வொரு சிற்றிதழ் எழுத்தாளனும் தனது சக சிற்றிதழ் எழுத்தாளனை, பெரும் பிரயத்தனங்களோடு எதிர்க்கிறான். (இதற்குப் பல்வேறு உள் காரணங்களும் உண்டு). அவர்களுக்குள் நடக்கிற இந்த மியூசிகல் சேர் விளையாட்டு, சிற்றிதழ்களின் இப்பக்கங்களை கரம் மசாலாவாக்குகின்றன.



# தனிப்போவியம்...?

இரண்டாவது மாற்றம், ஒவ்வொரு சிற்றிதழிலும் இடம் பிடிக்கிற ஓவியர்கள் மற்றும் ஓவியங்கள்.

சிற்றிதழ்களில் இடம் பிடிக்கிற ஓவியர்கள் சாதாரண ஓவியர்கள் அல்ல. அவர்களுக்கென்று ஓவிய உலகில் தனித்தனி அடையாளங்களும், அசைக்க முடியாத நாற்காலிகளும் உண்டு. அவர்கள் வெறும் கதைக்கோ, கவிதைக்கோ படம் வரைகிற இல்லஸ்ட்ரேஷன் ஓவியர்கள் அல்ல. அவர்களுடைய ஓவியங்களும் அலட்சியமாக அணுகக் கூடியவை அல்ல.

தீவிர எழுத்துகளைப் போல அவர்களுடைய ஓவியங்களும் நுட்பம் நிறைந்தவை. இந்த இடத்தில்தான் சில கேள்விகளும், ஆச்சர்யங்களும் எழுகின்றன.

தீவிர எழுத்துக்குப் பயிற்சி உடைய வாசகன்தான் சிற்றிதழ்களை வாசிக்க முடியும் என்று இருக்கிற சூழலில், அதற்கு இணையான - தீவிர ஓவியம் என்று சொல்லலாமா? - தரத்தில் உயர்ந்த ஓவியங்களும், கோடுகளும் ஓர் இலக்கிய வாசகனுக்கு எதன் அடிப்படையில் கொடுக்கப்படுகின்றன? அந்த ஓவியங்கள் துல்லியமாக அவனால் புரிந்து கொள்ளப்படுமா? அதற்குரிய பயிற்சி எப்படி அந்த வாசகனுக்குக் கிடைத்தது? புரிந்து கொள்ளப்படலாம் என்பது ஒரு நம்பிக்கை என்றால், எப்படி ஒரே நேரத்தில் இந்த நம்பிக்கை எல்லா சிற்றிதழ்களுக்கும் ஏற்பட்டிருக்கிறது? அல்லது ஒருவேளை அந்த ஓவியங்களை, வண்ணங்களை, கோடுகளைப் புரிய வைக்கிற முயற்சியாகத்தான் சிற்றிதழ்களில் ஓவிய, சிற்பக் கலைஞர்களின் பேட்டிகளும், படைப்புகள் பற்றிய விமர்சனங்களும் கொடுக்கப்படுகிறதென்றால், இலக்கியம் என்பதில் கண்டிப்பாக ஓவியம் இருக்கிறதா? இலக்கிய ரசனை என்றாலே அது ஓவிய ரசனையையும் சேர்த்ததுதானா? ஓவியக் கலை



என்பதற்கும், இலக்கியம் என்பதற்கும் வேறுபாடு இருப்பது உண்மைதானே?

தீவிர வாசகனைத் திருப்தியடைய வைக்க சிற்றிதழ்கள் செயல்படுகின்றன. தீவிர வாசகனுக்குச் சிற்றிதழ் போல, ஓர் ஓவிய ரசிகனுக்கு ஓவியச் சிற்றிதழ் தொடங்கப்படாதது ஏன்?

தீவிர எழுத்தைத் தொடர்ந்து வாசிக்கும் ஓவியர்களுக்கு இலக்கிய ரசனை பற்றி அபிப்ராயம் ஏதும் உண்டா?

ஒரு சிற்றிதழுக்கு நல்ல ஓவியத்தையும், நல்ல இசையையும், நல்ல சிற்பத்தையும், தேர்ந்த வண்ணக் கலவைகளையும் அறிமுகப்படுத்த வேண்டிய கட்டாயம் அல்லது கடமை இருப்பதாக வைத்துக் கொண்டால், அந்த பரஸ்பரக் கடமை ஓவியக் கலைஞனுக்கோ, சிற்பக் கலைஞனுக்கோ, இசைக் கலைஞனுக்கோ கிடையாதா? அவர்கள் தமக்குப் பிடித்த எழுத்துகளுக்கு ஏதாவது செய்கிறார்களா? தத்தமது உலக சக சிறந்த கலைஞர்களுக்கு, அந்த அரிய எழுத்தை அறிமுகப்படுத்துகிறார்களா?

ஒரு தீவிர இலக்கிய வாசகன், மிக விரும்பி ஒரு சிற்றிதழை வாங்கி வந்து வாசிக்கும்போது, எதற்கு சம்பந்தமே இல்லாமல் ஓர் ஓவியத்தின் அறிமுகம்? அதுவும் பயிற்சி போதாத நிலையில்? அதை அவன் தேடாத நிலையில்?...

தீவிர வாசகன் என்பதால் தீவிரச் சிற்றிதழ் ஒன்றைத் தேடிச் செல்லும் ஒருவன், தீவிர ஓவிய ஆர்வலனாக இருந்தால் ஓவியங்களையும் தேடிச் செல்ல மாட்டானா?

**வஸந்த் செந்தில்**

# நீங்கள் கேட்டவை - தராசு

● லெ.நா. சிவகுமார், சென்னை -33

? ஆட்டோகிராஃபுக்குப் பிறகு இன்னொரு ஹிட் படம் தரப் போகிறாராமே சேரன்?

! 'டூரிங் டாக்கீஸ்' என்று பெயராம். இந்தப் படம் 'சினிமா பாரடைஸ்' என்ற இத்தாலியப் படத்தின் தழுவல் என்று ஒரு பேச்சு.

● மல்லிகை மன்னன், மதுரை

? பத்திரிகை அலுவலகங்களை அடித்து நாசம் பண்ணினால் பத்திரிகையாளர்கள் திருந்தி விடுவார்கள் என்று பா.ம.க தலைவர் நினைப்பது நியாயமா...?

! 'ஆஹா, ஓஹோ, ஆமாம், ரொம்ப சரி'ன்னு எழுதினா போதும். இல்லேன்னா, தொண்டர்கள் கொஞ்சம் உணர்ச்சி வசப்படுவாங்க... அவ்ளோதான். மற்றபடி பா.ம.க.தலைவர் பத்திரிகை சுதந்திரத்தை மதிக்கிறவர்தான்!

● பா.சு.மணிவண்ணன், திருப்பூர்

? பா.ஜ.க. ஹிந்துத்வா கொள்கையைக் கைவிட்டால் அதன் இமேஜ் சரிந்துவிடாதா?...

! அப்படி நினைப்பதற்கில்லை. காங்கிரஸ் இடது சாரிகள் பக்கம் சரிவதால், பி.ஜே.பி. வலது சாரிக் கட்சியாக நன்கு செயல்பட்டுப் பிரகாசிக்கலாம். பொருளாதாரம், அயலுறவு போன்ற கொள்கைகள் அடிப்படையில் கட்சிகள் போட்டியிடுவதுதான் நல்ல ஜனநாயகம். ஆனால், சுலபமாக வோட்டுக்களைக் கவரும் வழியைத் தான் எல்லா கட்சிகளுமே நாடுகின்றன.

● சு.நா.இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்

? 'மனிதனாக வாழ வேண்டும்; குடும்பத்தின் பெயரை எந்த இடத்திலும் எக்காலத்திலும் காப்பாற்ற வேண்டும்' என்று ஜோர்டானில் உள்ள தமது பேரனுக்கு, சிறையிலிருந்து சதாம் கடிதம் எழுதியுள்ளாரே...?

! தம்மை முன்னுதாரணமாகக் கொள்ள வேண்டாம் என்று அறிவுரை வழங்குகிறார்.

● இத்தாலிய இன்ஸ்பிரேஷன்?...





● சந்ததிகள் நலனுக்கு..

● வி. ஸ்ரீகிருஷ்ணன், சென்னை - 90

? நீங்கள் பிரசுரிக்கும் பார பட்சமான செய்திகளைப் பார்த்தால், தமிழ்நாட்டிலும் தி.மு.க. கூட்டணி கட்சிகள் பத்திரிகையாளர்களுக்கு விருந்து கொடுப்பதாகத் தோன்றுகிறதே...?

! பவர் கண்ணாடி போட்டுக் கிட்டுப் படிக்கச் சொன்னா, கலர்க் கண்ணாடியப் போட்டுக் கிட்டுப் படிக்கிறீங்களே. மொதல்ல உங்க கண்ணாடிய மாத்துங்க சார்!

● கோணல் காமெடி டிராக்!



## பான் மசாலா தடை நீக்கம் பற்றி...?

● ஆரூர் சேகர், சென்னை - 26

? ஹலோ இறைவா, லெட்டர்ஸ், போஸ்ட் கார்ட், ஹாய் மதன்... திரைப்பட அதிபர்கள் சினிமா பெயர்கள் வைப்பது போல, பத்திரிகை அதிபர்களும் இந்த மாதிரி ஆங்கிலம் கலந்த தலைப்புகளை அனுமதிப்பது சகிக்க முடியவில்லையே...?

! இஸ் இட்...? ஸோ, ஸாரி!

● **எஸ். சுவாமிநாதன், மன்னார்குடி.**

***? மாறிவரும் சமுதாயச் சூழ்நிலைக்கு ஏற்ப, ஹிந்து மத ஆசரணைகளும் கோட்பாடுகளும் மாற வேண்டாமா..?***

! கல்வி, நாகரிக வளர்ச்சி மூலம் நிச்சயம் மாற்றங்கள் வரவேண்டும். முக்கியமாக, மண்டையில் தேங்காய் உடைப்பது, அலகு குத்திக் கொள்வது, சிசுக்களைப் புதைத்துவிட்டு மீண்டும் வெளியே எடுப்பது, தீ மிதிப்பது, பலி கொடுத்து ரத்தம் குடிப்பது, போன்ற மூடத்தனங்கள் அடியோடு ஒழிய வேண்டும். இவற்றையெல்லாம் இறைவன் விரும்புவான் என்று என்னால் நம்ப முடியவில்லை. அன்பே சிவம் என்ற கோட்பாடு பரவுதல் வேண்டும்.

* அவமதிப்புக்கு அஞ்சி...

* சுதந்திரத்துக்கு நிபந்தனை!



* தோற்றாலும் ஆஜர்



● **அ.சா. குருசாமி, செவல்குளம்**

***? சென்னை மக்களைக் காப்பாற்றியது புதிய வீராணம் திட்டம்தான் என்று தமிழக முதல்வர் கூறியுள்ளாரே...?***

! சிறு திருத்தம்: அத்திட்டத்தின் குழாய்கள் காத்தன. வீராணத்தில் தண்ணீர் சொட்டுக் கூட இல்லை என்று பொதுப் பணித்துறை அமைச்சரே ஒப்புக் கொண்டிருக்கிறார். அண்டைப் பகுதியில் ஆழ்துளைக் கிணறிட்டு நீர் உறிஞ்சி, வீராணம் திட்டத்துக்கென அமைத்த குழாய்கள் மூலம் தண்ணீர் கிடைக்கச் செய்து சமாளிக்கிறார்கள். இதற்கும் அப்பகுதி விவசாயிகளிடையே பலத்த எதிர்ப்பு உண்டு.

● **ஜோ. பன்னீர்செல்வம், சென்னை - 12**

***? முதல் முறை தேறி மதிப்பெண் பெற்றவர்கள், அதே பாடங்களை இம்ப்ரூவ்மெண்ட் எழுதி அதிக மதிப்பெண் பெற்றவர்கள் - இவ்விரு பிரிவினரையும் மருத்துவப் படிப்புத் தேர்வில் சமமாக பாவிப்பது நியாயமா?***

! சரியில்லைதான். ஆனால் 'இம்ப்ரூவ்மெண்ட்' எழுதும் வாய்ப்பு வழங்கப்படுகிறவரை, அந்த மதிப்பெண்களுக்கும் உரிய மதிப்பு கொடுத்துத்தானே ஆக வேண்டும்!

● **சி. கார்த்திகேயன், சாத்தூர்**

***? முதல்வராக இல்லாவிட்டாலும் சந்திரபாபு நாயுடுவே சட்ட சபை செல்கிறார். ஆனால், தென்னகத்தின் மூத்த அரசியல்வாதியான கலைஞர் தமிழக சட்டசபைக்குச் செல்ல மறுக்கிறாரே...?***

! அங்கு பாபுவுக்குக் கிடைக்கும் மரியாதை இங்கு கலைஞருக்குக் கிடைக்காதே.

● **பி.எஸ்.வளர்மதி, சிந்துநகர்**

***? இரு தடவை ஜெ. அரசு எப்படி இருக்கும் என்று பார்த்துவிட்ட மக்கள், இனி அரசே வேண்டாம் என்ற முடிவுக்கு வந்திருப்பார்கள் அல்லவா...?***

! அப்படி வந்திருப்பார்கள் என்ற நம்பிக்கையில் எதிர்கட்சிகள் தேர்தலுக்கு அவசரப்படுவதாகத் தோன்றுகிறது. நாடாளுமன்றத் தேர்தலில் அவை பெற்ற வெற்றியின் அடிப்படையில் அவசரம் காட்டுவது அசட்டுத்தனம். தப்பித்தவறி 365 பிரயோகிக்கப்பட்டால், ஜெ. பக்கம்தான் அனுதாப அலை அடிக்கும்.

● **லலிதா செல்லப்பா, சென்னை - 64**

***? நடிகர்கள் நடிகைகளின் சொந்த வாழ்க்கை குறித்து பக்கம் பக்கமாக எழுதும் பத்திரிகைகள் பற்றி..?***

! முன்பு நல்ல விஷயங்களை எழுதினார்கள்; பிறகு சொந்த விஷயங்களை எழுதினார்கள்;

இப்போது கவர்ச்சிப் (ஆபாச) படங்கள் வெளியிட ஒரு வாய்ப்பாகக் கருதுகிறார்கள்.

● **எம். பாஸ்கர், திண்டுக்கல்**

***? இந்தியாவில் மதமாற்றத்துக்கு இருபத்தைந்தாயிரம் கோடி நிதி அமெரிக்கா ஒதுக்கியுள்ளது என்று ராம கோபாலன் கூறியுள்ளாரே..!***

! இங்கே ஹிந்து முன்னணியினர், துறவிகளையும், மடாதிபதிகளையும் குக்கிராமங்களுக்கு அழைத்துப் போய், வீடுகளில் சம்சாரிகளைச் சந்தித்து 'மதம் மாறுவதில்லை' என்று வாக்குறுதி பெறுகிறார்கள். இதன் மூலம் பிரச்னையை வெல்ல முடியாது. அடிப்படைத் தேவைகள், வேலை வாய்ப்பு பெருக்கத்தின் மூலம் பூர்த்தி செய்யப்பட்டால்தான் வறுமை ஒழியும். ஆசை காட்டி மதம் மாற்றும் முயற்சிகள் ஒழிந்து போகும்.

● **ஸ்ரீதர்ஷினி, பாபநாசம்.** ❒

***? பான்பராக், பான் மசாலாவுக்கான தடையை உச்சநீதிமன்றம் விலக்கிவிட்டதே?***

! 'பான் மசாலாவின் நச்சுத்தன்மையைச் சுட்டிக் காட்டித் தடை கோரும் உரிமை மாநில அரசுகளுக்குக் கிடையாது' என்கிற சட்டச்சிக்கலின் அடிப்படையில் தான் மனு தள்ளுபடியாகியிருக்கிறதேயொழிய, நச்சுத்தன்மை கிடையாது என்பதால் அல்ல.

● **எஸ்.எம்.ஷாஜஹான், திருநெல்வேலி - 5**

***? சமீபத்திய சாதனைக்குச் சொந்தக்காரராக யாரைச் சொல்வீர்கள்...?***

! சிம்லாவில் ஏற்பட்ட வெள்ளத்தின் விளைவான நிலச்சரிவில் சிக்கிக் கொண்ட பார்வதி மின் நிலைய ஊழியர்கள் இருபது பேரைக் காப்பாற்றிய பெயரறியா வீரர்களைத் தான்!



● 'வீராண'வெற்றி!

● **மு. சுந்தரம், சிலமலை**

***? "எல்லா சாமியார்களும் காமெடியன்கள்தான். அதிலும் குட்டிச்சாமி பெரிய காமெடியன்" என்கிறாரே சத்தியராஜ்.***

! இந்த மாதிரி காமெடி டிராக் எழுதும் சத்தியராஜ், நகைச்சுவை உணர்வு தமக்குத் சத்தியமாக இல்லை என்பதை நிரூபிக்கிறார்.

● **ஆர். நாகராஜன், சென்னை - 117**

***? எத்தனை ஆண்டுகள் ஆனால் என்ன, ஷிபுஸோரன் சம்பந்தப்பட்ட கொலை வழக்கு என்பது ஊழல் குற்றச்சாட்டைவிட தீவிரமானதல்லவா...? இதை தராசு 'அரதப் பழசான வழக்கு' என்று சாதாரணமாகக் குறிப்பிடலாமா...?***

! வழக்கின் முக்கியத்துவத்தைக் குறைத்து மதிப்பிடவில்லை; ஆனால் இத்தனை நாள் தூங்கிவிட்டு, ஸோரன் அமைச்சரானதுமே அதை முடுக்கி விடுவதில், அரசியல் உள் நோக்கம் உள்ளது என்றுதான் சொன்னேன்.

● **வசந்தி வள்ளுவன், மதுரை - 10**

***? 'மகிழ்ச்சி, மலர்ச்சி, துயரம், துக்கம்' போன்ற வார்த்தைகளை உச்சரிக்கும்போதோ அல்லது எழுதும்போதோ, அவற்றின் உணர்ச்சி பாவங்கள் தமிழ் மொழியில் வெளிப்படுவதுபோல் பிற மொழிகளில் இல்லைதானே...?***

! ஏன் இல்லை? அனேக மொழிகளில் ஒலியாலும் பொருளுணர்த்தும் நயமான சொற்கள் உண்டு. ஆங்கிலத்தில் டென்னிஸனின் 'தி ப்ரூக்' (சிற்றோடை) கவிதையைத் தேடிப் பிடியுங்கள். வடமொழியில் மதுராஷ்டகம், விஷ்ணு சஹஸ்ர நாமம் இன்னும் ஜெய தேவரின் அஷ்டபதி என்று பலவற்றில், இந்த பொருள் பொதிந்த ஒலி நயங்கள் உண்டு.

● **இரா.சக்கரபாணி, மதுரை - 7**

***? தமிழ்நாட்டில் சட்டம் ஒழுங்கு சீரழியவில்லை என்று சட்ட சபையில் முதல்வர் கூறியுள்ளாரே...?***

! வேளச்சேரி போலீஸ் குவார்ட்டர்ஸில் வந்து கொள்ளையடிச்சவங்ககூட, அம்மா சொல்றது சரிதான்னு சொல்லிட்டுப் போனாங்களே! தெரியாது!

❒ ரூ. 100/- பரிசு பெறுபவர்:

**ஸ்ரீ தர்ஷினி,**
**33/3, பெருமாள் கோயில் சன்னிதி தெரு, பாபநாசம்,**
**தஞ்சை மாவட்டம்.**

* ரூ.50/- பரிசு பெறுபவர்:

**எஸ். சுவாமிநாதன்,**
**45, முதல் தெரு,**
**மன்னார்குடி - 614 001**



# SEMAS

## Academy of Excellence

## Japanese - Abacus & Mental Arithmetic




ISO 9001:2000 Certified



» Soroban Kids



» Soroban Flash



» Mastering Soroban



» Senior Soroban




ISO 9001:2000 Certified

**Join in SEMAS**
National Competition
on 22nd Aug. 2004 at Chennai



This year Fly to **Taiwan**
International Competition
on 25th Dec. 2004 at Taiwan
Organizing by Taiwan Chamber of Commerce

**BEWARE : SEMAS only offering Japanese Abacus & Mental Arithmetic System in India** - This is a legal information for PUBLIC awareness

**SEMAS solicits GLOBAL FRANCHISEE**

Corporate Office : #545, 14th Street, 4th Sector, K.K.Nagar, Chennai - 78, Ph. 91-44-247 22505/22550, www.semasindia.com, info@semasindia.com





# S.V.முதியோர் இல்லம்



## Charitable Trust (Reg)

இங்கு முதியோர்களுக்கு இலவச மருத்துவமனை, ஆரம்பிக்கப்பட்டு அனைவரையும் தனித்தனியாக பரிசோதனை செய்து, உடல் ஆரோக்கியம் கண்காணிக்கப்படுகிறது. படுத்த படுக்கையில் உள்ள முதியோர்கள் அனைவரையும் 24 மணி நேரமும் டாக்டர்களும், நர்சுகளும், உதவியாளர்களும் கவனித்துக் கொள்கிறார்கள். எல்லா எமர்ஜென்சி உபகரணங்கள் உள்ளன.

மனச்சிதைவு, மனவளர்ச்சி குன்றிய முதியோர்கள் மற்றும் எல்லா வயது ஆண்/பெண் நோயாளிகளுக்கென்று தனி இல்லம் மருத்துவ வசதியுடன் செயல்பட்டு வருகிறது.

முதிய பருவத்தில் மறதி நோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளுக்கு (ஆண், பெண் இருபாலரும்) சிறப்பு பாதுகாப்பு வசதியுடன் முற்றிலும் இலவச மருத்துவ வசதியுடன் தனித் தனி இல்லம் செயல்படுகிறது.

உங்கள் பிறந்த நாள் மற்றும் சிறப்பு நாட்களில் நீங்கள் அளிக்கும் ஒரு சிறிய நன்கொடைத் தொகை எங்கள் இல்லத்தில் உள்ள முதியோர்கள் மருத்துவ வசதிக்கு பயன்படுத்துவதுடன், அவர்கள் வாழ்க்கையை காப்பாற்றிய நல்லாசி உங்கள் குடும்பத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய பரிசாகவும் அமையும்.

*முதியோர் சேவை பெரியது!*

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு (80G, Income Tax Excemption) உண்டு

## S.V. HOME FOR AGED

Charitable Trust (Reg)

# 50 / 88, Panchali Amman Kovil Street, Arumbakkam, Chennai - 600 106.
(Near Panchali Amman Temple) Tel. Off: 044 - 2475 5700, 2475 6700, 2475 7777, 2475 5799
e-mail:svhome@vsnl.net



பகீர் ரிப்போர்ட்!

# சுரண்டப்படும்

தஞ்சை - சென்னை நெடுஞ்சாலையின் கடலூர் மாவட்டப் பகுதி. பரணாற்றில் தொடங்கி கெடிலம் வரையிலான முப்பது கி.மீ. தூரத்துக்குள், வரிசையாக ஐம்பத்தைந்து இடங்களில் ஆழ்குழாய்க் கிணறுகள் அமைக்கப்பட்டுள்ளன.

ஏனிந்த ஆழ்குழாய்க் கிணறுகள்? எல்லாம் சென்னை மாநகருக்குக் குடிநீர் கொண்டு போகத்தான். அப்படியானால், தமிழக அரசு சுமார் எழுநூறு கோடி ரூபாய்த் திட்டத்தில் செயல்படுத்திய "புதிய வீராணம் திட்டம் என்பது என்ன வாயிற்று?" என்கிற கேள்வி இயல்பாக எழுகிறது.

கடந்த மூன்றாண்டுகளாக காவிரி - கொள்ளிடம் ஆறுகள் வழியே நீர் வரத்து பெரிதும் வற்றிப் போனது. மேலும் பருவ மழையும் பொய்த்துப் போனது. வீராணம் ஏரியில் போதிய அளவு தண்ணீர் இருப்பு இல்லை. சேத்தியாத் தோப்பு அணைக்கட்டுப் பகுதி விவசாய நிலமும், வீராணம் ஏரிப் பாசன விவசாய நிலமும், ஒரு போக சாகுபடிக்கே நிலை தடுமாறிக் கொண்டிருக்கின்றன. இந்நிலையில் புதிய வீராணத் திட்டப் பணிகள் முழுமை அடைந்து விட்ட போதிலும், வீராணம் ஏரியிலிருந்து சென்னைக்குக் குடிநீர் கொண்டு போவது என்பது, நடைமுறைக்கு இயலாத காரியமாகப் போயிற்று.



* எம். சேகர்

அதனால் தமிழக அரசு நாற்பத்தியெட்டு கோடி ரூபாய்ச் செலவிலான ஒரு திட்டத்தை உருவாக்கியது. (ஐம்பது கோடி ரூபாய்த் திட்டம் என்றால் மத்திய அரசின் சுற்றுப் புறச் சூழல் அமைச்சகத்தின் அனுமதி பெற வேண்டும் என்பதால்!). சென்னைப் பெருநகரக் குடிநீர் வழங்கல் வாரியம் மூலமாக அதனைச் செயல்படுத்தியுள்ளது தமிழக அரசு. இந்த ஆழ்குழாய்க் கிணறுகள் மூலமாக உறிஞ்சப்படும் கடலூர் மாவட்ட நிலத்தடி நீர், கொஞ்சிக்குப்பம் பகுதியில் அமைக்கப்பட்டுள்ள 'Break Pressure Tank' விருந்து கெடிலம் ஆற்றுப் பாலத்தின் மீதாகப் போடப்பட்டிருக்கும் ராட்சதக் குழாய் மூலமாக, சென்னை போரூர் ஏரிக்குக் கொண்டு செல்லப்படுகிறது. கடலூர் மாவட்டத்திலிருந்து தினசரி உறிஞ்சப்படும் ஏழரை கோடி லிட்டர் நிலத்தடி நீர், சென்னை மாநகர மக்களின் குடிநீருக்கென வழங்கப்பட்டு வருகிறது.

"சென்னை மாநகர மக்களின் குடிநீர்த் தேவையைப் பூர்த்தி செய்ய வேண்



* தஞ்சை - சென்னை நெடுஞ்சாலையில் பண்ருட்டி - வடலூர் இடையே வடக்குத்து கிராமப் பகுதியில் போடப்படுள்ள போர்வெல்.

# நிலத்தடி நீர்!



* சா.வை.வேல்முருகன், கோ. ஜெகன், எஸ்.அன்பழகன்



* த. மணிவாசகம்

டும் என்பதில், எவ்வித மாற்றுக் கருத்தும் கிடையாது. அதே சமயத்தில் கடலூர் மாவட்டக் கிராமப் பகுதி மக்களின் குடிநீர் ஆதாரங்களையும், விவசாய விளை நிலங்களின் நிலத்தடி நீர் இருப்பு நிலைகளையும், முற்றிலும் தகர்க்கிற இந்தச் செயல்பாட்டினை எவ்வாறு ஏற்றுக் கொள்ள முடியும்" என்று எதிர்க் கேள்வி கேட்கின்றனர் கடலூர் மாவட்டப் பொது மக்கள்.

வடலூர் பகுதி விவசாயி குப்புசாமி. இவருக்குப் பதினைந்து ஏக்கர் நஞ்சை. அதில் ஆறு ஏக்கர் கரும்பு. இந்த இரண்டு மாத காலமாக, கரும்புப் பயிருக்குப் போதிய தண்ணீர் பாய்ச்ச முடியாததால், இந்த ஆண்டு கரும்பு சாகுபடி அவ்வளவு தான் என்கிறார். அவர் இரண்டு இடங்களில் போர் போட்டுள்ளார். ஒன்று 225 அடி. இன்னொன்று 145 அடி. இரண்டும் இப்போது வீணாகிவிட்டன என்கிறார். காரணம், அவரது விவசாய நிலத்துக்கு வெகு அருகில் (சுமார் நானூறு அடி தூரத்துக்குள்) சென்னை குடிநீருக் கென தமிழக அரசின் ஆழ்குழாய்க் கிணறு ஒன்று அமைந்துள்ளதுதான் எனக் குறிப்பிடுகின்றார் அவர்.

நடுக்குப்பம் கிராமத்து விவசாயி ஆர். ஆதிகேசவன். பதினேழு ஏக்கர் நிலம். கரும்பு, முந்திரி. 525 அடி போர் குழாய் மூலம் கடந்த மூன்றாண்டுகளாக எண்பத்தைந்து அடி ஆழத்திலிருந்து கிடைத்து வந்த தண்ணீர், தற்போது இருநூற்றைம்பதடி ஆழத்துக்கும் கீழே போய் விட்டதாகச் சொல்கிறார்.

வடக்குத்து கிராம விவசாயி விஸ்வநாதன். ஆறு ஏக்கர் நிலம். அவரது 550 அடி போரில் 220 அடி ஆழத்திலிருந்து தண்ணீர் கிடைத்து வந்துள்ளது. இந்த இரண்டு மாதத்தில் அறுபதடி தண்ணீர் (நிலத்தடி நீர்) குறைந்து போய் 280 அடி ஆழத்துக்கும் கீழே போய் விட்டதாகக் கூறுகிறார் அவர்.

"இந்த நிலை நீடித்தால், நிலத்தடி நீரை நம்பியே விவசாயம் செய்து வரும் கடலூர் மாவட்ட விவசாயிகளின் விளை நிலங்கள் பாலைவனமாக மாறிவிடும் என்கிறார் வடக்குத்து ஊராட்சி மன்றத்

"அந்தப் படம் பாதிதானே எடுத்திருக்காங்க.... அதற்குள் எப்படிச் சொல்றே நிச்சயம் அது ஓடாதுன்னு!"

"எடுத்தவரைக்கும் திருட்டு வி.சி.டியில் பார்த்தேன்... சகிக்கலே!"

- உ. ராஜாஜி






தலைவர் (பா.ம.க.) கோ. ஜெகன்.

கடலூர் மாவட்ட ஆட்சித் தலைவர், "நிலத்தடி நீரின் மூன்றாவது அடுக்கிலிருந்து தண்ணீர் பெறப்படுவதால், கடலூர் மாவட்டப் பகுதிகளுக்கு நிலத்தடி நீர்ப் பற்றாக்குறை ஏற்பட வாய்ப்பில்லை!" எனக் கூறி வருகிறார். ஆனால், நாங்கள் புவியியல் வல்லுனர்களிடம் கேட்டுத் தெளிவு பெற்ற வகையில், மூன்றாவது அடுக்கிலிருந்து தண்ணீர் உறிஞ்சப்பட்டாலும், ஒன்றுடன் ஒன்றான இணைப்புகளின் மூலமாக அனைத்து அடுக்குகளிலும் நிலத்தடி நீர் இருப்பு குறையவே நேரும் எனத் தெரிந்து கொண்டோம். மேலும் ஒவ்வொரு நாளும் நிலத்தடி நீர் மட்டம் மிக மிக அதிகமாகக் குறைந்து வருவதே இதற்கு மறுக்க முடியாத சாட்சியாக விளங்குகிறது!" என்கிறார் அரங்கமங்கலம் ஊராட்சி மன்றத் தலைவர் (காங்.) சா.வை. வேல் முருகன்.

"கடற்கரையிலிருந்து பத்து கி.மீ. தூரத்தில் இருக்கும் திருவந்திபுரம் வரைக்குமாக நிலத்தடி நீர் இருப்புப் பகுதிகளில், கடல் நீர் வந்து கலந்து விட்டதாக மண் வள ஆய்வுகள் தெரிவித்துள்ளன. இதனால் எதிர்காலத்தில் கடலூர் மாவட்டப் பகுதியின் விளை நிலங்களின் நிலத்தடி நீர்ப் பிடிப்புப் பகுதிகளில், கடல் நீர் புகுந்து விடும் அபாயம் நேரும்." என்கிறார் கருங்குழி ஊராட்சி மன்றத் தலைவர் (இந்திய கம்யூ.) எஸ். அன்பழகன்.

"சென்னை மாநகர மக்களின் குடிநீர்த் தேவையைப் பூர்த்தி செய்வதற்காக, தமிழக அரசிடம் இதுவரை தெளிவான கொள்கை ஏதும் இல்லை. கடந்த பதினைந்து ஆண்டுகளாகவே மாறி மாறி வந்த மாநில அரசுகளிடம், கொள்கைக் குழப்பம் நிலவி வந்ததன் காரணமாகவே, இப்பிரச்னைக்கு நிரந்தரத் தீர்வு ஏற்படவில்லை. இப்பிரச்னைக்குத் தீர்வு காண்பதற்காக தொழில் நுட்ப வல்லுனர்கள், நீரியல் விஞ்ஞானிகள், சுற்றுப்புறச் சூழல் வல்லுனர்கள் ஆகியோரின் ஆலோசனைகளைப் பெற்று, நிரந்தரப் பலன் கிடைக்கக் கூடிய திட்டம் ஒன்றை உருவாக்கிச் செயல்பட வேண்டும்" எனச் சொல்கிறார் கடலூர் மாவட்ட ஏ.ஐ.டி.யு.சி.யின் மாவட்டச் செயலாளர் எம். சேகர்.

"இந்த ஆண்டு சென்னைக் குடிநீர்த் திட்டத்துக்கு மட்டும் என, மத்திய அரசு ஆயிரம் கோடி ரூபாய் நிதி ஒதுக்கித் தந்துள்ளது. இந்த சமயத்தில் அதனைப் பயன்படுத்தி, பெரிய அளவில் திட்டமிட்டு கடல் நீரைக் குடிநீராக்கும் செயல்பாட்டில் தமிழக அரசு தீவிர முனைப்புடன் இறங்கிச் செயல்பட முன் வர வேண்டும்" என்கிறார் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் கடலூர் மாவட்டச் செயலாளர் த. மணிவாசகம்.

கட்டுரை, படங்கள் :
**இருள் நீக்கியான்**



# வாழ்க வளமுடன்

# கல்கி



## லைஃப் ஸ்டைல் மலர்




இன்னும்
ஒரு சில பிரதிகளே
உள்ளன.
உங்கள் பிரதிக்கு
முந்தினால்
ஏமாற்றத்தைத்
தவிர்க்கலாம்.

விலை
ரூ. 40/-
மட்டும்

கூரியர் மூலம் பெற ரூ. 60/- அனுப்பவும்.
உள்ளூர் ஏஜெண்டிடமும் கிடைக்கும்.

---

சர்குலேஷன் மானேஜர், கல்கி,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097




**போஸ்ட்கார்ட் கதை**

“நாட்டுக் கம்பு விதை அரைக் கிலோ தாங்க.”

“ஒட்டுக் கம்பு விதை வாங்கிட்டுப் போங்க, நல்லா இருக்கும்.”

கடைக்காரர் சொன்னதை நம்ப மறுத்தார் ஆறுமுகம்.

“இல்லீங்க. நாட்டு விதையே குடுங்க.”

“இப்படியே இருந்தா, விவசாயம் எப்படி முன்னேறும்? இது புதுசுங்க. கலப்பு ரகம், மகசூல் நெறையக் கெடைக்கும்.”

“கலப்பெல்லாம் எனக்குச் சரிப்பட்டு வராதுங்க.”

“கலப்புனால நோய் வர்றது கொறையும். வெளைச்சல் அதிகமா இருக்கும். இன்னும் பழைய நெனைப்புலேயே இருந்தா எப்படி? மாட்டுல கலப்பு மாடு தேடிப் பிடிச்சு வாங்குறீங்கள்ள!”

“ஒட்டுக் கம்பு எனக்கு வேணாமுங்க. நாட்டு விதையே குடுங்க.”

“சரி, உங்க இஷ்டம்.”

தெ. சுந்தரமகாலிங்கம்

மறு வாரம் கடைக்காரரின் மகள் சுந்தரி, வேற்று இளைஞனொருவனுடன் ஓடிப் போய்த் திருமணம் செய்து கொண்டு சென்னையில் இருப்பதாகத் தகவல் வந்தது. அவமானப்பட்டு ரெண்டு மாசம் கடையைத் திறக்காமலிருந்தவர், மனைவியும் மற்ற உறவினர்களும் வற்புறுத்தியதால், ஒரு நாள் மீண்டும் கடையைத் திறந்தார்.

மகள் நினைவு வந்ததும் கண் கலங்கினார். ஆனால் அவமான உணர்வு அதையும் மீறி நின்றது.

“ஐயா, நீங்க சொன்னதக் கேக்காமப் போனது தப்பாப் போச்சு. ஒட்டுக் கம்புதான் நல்லாருக்கும்னு எம் பொண்டாட்டி சொல்லிட்டா. கலப்புல இருக்குற லாபம் பழசுல இல்லியாம். அடுத்தாப்புல ஒட்டுக் கம்புதான் வாங்கணும். இப்ப கால் லிட்டர் பாலிடால் குடுங்க.”

ஆறுமுகம் சொன்னதைக் காதில் வாங்காமல், விட்டத்தையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தார் கடைக்காரர்!

"தொடர்ந்து சினிமாவுல வெற்றிப் படங்கள்ல நடிச்ச ஒரு பிரமாதமான உணர்வைத் தந்திருக்கு, இந்த கேம் ஷோ. ஐ ஃபீல் வெரி கிரேட்"

- குஷ்பு உணர்ச்சிவசப்பட்டுப் பாராட்டிய அந்த நிகழ்ச்சி, ஜெயா டீ.வி.யில் வெற்றிகரமாக ஒளிபரப்பாகிவரும் ஆரோக்யாவின் ஜாக்பாட்!

பட்டாசுகள் வெடிக்க, ஜிகினாத் தூள் பறக்க, காகிதத் திரையைக் கிழித்துக் கொண்டு பலத்த கர கோஷத்துக்கிடையே, நூறாவது நிகழ்ச்சியைக் கொண்டாடிய சந்தோஷத்தில் இருந்தார் குஷ்பு.



"இரண்டு வருஷமா நடத்திக்கிட்டு இருக்கேன். வாரா வாரம் மெருகேறிக்கிட்டே போகுது. பொது அறிவு, சேலஞ்ச் ரவுண்ட்ன்னு இது ஓர் இன்ஃபோடெயின்மெண்ட், அறிவு சார் பொழுதுபோக்கு நிகழ்ச்சிங்கிறதனாலேதான் இப்படி ஒரு வரவேற்புன்னு நினைக்கிறேன். அப்புறம் என்னோட தமிங்கிலிஷ்! அதுதான் எல்லோரையும் பிடிச்சு இழுத்து உட்கார வைக்குதுன்னு சொல்றாங்க" என்று குதூகலித்தார்.

# ஜாக்பாட் 100!

அதைவிட முக்கியமான அட்ராக்ஷன்... விதவிதமான ஜாக்பாட் ஸாரி... ஜாக்கெட்டுகளாச்சே!

அதை மறந்துட்டீங்களே!

ஜாக்பாட் நிகழ்ச்சியில் பங்கேற்பதற்காக விண்ணப்பித்து, சுமார் முப்பதாயிரம் பேர் காத்திருப்பவர்கள் பட்டியலில் இருக்கிறார்களாம்... (இதுவும் குஷ்பு சொன்ன தகவல்தான்!)

- ஆதர்ஷ்

# புக்போஸ்ட்




**பரிபாடல் - உரை :**
**பெ.சுப்பிரமணியன், கு.வெ.பாலசுப்பிரமணியன், அ.தட்சிணாமூர்த்தி**

வேதங்களும், உபநிடதங்களும் கூறிய பக்தி நெறியை, ஆன்மிகக் கருவூலத்தை, வழிபாடுகளை, அதனால் வளம் பெற்ற தமிழர் வாழ்வை, அருள் செய்த கடவுளர்களைப் பற்றிப் பாடிய நூலுக்கு எழுதப் பட்ட உரை. இதைப் புதுப்பித்துப் பதிப்பித்தலே பெரும் தமிழ்ப் பணி. அறிஞர்க்கும், ஆய்வாளர்க்கும், மாணவர்க்கும் பயன் தரும் பொக்கிஷம்.

**நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், 41-பி, சிட்கோ இண்ட். எஸ்டேட், அம்பத்தூர், சென்னை - 600 098. (சங்க இலக்கியத் தொகுப்பு மொத்தம்) விலை ரூ.3000**

**சூப்பர் மார்க்கெட் - வெண்ணிற ஆடை மூர்த்தி**

ஒரு திரைப்படம், ஒரு சீரியல், இரண்டு காமெடி ஷோ, ஒரு நேருக்கு நேர், செய்திகள் அத்தனையையும் பார்த்த நிறைவை ஒரு புத்தகம் தர முடியுமா? முடிந்திருக்கிறது. நம் நாட்டு, அயல் நாட்டுப் பழமொழிகள், செய்தித் துணுக்குகள், சினிமா, நகைச்சுவை என்று கதம்பமான விஷயங்களைத் தொகுத்த மெகா சீரியல்.

**கண்ணதாசன் பதிப்பகம், 23, கண்ணதாசன் சாலை, தி.நகர், சென்னை - 600 017. விலை ரூ.75**













**பாரதி கண்ட கடவுளர் - எம்.எஸ். சுப்பிரமணியம்**

'ஞானம்' போதிமரத்தடியில் தான் கிடைக்க வேண்டுமென்பதில்லை. ஒரு குட்டிச்சுவர், சூரியன், சூரியனைப் பிரதிபலிக்கும் கிணறு - மூன்றையும் காட்டி 'அறிதி கொலோ!' என்று கேட்ட கேள்வியில், குள்ளச் சாமியிடம் ஞானம் பெற்றதாகக் கூறுகிறார் பாரதி. ஞானத்தின் ஒளியில் கண்ணனையும், காளியையும், மட்டுமின்றி, திருமகள், கலைமகள், தமிழ்க் குமரன் என அத்தனை கடவுளரையும் கவி மழையில் திருமஞ்சன மாட்டியிருக்கிறார். கடவுளரைக் கவிதைகளில் வடித்த தொகுப்பு.

**அருண் பதிப்பகம், 8பி, அம்பேத்கர் சாலை, கோடம்பாக்கம், சென்னை - 600 024. விலை ரூ.18**

**பாஷோவின் கரும் பலகை - வஸந்த் செந்தில்**

'பாஷோ'வின் கரும்பலகையில் பணம், காதல், பிரச்னைகளை, மனிதர்களைக் கையாளல், வெற்றிக்கான வழிகள் என்று நம்மை உயர்த்திக் கொள்ளக் கூடிய அனைத்தும் சுவாரசியமான சம்பவங்களாகத் தொகுக்கப்பட்டுள்ளன.

**சந்தியா பதிப்பகம், 51, 53வது தெரு, அசோக் நகர், சென்னை - 600 083. விலை ரூ.20**

**வள்ளுவம் - வாலி**

குறளுக்கு உரையெழுதியவர்கள் ஏராளம் - முப்பாலில் முதற்பாலுக்கு, இலக்கியத் தமிழின் அப்பாலும், இப்பாலும் உள்ளவர்க்கும் உறைக்கும்படி, உரைக் கவிதையில் எழுதப்பட்ட உரை. உரை நடையில் செய்த உரைக்கும், கவி நடையில் வரைந்த உரைக்கும் வேறுபாடு, சுவையில் தெரிகிறது.

**வானதி பதிப்பகம், 23, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை - 600 017. விலை ரூ.150**

**- விஷ்வக்**

## சிறுநீரகம் காப்போம்

# அறுவை சிகிச்சை தேவையில்லை!



## சிறுநீரகக் கற்களா? கவலை வேண்டாம்!



* பக்க விளைவுகள் இல்லாத ஆயுர்வேத மூலிகை மருந்துகள் மூலம் குணமடையச் செய்வதே இதற்கு சரியான தீர்வு.
* அடிக்கடி சிறுநீரகக் கற்கள் உருவாகி, அறுவை சிகிச்சையோ அல்லது லேசர் முறையோ செய்த பின்பு மீண்டும் சிறுநீரகக் கற்கள் உருவாகாமல் தடுக்க எங்கள் மருந்தே சிறந்தது.



* மருந்துகள் மூலமும், நாங்கள் கொடுக்கும் உணவு ஆலோசனையின் மூலமும் சிறுநீரகக் கற்கள் மீண்டும் வராமல் நிரந்தரத் தீர்வு அளிக்கிறோம்.
* கற்கள் சிறுநீரகத்திலோ, சிறுநீர் குழலிலோ, சிறுநீர் பையிலோ இருந்தாலும் அறுவை சிகிச்சையின்றி எங்கள் மருந்துகளை முறையாக எடுத்துக் கொள்வதன் மூலம் குணமளிக்கிறோம்.
* சிறுநீரகக் கற்களால் ஏற்படும் வலி, வாந்தி, சிறுநீரக எரிச்சல் போன்ற தொந்தரவுகளை மருந்து உண்ட ஒரு சில நாட்களுக்குள் முழுவதுமாக குணமளிக்கச் செய்கிறோம்.

## குளோபல் கிட்னி ஸ்டோன் சென்டர்,

**Dr. K. ஜெயலெட்சுமி B.S.M.S, MD**



No. 19 - நவநீதம்மாள் தெரு,
சாலிகிராமம், சென்னை - 600 093
ஷோபா கல்யாண மண்டபம் அருகில்,

**Ph: (044) - 23763461 Cell: 98402 - 44471**

ஞாயிற்றுக்கிழமைகளில் இலவச ஆலோசனை உண்டு.

# கண்ணாடிக் கல்வெட்டுகள் 11

இருட்டில் சுருங்கியவர்களுக்குத்தான்
ஒளியின் உயர்வு தெரியும்!

நீரில் மூழ்கியவனுக்குத்தான்
காற்றின் தேவை தெரியும்!

நிலத்தில் உழுபவருக்கே
மழையின் சக்தி தெரியும்!
அழுதே அயர்ந்தவனுக்குத்தான்
புன்னகையின் புனிதம் தெரியும்!

அதே போல்
அடிமைப்பட்டுக் கிடந்தவனுக்குத்தான்
சுதந்திரத்தின் தாகம் தெரியும்!

சுருண்டு கிடக்கும் ஒரு
புழுவிற்குக்கூட
சுதந்திரம் அவசியம்!

பாளையங்கோட்டைச் சிறையுள்
காட்டுப் பகுதியில் மரவெட்டிகளாய்
புலிகுத்தியானும் - நண்பர்களும்
புகுந்தனர்!

புலிகுத்தியான் தன்
சகாக்களோடு மரம் பிளந்தான்.

சூரியன்
சுட ஆரம்பிக்கும் நேரம் முதல்
சூரியன்
வீழத் துவங்கும் நேரம் வரை
மரம் வெட்டினார்கள்!

ஒரு சில நாட்கள்
மழைபட்ட சர்க்கரையாய்
கரைந்து மறைந்த பின்
முகம் தொலைந்து முகத்தில்

## சிறைக்குள் சிறுகதை -3

சுதந்திரம் என்பது
மரியாதையான பொன்னாடையல்ல
மானமான ஆடை!

அடிமைப்படுத்தப்பட்ட
சமூகத்தில் இருந்து மட்டும் நிறைய
விஞ்ஞானிகளும் - புரட்சியாளர்களும்
அறிஞர்களும் முளைக்கக் காரணம்
இந்த சுதந்திர வேட்கைதான்!

பாளையங் கோட்டையை
பாதங்களால் பிளந்து
பேனர்மேன் துரையையும்
மார்ஸ் துரையையும்
துவம்சம் செய்யும் ஆவேசம் அவனுள்.

முடி முளைத்து - விழியில்
ஒளி குறைந்து ஓர் உருவம்!

"அய்யா துரையய்யா!"
புலிகுத்தியான் ஸ்தம்பித்தான்
இளைஞர்கள் வெம்பினார்கள்!

ஊமைத்துரைக்குள் ஒரு சில
உயிர் விதைகள் விழுந்தன...
மீண்டும் இந்த மரம்
போராட்டக் காற்றை பந்தாடுமென்ற
நம்பிக்கை வழிந்தது!

"இதோ பாருங்கள்

பா.விஜய்

நான் இங்கிருந்து எப்படியாவது
மருது பாண்டியரைச் சேர வேண்டும்!
அண்ணன் கட்டபொம்மராசாவை
தூக்கிலிட்டுக் கொன்ற வெள்ளையரின்
ரத்தம் வேண்டும்!

தாய்மண் மீண்டும் சிறகு பூத்து
கொடியேந்த வேண்டும்!
நம் மண்ணில் பிறக்கும்
ஒவ்வொரு சிசுவும்
சுதந்திரக் குடிமகனாய் வாழ வேண்டும்!

அடுத்த தலைமுறை
பூக்காட்டை நோக்கி நடைபோட
இந்தத் தலைமுறை
இடுகாட்டை நோக்கி
நடந்தால் தான் முடியும்''



ஊமைத்துரையின்
உலர்ந்த உதடுகளில் இருந்து
உதிர்ந்த வார்த்தைகள்
புலிகுத்தியான் நெஞ்சில்
ஈட்டியாய் உரசின!

இந்த நொடியே
இந்தச் சிறையை தகர்த்தெடுத்து
ஊமைத்துரையை மீட்கலாம்!
ஆனால் அது
உயிருடனாக இருக்க முடியாது!
தாக்கி ஜெயிப்பதைவிட
தந்திரத்தால் ஜெயிப்பதை சிறந்ததாய்
உணர்ந்தான் புலிகுத்தியான்!

**நா**ட்கள் நகர்ந்தன!
நாடகங்கள் தொடர்ந்தன!
நட்பு என்பது
உறவுகளைவிட உயர்ந்ததாக உள்ளது.
உலகில் இன்றளவும் யாரும்
உயிர்ச் சித்தப்பா
உயிர் அண்ணன்
உயிர்ப்பங்காளி என்று
உரைப்பதில்லை!
உயிர்த்தோழன்
உயிர்த் தோழி என்று
உயிரை நட்போடுதான் இணைக்கிறோம்!

புலிகுத்தியான் தன் வாழ்க்கையை
ஊமைத்துரை தப்புவதிலேயே
பூரணமடைவதாய் உறுதி பூண்டான்!

இடை இடையே
ஊமைத்துரை மீது பற்பல
தேசக்குற்றங்கள் சுமத்தப்பட்டு
திருச்சிராப்பள்ளி நீதிமன்றத்துக்கு
அலைக்கழிக்கப்பட்டான்.

விறகு பிளக்கும் ஓசைகளின்
இடைவெளிகளில்
கிசுகிசுத்துக் கொள்வதும்
மரங்களின் அடர்ந்த மறைவில்
நட்புரையாடிக் கொள்வதுமாய்
காலம் கசிந்தது!

ஒவ்வொரு நாளிலும்
நான்கு தலைகளை உஷாராக
எண்ணி எண்ணித்தான்
உள்ளேயும் வெளியேயும் அனுப்பினர்
வெள்ளைக்காரச் சிப்பாய்கள்!

ஒரு நாள்
இரு நாள்
ஒரு மாதம்
இரு மாதம் என கடந்து
ஓராண்டுக் காலம் முடிந்தது!
ஆங்கிலேயரின் அசைக்க முடியாத
நம்பிக்கையைப் பெற...
அவர்கள் அசந்து போகும் நேரம்
எதுவென்று புரிய...
புலிகுத்தியானும் சகாக்களும்
ஓராண்டுக் காலம் முழுமையான
விறகுவெட்டிகளாகவே வாழ்ந்தனர்!

**அ**ன்று!
வானம் கறுப்பாய் விடிந்தது
ஊமைத்துரைக்கு
பூமியே சிவப்பாய் உறைந்தது
புலிகுத்தியானுக்கு.

(வருவான்)

# சோ எழுதிய மஹாபாரதம் பேசுகிறது

– இரண்டு பாகங்கள்

ரூ. 500/–

## 'சோ'வின் பிற நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. | உண்மையே உன் விலை என்ன | 37.00 |
| 2. | கூவம் நதிக் கரையினிலே - பாகம் - 2 | 45.00 |
| 3. | கூவம் நதிக் கரையினிலே பாகம் - 3 | 27.00 |
| 4. | துக்ளக் படமெடுக்கிறார் | 30.00 |
| 5. | சம்பவாமி யுகே! யுகே! | 30.00 |
| 6. | சாதல் இல்லையேல் காதல் | 41.00 |
| 7. | வெறுக்கத்தக்கதா பிராமணீயம் | 30.00 |
| 8. | எங்கே பிராமணன்? | 85.00 |
| 9. | துக்ளக் கேள்வி - பதில் - I | 24.00 |
| 10. | துக்ளக் கேள்வி - பதில் - II | 45.00 |
| 11. | சாத்திரம் சொன்னதில்லை | 30.00 |
| 12. | அதிகப்பிரசங்கம் | 32.00 |
| 13. | துக்ளக் தலையங்கங்கள் | 25.00 |
| 14. | யாருக்கும் வெட்கமில்லை | 28.00 |
| 15. | இன்பக் கனா ஒன்று கண்டேன் | 14.00 |
| 16. | இந்தியா எங்கே போகிறது? | 12.00 |
| 17. | மனம் ஒரு குரங்கு | 30.00 |
| 18. | இந்து தர்மம் | 50.00 |
| 19. | காமராஜை சந்தித்தேன் | 33.00 |

## கவிஞர் வாலி இயற்றிய

# புலனடக்கத்தின் பொன்விழா

ஜயேந்திரரின் ஜன்ம சரிதம் - ஜனனம் முதல் ஜகத்குரு வரை

விசிஷ்டாத்வைதியின் பார்வையில்

# அத்வைத மகான்

(ஜெயகாந்தன் முன்னுரையுடன் மிக மிக உயர்தரமான தயாரிப்பு)

ரூ. 100/- மட்டும்

## உலக இலக்கிய வரிசை

தமிழில்: சிவன்

| | | | |
|---|---|---|---|
| 1. | சித்தார்த்தன் | - ஹெர்மன் ஹெஸ்ஸே | 35.00 |
| 2. | ஏழை படும் பாடு | - விக்டர் ஹியூகோ | 40.00 |
| 3. | ராபின் ஹுட் | - மேத்யூ ஹுக் | 45.00 |
| 4. | கரமசோவ் சகோதரர்கள் | - தாஸ்தயெவ்ஸ்கி | 35.00 |
| 5. | ராபின்ஸன் குடும்பம் | - யோஹன் டேவிட் வைஸ் | 32.00 |
| 6. | இலியட் | - ஹோமர் | 45.00 |
| 7. | ஒடிஸி | - ஹோமர் | 30.00 |
| 8. | பிரபு மான்டி கிறிஸ்டோ | - அலெக்ஸாண்டர் டூமாஸ் | 37.00 |
| 9. | டாம்சாயர் | - மார்க் ட்வைன் | 37.00 |
| 10. | அதிசய உலகில் ஆலிஸ் | - கரோல் லூயிஸ் | 45.00 |
| 11. | ராபின்ஸன் குரூசோ | - டேனியல் டிஃபோ | 48.00 |
| 12. | மோபிடிக் | - ஹெர்மன் மெல்வில் | 45.00 |
| 13. | கலிவரின் பயணங்கள் | - ஜோனாதன் ஸ்விஃப்ட் | 40.00 |
| 14. | அன்னாகரேனினா | - லியோ டால்ஸ்டாய் | 35.00 |
| 15. | போரும் அமைதியும் | - லியோ டால்ஸ்டாய் | 32.00 |
| 16. | புதையல் தீவு | - ஆர்.எல். ஸ்டீவன்ஸன் | 42.00 |
| 17. | இறந்த உலகம் | - ஆர்த்தர் கானன்டாயல் | 32.00 |
| 18. | பிராங்கென்ஸ்டைன் | - மேரி ஷெல்லி | 40.00 |
| 19. | ஹெய்டி | - ஜோஹன்னா ஸ்பைரி | 30.00 |

## பி. ஸ்ரீ. ஆச்சார்யா எழுதிய

1. ஆழ்வார்கள் வரலாறு (8 தொகுதிகள்) ரூ. 306.00
2. அறுபடை வீடுகள் (6 தொகுதிகள்) ரூ. 210.00
3. திவ்யப் பிரபந்த ஸாரம் ரூ. 60.00

மற்றும்

| | | |
|---|---|---|
| 4. | அருணகிரிநாதரின் வாழ்க்கை வரலாறு | ரூ. 30.00 |
| 5. | கந்த புராணக் கதைகள் | ரூ. 40.00 |
| 6. | நாரதர் கதை | ரூ. 25.00 |
| 7. | நவராத்திரியின் கதைகள் | ரூ. 23.00 |
| 8. | ராஜரிஷி விசுவாமித்திரர் | ரூ. 30.00 |
| 9. | தசாவதாரக் கதைகள் | ரூ. 32.00 |

1. மஹரிஷிகள் வரலாறு – A.V. சுகவனேசுவரன் – 65.00
2. வேதம் வணங்கும் தெய்வங்கள் – 62.00
3. இந்துமத நன்னெறிகளும் சம்பிரதாயங்களும் – கிருஷ்ணசாமி – 50.00

அன்றாட வாழ்வில் பகவத் கீதையின் பயன்பாட்டை விளக்குவது

**கண்ணன் சொற்படி வாழ்வதெப்படி? ரூ. 50/–**

பேராசிரியர் 'பிலானி' வி. கிருஷ்ணமூர்த்தி



**அல்லயன்ஸ் கம்பெனி**

(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)
244, ராமகிருஷ்ணா மடம் சாலை, மயிலாப்பூர்
சென்னை – 600 004. ✆: 24941314



## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்வான கதை.



கொஞ்ச நாளாகத்தான் நீலாவதிக்கு அந்தக் குரல் கேட்க ஆரம்பித்திருக்கிறது. தெள்ளத் தெளிவான குரல். மென்மையாக, இதமாக, மனதை வருடும் குரல். ஆனால் உருவம் மட்டும் தெரியாது. ஓரடி தூரத்தில் இருந்து சாதாரணமாய்ப் பேசினால் எப்படிக் கேட்குமோ, அதே மாதிரி ஒலி அளவு. இலேசான பரிகாசம் இழையோடும் ஆண் குரல். வாக்கியம் முடிந்து அடுத்த வாக்கியம் ஆரம்பிக்கும் முன், இலேசான கனைப்பு.

முதன் முதலில் ரொம்பவே பயந்து போயிருந்தாள். மனப் பிரமையாக இருக்குமோ என்றுதான் நினைத்தாள். போன வருடம் மார்ச் மூன்றாம் தேதியை அவளால் மறக்கவே முடியாது. அன்றைக்குத்தான் அந்தக் குரலை முதன் முதலாகக் கேட்டாள்.

அன்றைக்கும் வழக்கம் போல் கம்ப்யூட்டர் வகுப்பை மிகவும் ஈடுபாட்டோடு நடத்தி முடித்து விட்டு, பஸ்ஸுக்காக காந்திபுரத்தில் நின்று கொண்டிருந்தாள். கோயமுத்தூரின் ஈரக் காற்று அற்புதமாக வீசிக் கொண்டிருந்து. அவள் வேலை பார்க்கும் மேல் நிலைப் பள்ளியில் அன்று ஆண்டு விழா என்பதால், நேரம் சற்று அதிகமாகி விட்டது. அப்போதுதான் அந்தக் குரலை முதன் முதலாகக் கேட்டாள்.

'நீலாவதி! சௌக்கியமா? இன்னைக்கு உங்க ஹாஸ்டல்லே ராத்திரி மெஸ் இருக்காதும்மா. அதனாலே கௌரி சங்கரிலேயே ஏதாவது சாப்பிட்டு விட்டுப் போறது நல்லது!"

நீலாவதி சுற்றுமுற்றும் பார்த்தாள். பக்கத்தில் யாரையும் காணோம். 'சரி! யாரோ பேசிக் கொண்டு போயிருப்பார்கள்' என்று அலட்சியமாக இருந்து விட்டாள். தான் தங்கியிருக்கும் ஓர்க்கிங் வுமன் ஹாஸ்டலுக்குப் போனபிறகு, கை கால் முகம் கழுவி இலேசாகப் பவுடர் போட்டுக் கொண்டு டைனிங் ஹாலை நோக்கி நடந்தாள். எதிரே வந்த மாலினியக்கா, "ஹேய்! நீலு!! இன்னைக்கு நைட் மெஸ் இல்லடி. குக் மேரியுடைய அம்மா இறந்துட்டாங்களாம். இன்னும் மூணு நாள் கழிச்சுத்தான் வருவாங்களாம். வாட்ச்மேனை ஆரியாஸுக்கு அனுப்பி ஏதாவது வாங்கி வரச் சொல்லலாம் வா'' என்றாள்.

நீலாவதிக்குச் 'சுரீர்' என்றது. பஸ் ஸ்டாப்பில் காதில் விழுந்த வார்த்தைகள் ஞாபகம் வந்தன. இலேசாகத் தலை வலிப்பது போலிருந்தது. எதுவும் சாப்பிடப் பிடிக்காமல் தன் அறையில் போய் முடங்கிக் கொண்டாள்.

லதானந்த்



இப்போது மறுபடியும் அதே குரல். "என்னம்மா நீலாவதி! என்னை நம்பலையா? இப்ப பார்த்தியா? பசியோட படுக்க வேண்டியிருக்கு! சரி! சரி! நாளைக்குக் காலையிலே வழக்கமா ஸ்கூலுக்குப் போற ரெண்டாம் நம்பர் பஸ்ஸிலே போக வேண்டாம். என்ன புரியுதா?" நீலாவதிக்குத் தலை சுற்ற ஆரம்பித்து விட்டது.

அடுத்த நாள் காலை வழக்கம் போல சி.எஸ்.ஐ. பள்ளி வாசலில் பஸ்ஸுக்காகக் காத்திருந்தாள். அவள் அருகில் ஒரு கார் வந்து நின்றது. காரை ஓட்டி வந்தது நீலாவதியின் பள்ளித் தலைமை ஆசிரியை மீனாட்சி! "வாம்மா! ஸ்கூலுக்குத்தானே போறே? ஏறிக்கம்மா!" எனப் பரிவோடு அழைத்தார். நீலாவதியும் ஏறி அமர்ந்து கொண்டாள். எதிரில் இருந்த பெட்ரோல் பங்கில் பெட்ரோல் போடக் கார் நின்ற போது தான், எப்போதும் நிற்கும் பஸ் ஸ்டாப் பக்கம் எதேச்சையாகப் பார்த்தாள். வழக்கமாக அவள் ஸ்கூலுக்குப் போகும் இரண்டாம் நம்பர் பஸ் நின்று கொண்டிருந்தது.

அவள் பார்க்கப் பார்க்க அவள் கண் முன்னால் மேம்பாலம் பக்கமிருந்து சீறிக் கொண்டு வந்த லாரி ஒன்று, கட்டுப்பாட்டை இழந்து அந்த பஸ் மீது பயங்கரமாய் மோதியது. பஸ் பக்கவாட்டில்

சுழன்று கவிழ்ந்தது. ஒரே கூக்குரல்! மரண ஓலம். நீலாவதிக்கு இரட்டை அதிர்ச்சி!

நீலாவதிக்கு நடந்ததை நம்பவே முடியவில்லை. நிச்சயம் இது மனப் பிரமையோ அல்லது கனவோ இல்லை என்பது மட்டும் நிதர்சனமாக உறைத்தது. நல்ல வேளையாக அவள் ரூம் மேட் கலா, சாயங்காலம் வந்து சேர்ந்தாள்.

"என்னடி நீலா! இப்படி இருக்கே! பஸ் ஆக்ஸிடெண்ட் சமாசாரம் மாலினியக்கா சொன்னாங்க. நல்ல வேளை! தெய்வாதீனமா நீ அந்த பஸ்ல போகல" என்றாள்.

"கலா! என்னோட பிரச்னையே வேற!" என்று ஆரம்பித்து, கண்ணுக்குத்தெரியாத மனிதனின் அந்தக் குரல் கேட்கத் தொடங்கியது முதல், பஸ் விபத்து வரை விவரித்தாள்.

"நீலு! தப்பா நெனச்சுக்காதே! இதுக்கு 'ஹேலுஸினேஷன்'னு பேரு. இது ஒரு விதமான குழப்பமான மன நிலை. சின்னதா ஒரு ட்ரீட்மெண்ட் எடுத்தா சரியாயிடும். விட்டோபான்னு ஒரு நல்ல சைக்கியாட்ரிஸ்ட் இருக்கார். சாய் பாபா காலனியிலதான் அவர் கிளினிக் இருக்கு. போயிட்டு வரலாம்" என்றாள்.

அதிகாலை சட்டென்று நீலாவதிக்கு விழிப்பு வந்தது. அதே குரல்!

"நீலாவதி! விட்டோபா பயல் கிட்டப் போய் என்ன சாதிக்கப் போறே? போ! போ! அவனாலெ எதுவும் பண்ண முடியாது. உன் கிட்ட நான் பேசறதே உன்னால ஒரு காரியம் ஆக வேண்டியிருக்கு. அதுக்காகத்தான்! அதுக்கான நேரமும் நெருங்கிட்டிருக்கு! கொஞ்சம் பொறுத்துக்கோ!"

முதல் தடவையாய்த் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, உதடு அசையாமல் மனதுக்குள் நீலாவதி கேட்டாள். "இதோ பாரு! யார் நீ? உனக்கு என்ன வேணும்! ஏன் என்னைத் தொந்தரவு பண்றே? ப்ளீஸ் போயிரு!"

இலேசான சிரிப்பு. "அதெல்லாம் இருக்கட்டும்! அடுத்த வாரம் பார்ப்போம். ஓ! சாரி! அடுத்த வாரம் கேட்போம்" என்று நக்கலாகச் சொல்லிவிட்டுக் குரல் ஓய்ந்து போனது.

டாக்டர் விட்டோபாவுக்கு சுமார் அறுபது வயதிருக்கும். ஒல்லியான தேகம். தூய வெண்ணிற ஜிப்பா. அதே நிறத்தில் பைஜாமா. தங்க நிறத்தில் மெலிதான ஃப்ரேமுக்குப் பின்னால் தீட்சண்யமான கண்கள்.

"மூணு மாசம் மருந்து சாப்பிடுவதை மட்டும் விட்டு விடாதே. இன்னொரு முக்கியமான விஷயம்! அடுத்த தடவை அந்தக் குரல் ஏதாவது முன்கூட்டியே சொன்னால், அது நடப்பதற்கு முன் உன் ஃப்ரெண்டுகிட்ட அதச் சொல்லு. பிறகு எனக்கும் தெரிவிக்கணும். புரியுதா? பெஸ்ட் ஆஃப் லக்!" என்று விடை கொடுத்து அனுப்பினார்.

அப்புறம் ஏழெட்டு மாதங்களுக்கு எந்தப் பிரச்னையும் இல்லாமல் நாட்கள் நகர்ந்தன. நீலாவதியும் அந்தக் குரல் விஷயத்தை ஏறக்குறைய மறந்தே போனாள்.

இன்று காலையில் கம்ப்யூட்டர் வகுப்பெடுத்து விட்டு ஓய்வறையில் தனியாக உட்கார்ந்து நாளிதழ் படித்துக் கொண்டு இருந்தபோது மறுபடியும் அந்தக் குரல்!

"பேசி ரொம்ப நாளாச்சு நீலாவதி! நல்லா இருக்கியா? ஒரு சந்தோஷமான விஷயம். இந்த வருஷத்துக்கான பெஸ்ட் டீச்சர் அவார்ட், உனக்கு உங்க ஸ்கூல்ல தரப் போறாங்க! நாளைக்கு உங்க ஸ்கூல்ல நடக்கப் போற முத்தமிழ் விழாவுல அத அறிவிக்கப் போறாங்க! என்ன சந்தோஷம் தானே? கங்கிராஜுலேஷன்ஸ்!"

நீலாவதி சுதாரித்துக் கொண்டாள். "தேங்க்ஸ்" என்று முணுமுணுத்தாள்.

அன்று மாலையே கலாவிடம் நடந்ததை அப்படியே ஒப்பித்து விட்டாள். "ஓகே நீலு! நாளைக்கு அப்படி ஏதும் அறிவிச்சா, நீ சொல்றத ஒத்துக்கிறேன். விட்டோபா டாக்டர் கிட்ட நானே கூட வந்து சொல்றேன். சரிதானே?"

அடுத்த நாள்!

தலைமை ஆசிரியை பல பரிசுகளையும் அறிவித்து விட்டு இறுதியாக, "வழக்கமாக இப் பள்ளியில் ஆண்டு தோறும் வழங்கும் சிறந்த ஆசிரியை விருது, நிர்வாகக் காரணங்களினால் இவ்வாண்டு வழங்கப்படவில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்" என்று அறிவித்தார்.

கலா, நீலாவதியை அர்த்த புஷ்டியோடு பார்த்தாள். "ஸோ... இப்ப சரியா? உன்

"என்னது! ஆசிரமத்துல தாலாட்டுச் சத்தம் கேட்குது?"

"குட்டி சாமியார் தூங்கறாராம்!"

- எஸ். தமிழ்மணி



னோட குரல் இரல் எல்லாம் பொய்யின்னு புரிஞ்சுதா?'' என்றாள். நீலாவதிக்கும் கொஞ்சம் ஆறுதலாயிருந்தது.

விழா முடிந்து இரவு படுக்கையில் படுத்த கொஞ்ச நேரத்தில், குரல் ஒலிக்க ஆரம்பித்தது. ஆனால் குரலில் இந்த முறை பரிகாசத் தொனிக்குப் பதில் ஆக்ரோஷமும், துவேஷமும் கொப்பளித்தது. "நீலாவதி! உன்னோட விருது மேட்டர நீ அவ கிட்ட சொன்னதுக்குப் பரிசுதான் உனக்கு அது கிடைக்காமப் போயிட்டது. அதுமட்டுமில்ல! இந்த தண்டனை உனக்குப் போதாது. வீட்டுக்கு போன் பண்ணி உன்னோட செல்ல நாய்க்குட்டி ரோபோ நல்லா இருக்கான்னு கேளு!'' அதன் பிறகு நீண்ட மௌனம்.

நீலாவதி உடனடியாக ஹாஸ்டலிலேயே இருந்த பூத்துக்கு ஓடினாள். அவசர அவசரமாக ஊத்துக்குளியில் இருக்கும் தன் வீட்டுக்கு ஃபோன் செய்தாள். அம்மாதான் எடுத்தாள். "எல்லாரும் நல்லா இருக்கீங்களாம்மா? அய்யன், அப்பச்சி, தம்பி எல்லாரும் எப்படி இருக்கீங்க? என்று பதற்றத்தை வெளிக்காட்டாமல் கேட்டாள்.

"எல்லாரும் நல்லாத்தான் இருக்கோம். நீ எப்படிம்மா இருக்கே? எப்ப ஊருக்கு வாரே?'' என்று பாசத்துடன் கேட்டாள்.

"ஏம்மா ரோபோ எப்படிம்மா இருக்கு?'' என்று இலேசாக நடுக்கத்தை மறைத்துக் கொண்டு கேட்டாள்.

"அத ஏங்கண்ணு கேக்கறே! இந்தக் கெரகம் காலையில திடீர்னு ரோட்டுக்கு ஓடிருச்சு. வேகமா வந்த பிளஷர்க் காரன் ஒருத்தன் அடிச்சுப் போட்டு நிக்காமப் போயிட்டான். ஆஸ்பத்திரிக்கு அய்யன் எடுத்துட்டுப் போயிருக்குது. நாளைக்கு மேலதான் எதுவும் சொல்ல முடியும்னு டாக்டர் சொல்லியிருக்காராம்'' என்று வருத்தத்தோடு சொன்னாள்.

"சரிம்மா! காலையில அவசியம் ஃபோன் பண்ணும்மா'' என்று கலவரத்துடன் ஃபோனை வைத்தாள்.

இப்போது அவள் மனம் முழுவதும் பீதி அப்பிக் கிடந்தது. படுக்கையில் போய்த் தொப்பென்று விழுந்தாள். இலேசான சிரிப்புச் சத்தம். குரோதம் இல்லாத வழக்கமான குரல்.

'நீலாவதி! சாரிம்மா! நாய்க் குட்டிக்கு ஒண்ணும் ஆகாது. கவலைப்படாதே! இனி மேலாவது என்னை ஆராய்ச்சி செய்வதை விட்டுட்டு, சொல்கிற பேச்சைக் கேட்டு நட! என்ன புரியுதா?''

நீலாவதி மனசுக்குள் மௌனமாகச் சம்மதம் சொன்னாள்.

"கவனமாக் கேட்டுக்க. ஸ்கூலுக்கு மூணு நாள் லீவு போடு! ஆர்.எஸ். புரம் பொன்னுரங்கம் பிள்ளை வீதியில் மோகன வித்யா மடம் இருக்கு. அங்க போய் கார்டு வைத்திருக்கிறவங்களுக்கு, அந்த மடாதிபதி ஸ்வாமி ரத்னானந்தா பிரசங்கம் பண்ணும் மேடையில் அவர் பக்கத்திலே இருந்து பணிவிடை செய்ய அனுமதி உண்டு. அப்புறம் என்ன பண்ணுறதுன்னு பிறகு சொல்றேன்.''

மறுநாள் ஸ்கூலுக்குப் போய் லீவு எழுதிக் கொடுத்தாள். மோகன வித்யா மடத்தில் அனாவசியக் கேள்விகள் அதிகம் இன்றி, உறுப்பினராக்கிக் கொண்டு கார்டும் தந்தார்கள்.

"குட்! இப்ப நேரா உக்கடம் போய் பழைய புத்தகம் விற்கிற ஆசாத் தெருவுக்குப் போ! மாதப்பன் பழைய புத்தகக் கடை எங்கிருக்குன்னு விசாரிச்சு, அங்கே போ! ரெண்டாவது அலமாரியிலே 'இண்டியன் சிவிக் கல்சர்'னு பேர் போட்டுத் தலையணை சைஸுல ஒரு புத்தகம் இருக்கும். பிரிச்சுப் பார்க்காம, பேரம் பேசாம, அதை வாங்கிக்க. ஹேண்ட் பேக்கில போட்டுக்க. நேராக ரயில்வே ஸ்டேஷன் போ! சிலிகுரிக்கு இன்னைக்கு நைட் புறப்படற ஸ்பெஷல் ஃபெஸ்டிவல் ட்ரைன்ல ஒரு டிக்கெட் வாங்கிக்க. சிலிகுரி எங்கிருக்குன்னு கேக்கலையா? டார்ஜிலிங் போற வழியில, மேற்கு வங்காளத்துல இருக்கு. அஸ்ஸாம், பீகார் பார்டர் அது. இப்போதைக்கு இந்த விவரம் போதும். மறக்காம பழைய மார்க்கெட் புத்தகத்தையும் எடுத்துக்க. ராத்திரி சிலிகுரிக்குப் புறப்படு.'' மளமளவெனக் குரல் சொன்னதைக் கவனமாகக் கேட்டுக் கொண்டாள். அதன்படியே எல்லா வேலைகளையும்

முடித்துக் கொண்டு, ரூமுக்குத் திரும்பினாள்.

கலாவிடம் ஊருக்குப் போவதாகச் சொல்லிவிட்டு, ரயில் நிலையம் வந்து சிலிகுரி வழியாக அஸ்ஸாம் போகும் கிறிஸ்துமஸ் சிறப்பு ரயிலில் ஏறி அமர்ந்தாள்.

இப்போது அவள் மானசிகமாக அந்தக் குரலின் உத்தரவை எதிர்நோக்க ஆரம்பித்து விட்டாள்.

ஏறக்குறைய இரண்டு இரவுகள், ஒரு பகல் தாண்டி, அவள் சிலிகுரியில் இறங்கிய போது காலை ஏழு மணி ஆகி இருந்தது. குரலின் ஆலோசனையின்படியே ரயில் நிலையத்திலேயே ஓய்வறையில் தங்கிக் குளித்து, ரெடியாகி இருந்தபோது, 'நீலாவதி! ஸ்டேஷனிலிருந்து வெளியே வந்ததும், வாடகை ஜீப்புகள் நிறைய நிற்கும், கோயமுத்தூர் ஷேர் டாக்ஸி மாதிரி. அம்பது ரூபா கொடுத்து கர்ஸியாங் போ! அங்கே ஃபாரஸ்ட் காலேஜை விசாரித்துக் கண்டு பிடி! அந்த மைதானத்தில் இன்னைக்கு ஸ்வாமி ரத்னானந்தாவோட பிரசங்கம் இருக்கு! உன்னோட மெம்பர் கார்டைக் காட்டினா தங்க ரூம் தருவாங்க. ரெஸ்ட் எடுத்துக்க. அப்புறம் பேசலாம்" என உத்தரவு வந்தது.

அசதியில் படுத்த நீலாவதியைக் குரல்தான் எழுப்பியது. 'நீலாவதி! எழுந்திரம்மா! மணி ஐந்தரை ஆச்சு! சீக்கிரம் குளித்து ரெடியாகி, மேடைக்குப் போம்மா. அதுக்கு முன்னாடி ஒரு விஷயம். கோயமுத்தூரில் வாங்கின புத்தகத்தை இப்போது திறந்து பார்!" என்றது.

புத்தகத்தைப் பிரித்த நீலாவதிக்குத் திக்கென்றது. அதன் உள்ளே பக்கங்கள் தேவையான அளவு நீக்கப்பட்டு, அந்தக் காலி இடத்தில் சிறியதாக ஒரு கைத் துப்பாக்கி!

"இதைக் கைப் பைக்குள் வச்சுக்கம்மா! லோடு பண்ணி இருக்கு! சரியா ஆறு மணிக்கு ஸ்வாமிஜி பேச ஆரம்பிப்பார். அவர் பேசுற எதையும் காதில் வாங்காம, கிட்டப் போய், அவர் நெஞ்சுக்கு நேரா துப்பாக்கியப் பிடிச்சு ட்ரிகரைப் பதற்றப் படாம அழுத்திரு! புரியுதா? முக்கியமான விஷயம், அவர் பேசுறதுல மனச சிதற விட்றாதே! பிறகு பேசறேன்" என்று குரல் ஒலித்து அடங்கியது.

சரியாக ஆறு மணி! ஸ்வாமி ரத்னானந்தா மைக் அருகே வந்தார். நெடிய உருவம். நீள்வாக்கு முகம். கூர்மையான நாசி. ரோஜா நிறம். கருமையான தாடி. கண்களை மறைத்த கறுப்புக் கண்ணாடி. ஆகாய நீல நிறத்தில் பைஜாமா ஜிப்பா!

நீலாவதி எழுந்து மெல்ல ஸ்வாமிஜியை நெருங்கினாள். ஸ்வாமிஜி பேசுவதை மனத்தில் பதிய வைக்காமல், துப்பாக்கியை வெளியே எடுத்து அரை அடி இடைவெளியில், கண்ணிமைக்கும் நேரத்தில் ட்ரிகரை அழுத்தினாள்.

அந்த வினாடிதான் அவள் ஒன்றைக் கவனித்தாள். ஸ்வாமிஜி பேசிய கடைசி வாக்கியங்களில், அவரது குரல் அவளது காதை எட்டி மனத்தில் நுழையவும், அவள் ட்ரிகரை அழுத்தவும் சரியாக இருந்தது. அவரது அந்தக் குரல் நீலாவதிக்கு மிகவும் பரிச்சயமான குரல். தெள்ளத் தெளிவான குரல். மென்மையாக இதமாக மனதை வருடும் குரல். வாக்கியம் முடிந்து அடுத்த வாக்கியம் ஆரம்பிக்கும் முன், இலேசான கனைப்புடன் கூடிய பரிகாசம் இழையோடும் ஆண் குரல்! ○

## ஒலிம்பிக் நாணயம்




ஒலிம்பிக் போட்டியை முன்னிட்டு வெளியிடப்படவிருக்கும் இரண்டு யூரோ மதிப்புள்ள சிறப்பு நினைவு நாணயமே இது. ஒருபக்கம் ஒலிம்பிக் வீரனின் படமும், மறுபக்கம் ஐரோப்பிய யூனியனின் சின்னங்களும் - பொறிக்கப்பட்டிருக்கும் இந்த நாணயம் ஐம்பதாயிரம் மட்டுமே அச்சிடப்பட்டுள்ளதாம்.

- பாரீஸ் பார்த்தசாரதி



# குயிலுக்கு வந்த கோபம்!

'அட ஷங்கர் படத்தின் புது ஹீரோயின் தானே இந்தப் பனிமலர் முகம்?' என்று நீங்கள் பூரிக்கிறீர்களா..? மும்பை பாடகி ச்ரேயா கோஷலுக்குப் பெருமையாகத்தானிருக்கும்.

'தேவதாஸ்' படத்துக்காக பதினெட்டு வயதிலேயே தேசிய விருது வாங்கியவர், தற்பொழுது தமிழிலும் கோலோச்சிக் கொண்டிருக்கிறார். '7ஜி'யில் தேனாய் உருகிய "நினைத்து நினைத்துப் பார்த்தால்" தற்பொழுது காதலர்களின் தேசிய கீதமாயிருக்கிறது. (இருக்காதா பின்னே!).

"எத்தனை பேரிடம் பாடினாலும் இளையராஜாவிடம் 'விருமாண்டி'யில் பாடியதைவிட உலகத்தில் உசந்தது ஒண்ணுமில்லை" என்று நெகிழ்கிறார்.

"மும்பை ப்ரஸ் உங்களுக்கும் அனுமாலிக்குக்கும் முடிச்சுப் போடுகிறதே" என்று தயங்கியபடி கேட்டால், "ஹலோ, நான் குட் கேர்ளாக்கும். பொறாமையில் வெந்து உளறுபவர்களைப் பற்றியெல்லாம் கவலைப்படுவதே யில்லை'' என்று மிளகாய்ப் பழம் கடித்ததுபோல் படபடக்கிறார்.

- ச.ந. கண்ணன்



புருஷனும் மனைவியும் ஏறக்குறைய ஒத்த அறிவு நிலையில் இருக்க வேண்டும். புருஷன் கம்பனையும், காளிதாஸனையும் ஆராய்ந்து கொண்டிருக்கும் போது, மனைவி அடுத்த வீட்டுக்காரியின் காதுத் தோட்டையும், கை வளையையுமே ஆராய்ந்து கொண்டிருப்பவளாய் இருந்தால் அவர்களுடைய இல்வாழ்க்கை லட்சிய இல்வாழ்க்கையாக முடியாது.

உலகத்தில் நாம் எத்தனையோ பேரைப் பார்க்கிறோம்; எத்தனையோ பேருடன் பழகுகிறோம். ஆனால் சிலரிடம் தான் நமக்கு நட்பு உண்டாகிறது; அவர்களிலும் சிலரிடம்தான் நம்முடைய நட்பு நீடித்து வாழ்க்கை முழுவதும் நிலைத்திருக்கிறது. சற்று யோசித்துப் பார்த்தோமானால், ஒத்த அறிவு நிலையிலுள்ளவர்களிடம் தான் இத்தகைய ஆழ்ந்த சிநேகம் ஏற்பட்டு வளருகிறது என்பதை அறிவோம்.

இளமையில் மிகவும் நெருங்கிய ஆத்ம சினேகிதர்களாய் இருந்தவர்கள் சில சமயம் பிற்காலத்தில் வேற்று மனிதர்கள் போல் ஆகி விடுவதையும் காண்கிறோம்.இதற்குக் காரணம், அவர்களுடைய அறிவு வளர்ச்சியில் வித்தியாசம் ஏற்பட்டுவிட்டதென்பதுதான்.

நீடித்த சிநேகத்திற்கு இன்றியமையாத அம்சம் ஒத்த அறிவு நிலையும் ஒத்த அறிவு வளர்ச்சியுமாகும். இவை இலட்சிய மண வாழ்க்கைக்கும் இன்றியமையாதனவே. இந்த அம்சம் நிறைவேறாத இல்வாழ்க்கை பரிபூர்ணமாகாது.

# ஒத்த அறிவு நிலை

நம்முடைய சமூகத்தில், தற்சமயம் இந்தப் பெரிய குறை இருந்து வருகிறது. கல்வியறிவில் புருஷர்களுக்கும் ஸ்திரீகளுக்கும் பெரிய ஏற்றத் தாழ்வைக் காண்கிறோம். இந்த ஏற்றத் தாழ்வு நமது நாட்டில் இலட்சிய விவாகத்துக்கும் இலட்சிய இல்வாழ்க்கைக்கும் பெருந்தடையாயிருந்து வருகிறது.

இந்நாளிலே கூடச் சில சமயம் அதிசயமான 'காதல் சம்பவ'ங்களைப் பற்றி நாம் கேள்விப்படுகிறோம்.

நல்ல கௌரவமான



# அமரர் கல்கி



நிலையிலுள்ள ஒருவர் - ஐம்பது வயதானவர் பிள்ளை குட்டிகள் ஏராளமாய் உள்ளவர் திடீரென்று யாரோ ஒரு ஸ்திரீயின் மோக வலையில் விழுந்து விட்டாரென்றும், அவள் சொன்னபடியெல்லாம் ஆடுகிறாரென்றும் கேள்விப்படுகிறோம். ஊரெல்லாம் அவரைப் பார்த்துச் சிரிக்கிறது. ஆனால், அவர் என்னமோ ஏழாவது சொர்க்கத்தில் வாழ்கிறார். யாராவது ரொம்பத் தெரிந்தவர்கள் நெருங்கிக் கேட்டால், ''கல்மிஷம் உங்கள் மனத்திலே தான் இருக்கிறது. நீங்களும் நானும் சிநேகம் இல்லையா? அதுபோல் ஒரு பெண்மணியிடம் சிநேகமாய் இருந்தால் அதை மட்டும் ஏன் சந்தேகிக்கிறீர்கள்?'' என்று பதில் சொல்லுகிறார்.



சமீபத்தில் இன்னொரு சம்பவம் கேள்விப்பட்டேன். அறுபது வயதான கிழவர் ஒருவர் - தலையில் மாதிரிக்குக் கூட ஒரு கறுப்பு மயிர் கிடையாது - அவர், ஒரு தாஸி வீட்டிற்குப் போய் வருகிறார் என்று சொன்னார்கள். இதனால் அவருக்குக் கடன் மிஞ்சிச் சொத்தெல்லாம் போய் விட்டது. ஆனால் அவர் என்னமோ சந்தோஷமாகத்தான் இருந்தார்.

இதெல்லாம் காட்டுவதென்ன? மேற்சொன்ன புருஷர்கள் தங்கள் மனைவிகளிடம் அடையாத 'தோழமை'யை வேறு ஸ்திரீகளிடம் அடைகிறார்கள் என்பதுதான்.

அந்தக் கிழவர்களுடைய 'காத'லில் தேக தத்துவம் அதிகமாயிருக்க முடியாது; அதில் மனோதத்துவந்தான் அதிகமாயிருக்க வேண்டும். தங்கள் மனைவியிடம், 'அறிவுத் தோழமை'யை அவர்கள் அடையாததுதான் அவர்களுடைய விபரீதப் போக்குக்குக் காரணம் என்று சொல்லலாம்.

ஆகவே, ஸ்திரீ புருஷர்களுக்குள் அறிவு நிலையிலுள்ள வித்யாசத்தை ஒழித்தல் இலட்சிய விவாகத்துக்கு மிகவும் அவசியம். ஒரு திருப்திகரமான அம்சம் என்னவென்றால், நமது ஸ்திரீகள் ஏட்டுக் கல்வியில் புருஷர்களுக்குப் பின் நிற்கிறார்களென்றாலும், கலை உணர்ச்சியிலும், ரஸிகத் தன்மையிலும் ஏறக்குறைய ஒத்த நிலையில் இருக்கிறார்கள். ஏட்டுக் கல்வியிலுள்ள வித்தியாசத்தை ஒழிப்பது அவ்வளவு கஷ்டமல்ல; கொஞ்சம் பலமான முயற்சி செய்தால் சீக்கிரம் வெற்றி பெறலாம்.

**- கல்கி களஞ்சியம் தொகுப்பிலிருந்து (வானதி பதிப்பகம்)**

க...கக... கல்லூரிச்சாலை!

மேல்தட்டு மகளிரின் நுனிநாக்கு ஆங்கிலம் எங்கும் ரீங்காரம் செய்ய... இடையிடையே ரிங்டோன் சிரிப்பலைகளுடன் பந்தா மேளா.

வீரத் தமிழ் ஆடவர் பற்றி மகளிர் அணியினரின் கருத்தென்ன...? துணிந்து கேட்டேவிட்டோம். சி.ஏ.ஜி. அறிக்கையைத் தோற்கடித்த அந்த கண்டன அறிக்கை இதோ :

"ஆமா... கொஞ்சம் சுமாரா ஒரு ஃபிகரைப் பார்த்தா போதும். சூப்பர் மேனுன்னு நினைச்சுக்கிட்டு, பைக்ல வீலிங் பண்ணுவாங்க. வழுக்கி விழுந்து முட்டியும் உடையும், மூக்கும் உடையும். எங்ககிட்ட! ஏதோ உலகத்திலே அவங்ககிட்ட மட்டும்தான் செல் ஃபோன் இருக்கறதா நினைச்சுக்கிட்டு, பொண்ணுங்க பக்கத்துல வர்றப்போ 'லஜ்ஜாவதியே'ன்னு டோன் கொடுப்பாங்க. ஏதோ ஃபிகர்கிட்ட பீட்டர் உடற மாதிரி செல்லை காதுல வைச்சுக்கிட்டு பினாத்துவாங்க. அந்த நேரம் பார்த்து உண்மையில கால் வரும். ஹி... ஹின்னு வழிவாங்க. சென்னை பசங்க சுத்த வேஸ்ட்" என ஏகத்துக்கும் வாரிவிட்டனர். அவரவர் அம்மாக்களின் சேலைத் தலைப்பை ரிமோட்ல புடிச்சுக்கிட்டு அலையற பால் மணம் மாறாத சிட்டுகளுக்கு இவ்வளவு பந்தாவா...? என்று நாம் ஆச்சர்யப்பட,

''பத்து நிமிஷத்துல மேக்கப் பண்ணிகிட்டு வெளியில கிளம்புற பையன்களே பந்தா பண்றப்போ, பத்து நிமிஷத்துக்கு ஒருமுறை மேக்கப் பண்ற நாங்க பத்து மடங்கு பந்தா பண்ணணும்!'' என்ற மாடர்ன் நியாயத் தராசுகளிடம் மேலும் வாய் கொடுத்து மாட்டாமல் 'எஸ்கேப்' பிட்டோம்!

சந்திப்பு, படம் : **முகில்**

# பந்தா



ஒருமுறை மிஸ்டர் எக்ஸ் ஓட்டலில் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். சாப்பிட்டு முடிந்ததும் பில் வந்தது. பில்லுக்கான பணத்தை தட்டில் வைத்துவிட்டு எழுந்த மிஸ்டர் எக்ஸை சர்வர் தலைசொறிந்தபடி, ''ஸார்.. ப்ளீஸ் டிப்ஸ்..?'' எனக் கேட்க, ''வெரி ஸாரி... நான் டிப்ஸ் தர்ற அளவுக்குப் பெரிய ஆளில்லை. அறிவுரை தர்ற அளவுக்கு சாமியாருமில்லே''னு சொன்னதும், சர்வர் குழம்பிப் போய் நின்றார்.

- பா.து.பிரகாஷ்

மிஸ்டர் எக்ஸுக்கு நீண்ட ரயில் பிரயாணத்தில் மட்டும் மது அருந்தும் பழக்கம் உண்டு. ரயில்வே ஸ்டேஷனில் ஒரு நபரிடம் ''உங்களுக்கு மது அருந்தும் பழக்கம் உண்டா?'' என்று மிஸ்டர் எக்ஸ் கேட்க... ''அதெல்லாம் சுத்தமாகக் கிடையாது'' என்று அவர் மறுக்க ''அப்போ இந்த மது பாட்டிலை வைத்திருங்கள்! டிக்கெட் எடுத்துட்டு வருகிறேன்!'' என்று மிஸ்டர் எக்ஸ் கூறினாரே பார்க்கலாம்!

- சாத்தூர் சபாபதி



# இண்டு எங்கே?

தமது பழுதடைந்த டெலிஃபோனை எடுத்துக் கொண்டு தொலைபேசி நிலையத்துக்குச் சென்றார் மிஸ்டர் எக்ஸ். 'மாற்றித் தருவதற்கு வேறு நல்ல கருவி கையிருப்பு இல்லை' என்று இலாகாவினர் கைவிரித்து விட்டனர். வந்ததே கோபம் எக்ஸுக்கு. ''டெலிஃபோன் எக்ஸ் சேஞ்சுனு பெத்த பேரு எதுக்கு? அதை மொதல்ல மாத்துங்க'' என்று பொரிந்து தள்ளினார்!

- வசந்தி வள்ளுவன்





மிஸ்டர் எக்ஸும் அவருடைய நண்பரும் சாலையில் பேசிக் கொண்டு நடந்து சென்று கொண்டிருந்தார்கள். அப்போது அவர்களைக் கடந்து அழகான பெண் ஒருத்தி சென்று கொண்டிருந்தாள். அந்தப் பெண்ணையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தார் மிஸ்டர் எக்ஸ்.

இதைக் கவனித்த மிஸ்டர் எக்ஸின் நண்பர் ''மூன்று பொண்ணுங்க'' என்றார். உடனே மிஸ்டர் எக்ஸ் நண்பரை இடைமறித்து, ''இந்த அழகான பெண்ணுக்கு மூன்று பொண்ணுங்களா? இருக்கவே இருக்காது. இதை நான் நம்ப மாட்டேன்'' என்று சொல்ல, நண்பர் சொன்னார், ''அவளுக்கல்ல, உனக்கு'' என்றாரே பார்க்கலாம். மிஸ்டர் எக்ஸின் முகத்தில் அசடு வழிந்தது.

- பி. கோவிந்தசாமி



போலீஸ் ஸ்டேஷன் வாசலில் கும்பலாயிருப்பதைக் கண்டு, ''என்ன விசேஷம்?'' என்று அங்கிருந்த ஒருவரைக் கேட்டார் மிஸ்டர் எக்ஸ்.

''மூணு மாசமா நம்ம ஊரைக் கலக்கிக்கிட்டிருந்த கொள்ளைக் கூட்டத்தை கூண்டோடு கைது செஞ்சுட்டாங்களாம்'' என்றார் அவர்.

கொள்ளைக் கூட்டத்தைப் பார்த்துவிட்டு வேறு எதையோ தேடினார் மிஸ்டர் எக்ஸ்.

''என்ன தேடறீங்க?'' என மறுபடியும் அவர் கேட்க...

''கொள்ளைக் கூட்டம் இங்கிருக்கு? கூண்டு எங்கே?'' என அமைதியாகக் கேட்டார் மிஸ்டர் எக்ஸ்.

- தாம்பரம் பி.ஆர்.கண்ணன்

**முக்கிய அறிவிப்பு!**
**மிஸ்டர் எக்ஸ் அடுத்த வாரம் விடைபெறுகிறார்!**

ஒரு பெண்ணுக்கும் ஒரு சர்தார்ஜிக்கும் ஏதோ வாக்குவாதம் நடந்து கொண்டிருந்தது. மிஸ்டர் எக்ஸ், பெண்ணின் அருகே போய் என்னவென்று கேட்டார். அதற்கு அந்தப் பெண் **"He is eve-teasing"** என்றாள். உடனே மிஸ்டர் எக்ஸ் சர்தார்ஜியிடம் **"Glad to meet you Mr. Eve-teasing, I am Mr -x"** என்றார்.!

- கிருஷ்ண ராஜ்கோபால்



# மழை நின்ற பிறகும்...

சில முதல் அனுபவங்களை, வாழ்நாள் முழுவதும் மறக்க முடிவதில்லை.

முதன் முதலாக பேலன்ஸ் கிடைத்து, யாரும் பிடித்துக் கொள்ளாமல், தடுமாற்றமின்றி சைக்கிள் ஓட்டிய, அந்தப் பரவச நிமிடங்கள்... வெள்ளைப் பிள்ளையார் கோயில் உற்சவக் கும்பலுக்கு நடுவே, பெட்ரோமாக்ஸ் விளக்கு வெளிச்சத்தில், முகத்தில் மினுமினுக்கும் வியர்வையுடன், என்னைத் திரும்பிப் பார்த்த முதல் பெண்... எப்பொழுது நினைத்துப் பார்த்தாலும், ஒரு மழைக்காலத் தூறல் போல சிலிர்ப்பூட்டும் அந்த முதல் காதல்... முதல் காதல் மட்டுமல்ல, கடைசிக் காதலும் கூட.

அந்தக் காதலுக்கு சாட்சியான கடிதங்களை எடுத்து, மேஜையில் வைத்தேன். ஒரு தோற்றுப் போன காதலின், கடைசி எச்சங்கள். மழை நின்ற பிறகும், இலை நுனிகளிலிருந்து விழுகின்ற நீர் போல, மீராவை ஞாபகப்படுத்திக் கொண்டிருக்கும் கடிதங்கள்.

ஏறத்தாழ, முப்பத்தேழு வருடங்களுக்கு முந்தைய கடிதங்கள். பழுப்பேறிப் போய், மூலைகளில் மடங்கியும், ஓரங்களில் கிழிந்துமிருந்தன.

எந்த ஆஃபீசுக்கு மாறிச் சென்றாலும், அலுவலக சாதனங்களுடன், இந்தக் கடிதங்களையும் எடுத்துக் கொண்டு வந்து, எனது அலுவலக பீரோவில் பத்திரப்



படுத்தி விடுவேன். எப்போதாவது படித்துப் பார்ப்பேன்.

இன்று பணியிலிருந்து ஓய்வு பெற்று விட்டேன்.

இனி எனக்கென்று, அலுவலகம் என்ற ஒன்று கிடையாது. அந்தக் கடிதங்களை என்ன செய்வது என்று புரியாமல் பார்த்துக் கொண்டிருந்தேன். வீட்டுக்கும் எடுத்துச் செல்ல முடியாது. இத்தனை காலத்திற்கு பிறகு, என் மனைவியின் கண்ணில் பட்டு... ஐம்பத்தெட்டு வயதிற்கு மேல், புதுக் கணவன் போல மனைவியை சமாதானப்படுத்தவெல்லாம் என்னால் முடியாது.

கடிதங்களுக்குக் கீழ், மீராவின் ப்ளாக் அன்ட் ஒய்ட் ஃபோட்டோ ஒன்று இருந்தது. நவகோடி ஸ்டுடியோவில் எடுக்கப்பட்ட புகைப்படம்.

எப்பொழுதும் கறுப்பு, வெள்ளைப் புகைப்படங்கள், பெண்களைக் கூடுதல் அழகுடன் காட்டும். மீராவும் இந்த ஃபோட்டோவில் அற்புதமாக இருந்தாள். பஃப் வைத்த ஜாக்கெட் போட்டுக் கொண்டு, ஜடைகளை முன்னால் விட்டுக் கொண்டு, போஸ்ட் கார்டு சைஸில் எடுக்கப்பட்ட புகைப்படம்.

மீராவின் அந்தக் கண்கள்... இன்னும் இந்தப் புகைப்படத்திலும் உயிர்ப்புடன் இருப்பது போல் ஒரு பிரமை. அந்தச் சிரிப்பு... கேமிராவுக்காகவென்று உதட்டோரத்தில் கடனேயென்று சிரிப்பார்களே... அந்த மாதிரிச் சிரிப்பு இல்லை. ஆடி மாதம், அணை திறந்தவுடன் பொங்கி வரும் நீர் போல, முகம் முழுவதும் பொங்கி வழியும், முழுமையான சிரிப்பு.

இந்தக் கண்களும், சிரிப்பும்தான் ஒரு காலத்தில், சதா சர்வ நேரமும் என்னை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தன. மீராவைக் குறித்து இப்பொழுது நினைத்தாலும், ஈரப்பூக்களை கன்னத்தில் ஒத்திக் கொள்வது போல் ஒரு சுகம்.

அப்பொழுதெல்லாம், வருடத்தில் பெரும்பாலான நாட்கள் காவிரியில் தண்ணீர் ஓடும்.

கரையிலிருந்த மரங்களின் பிரதிபலிப்பில், பச்சையாக ஓடிக் கொண்டிருக்கும் ஆற்று நீரில், தன் கொலுசணிந்த கால்களை விட்டு அலசிக் கொண்டே, "பாபு... கண்ணுல மை அப்பியிருக்கா?" என்பாள் மீரா.

"ஆமாம் மீரா... கிட்ட வா, சரி பண்றேன்" என்றபடி நெருங்கி அமர்வேன்.

கண்ணுக்குக் கீழ் அப்பியிருக்கும் மையை துடைத்துவிட்டு, அப்படியே கன்னத்துக்கு இறங்குவேன்.

வேகமாக என் நெஞ்சில் கையை வைத்துத் தள்ளி, "ஆம்பள புத்திய, காட்டுற பாத்தியா?" என்பாள் மீரா.

"முந்தாநேத்து லவ் பண்ண ஆரம்பிச்சவன்லாம், கல்லணைக்கு கூட்டுகிட்டுப் போறான். நம்ப லவ் பண்ண ஆரம்பிச்சு, ஆறு மாசமாவுது.

ஜி.ஆர்.சுரேந்தர்நாத்

இன்னும் கன்னத்தக் கூடத் தொடல. காதல்ல ஒரு வளர்ச்சி வேணாம்?"

"என்ன வளர்ச்சி?"

"காதலிச்ச முதல் மாசம், சும்மா பாத்துகிட்டே உக்காந்திருக்கணும். அடுத்த மாசம் சுண்டு விரல மட்டும் கொஞ்சூண்டு தொட்டுக்கணும். மூணாம் மாசம் நல்லா கையைக் கோத்துக்கலாம். இப்படியே மாசா மாசம் கையத் தொட்டு, கண்ணத் தொட்டு, கன்னத்தத் தொட்டு..."

"ஏய்... நிறுத்து... நிறுத்து!"

"என் கணக்குபடி வர்ற செப்டெம்பர் மாசம்..." என்ற என் வாயைப் பொத்திய மீரா, "வர்ற செப்டெம்பர் மாசம், வெளக்குமாறு பிஞ்சிடும்" என்று கூற, நான் சத்தமாகச் சிரித்தேன்.

எப்பொழுதும் கலகலப்பான பேச்சு... சிரிப்பு... எங்கள் வாழ்க்கையின் மொத்தச் சிரிப்பையும், காவிரிக் கரையிலேயே சிரித்து முடித்துவிட்டோம்.

**கா**விரி ஆற்றிலிருந்து பிரிந்து செல்லும் வாய்க்கால் அருகே சந்தித்துக் கொண்டோம். வாய்க்காலில் தண்ணீர் குறைவாகத்தான் ஓடிக் கொண்டிருந்தது.

"பாபு... தண்ணீல இறங்கி நிக்கலாமா?கணுக்கால் அளவுதான் தண்ணி இருக்கும்."

சில்லென்ற நீரில், இருவரும் கைகளைக் கோத்துக் கொண்டு நின்றோம். கால்களைத் தழுவிக் கொண்டு, காவிரி நீர் ஓட, அருகிலிருந்த தென்னந்தோப்பிலிருந்து சிலுசிலுவென்று காற்று வீச... ரம்யமான சூழ்நிலை.

"இந்த அழகான சூழ்நிலைல, இன்னும் ஒரு விஷயத்தச் சேர்த்துக்கிட்டா, இன்னும் அற்புதமா இருக்கும்."

"என்ன விஷயம்?" என்ற மீராவின் அருகில் நெருங்கியபடி, என் கையில் கட்டியிருந்த வாட்சைப் பார்த்து,

"இப்ப மணி ஆறு இருபது" என்றேன்.

"அதுக்கென்ன இப்போ?"

"சாயங்காலம் ஆறு இருபதுக்கு, நீ யாருக்காச்சும் முத்தம் தந்திருக்கியா?"

"இல்ல... ஆனா சாயங்காலம் ஆறு இருபதுக்கு, ஒருத்தன வாய்க்கால் தண்ணீல தள்ளிவிட்டிருக்கேன்."

"எப்ப?" என்று புரியாமல் விழித்த என்னிடம், "இப்பதான்"என்று கூறியபடி, என் சட்டையைப் பிடித்து, வேகமாக வாய்க்கால் நீரில் தள்ளிவிட்டு ஓடிப் போனாள் மீரா.

**எ**ன்னை கடைசியாக, காவிரிக் கரையில் சந்தித்துப் பேசினாள் மீரா. நாங்கள் மணிக்கணக்கில் பேசி, வளர்த்த காதலை, மீரா ஒரு நிமிடப் பேச்சில் முறித்துக் கொண்டாள்.

"இன்னொருத்தன கல்யாணம் பண்ணிக்கிறதுக்கு, என்ன ஏண்டி காதலிச்ச?" என்று நான் ஆத்திரத்துடன் கத்தினேன்.

"எங்க வீட்ட எதிர்த்துப் போராடறதுக்கு எனக்கு தைரியம் இல்ல பாபு" என்றாள் மீரா கண்ணீருடன்.

"எங்க... என் முகத்தப் பார்த்து சொல்லு. இந்த நிமிஷம் நீ என்னைக் காதலிக்கிறியா? இல்லையா?"

'இன்னமும் உன்ன நான் காதலிக்கிறேன் பாபு. சாகுற வரைக்கும் காதலிப்பேன்."

அதற்குப் பிறகு நான் மீராவிடம் ஒன்றும் பேசவில்லை.

**மீ**ராவிற்குத் திருமணமாகி, நான் படிப்பை முடித்து, சென்னையில் அரசுப் பணி கிடைத்து... வாழ்க்கை திசைமாறிப் போனது.

இரண்டு வருடங்களுக்கு பிறகு,



"மன்னர் வரும்போது வசூல்ராஜா வாழ்க என்று குரல் எழுப்புகிறார்களே..."

"வரி வசூலிப்பதில் நம்ம ராஜா நம்பர் ஒண்ணாம்..."

- எஸ். மோகன்

## அடப் பாவமே!

பாரதியார் எட்டயபுரம் மகாராஜாவுடன் சென்னைக்குச் சென்று திரும்பினார். வீட்டில் இரண்டு குதிரை வண்டிகள் வந்து நின்றன. மனைவி செல்லம்மாள் புடைவை, பாத்திரம் ஏதும் இருக்கும் என்று ஆவலுடன் வந்தார். ஆனால் இறக்க இறக்க அத்தனையும் புத்த கங்கள்!

''ராஜா ஐந்நூறு ரூபாய் கொடுத்தார்'' என்று பணப்பையை நீட்டினார் பாரதியார். அதில் பதினைந்து ரூபாய் பாக்கி இருந்தது.

- வயலூர் பா. அச்சுதன்



மைதிலியைத் திருமணம் செய்து கொண்டேன். இரண்டு ஆண் குழந்தைகள், இரண்டு பேருக்கும் திருமணம் செய்து வைத்து, பேரன், பேத்தியெல்லாம் பார்த்தாகிவிட்டது.

மீராவை அதற்குப் பிறகு சந்திக்கவே இல்லை. இருப்பினும் காலத்தால் கரைக்க முடியாத நினைவுகளுடன், இன்னமும் மீரா, என் அடிமனத்தில் இருக்கிறாள்.

கிழிப்பதற்கு முன், அந்தக் கடிதங்களை ஒருமுறை படித்துவிட வேண்டும் என்று, ஒரு கடிதத்தைப் பிரித்தேன். 23.2.1967 தேதியிட்டு மீரா எழுதியிருந்த கடிதம். இடது புறம் சாய்ந்தாற்போல், குண்டு, குண்டாக அழகான கையெழுத்து. வரிசையாக மீரா எழுதியிருந்த கடிதங்களையும், பிறகு நான் மீராவுக்கு எழுதியிருந்த கடிதங்களையும் படித்தேன்.

சட்டென்று நிகழ்காலம் மறந்து, இருகரைகளையும் தழுவிக் கொண்டு காவிரி ஓடிய, அந்தக் காலத்திற்குள் சென்று விட்டதுபோல் இருந்தது.

மீராவின் கடிதங்களில் ஒரு குழந்தைத்தனம் இருந்தது. எனது கடிதங்களில், ஒரு விடலைத்தனமான கவித்துவம் இருந்தது. இப்பொழுது, கவிதை போல எல்லாம் என்னால் கடிதம் எழுத இயலாது. வாழ்க்கை நெருக்கடிகளில், கவித்துவத்தையெல்லாம் என்றோ தொலைத்து விட்டிருந்தேன். மேலும் ஒவ்வொரு கடிதமும், அப்பொழுது நடந்த சின்னச் சின்ன சுவாரஸ்யமான சம்பவங்களை நினைவூட்டின.

மொத்தமாகப் பார்க்கும்பொழுது, இருவரது கடிதங்களிலும், ஒரு சினிமாத்தனமும், அபத்தமான கற்பனைகளும், கனவுகளும் இருந்தன. இருப்பினும் அந்த சினிமாத்தனமும், கனவுகளும் அந்நாட்களில் தந்த சந்தோஷத்தை, பிறகு வாழ்க்கையில் எந்த ஓர் அனுபவமும் தரவில்லை.

படிக்கும்பொழுதெல்லாம் ஒரு சந்தோஷ உலகத்திற்கு இட்டுச் செல்லும், இந்த கடிதங்களை கிழிக்கத்தான் வேண்டுமா? தீவிரமாக யோசிக்க ஆரம்பித்தேன்.

ஆழ்ந்த யோசனைக்குப் பின், 'வேண்டாம்' என்ற முடிவுக்கு வந்தேன். கொண்டு போய், அட்டைப் பெட்டியில், பழைய புத்தகங்களோடு சேர்த்து வைத்துவிடலாம். பொதுவாக என் மனைவியும், பையன்களும் அந்தப் புத்தகங்களை எடுப்பதில்லை. தப்பித் தவறி அவர்கள் கண்ணில் பட்டாலும், நடப்பதை சந்திப்பது என்று முடிவெடுத்தேன்.

தோற்றுப் போனாலும், இரண்டு வருட காலம், உலகம் மறந்து, பேச்சும், சிரிப்பும், கனவுகளுமாய்த் திரிந்த, ஒரு காலகட்டத்தின் நினைவுச் சின்னங்கள் இவை. இவற்றை சாகும்வரை அழிக்கப் போவதில்லை என்ற முடிவோடு, அந்த கடிதங்களையும், ஃபோட்டோவையும் ஒரு பெரிய கவரில் வைத்துக் கொண்டு, எழுந்தேன். ○

# தேய்ந்தால் தாக்குதான்!

முன்பெல்லாம் நோய்களுக்குக் கொஞ்சம் கருணை இருந்தது. அறுபது வயசுக்கு மேற்பட்டவர்களைத்தான் குறி வைத்துத் தாக்கும். ஆனால் தற்போது ஃபோர்ட்டி ப்ளஸ் என்றாலே, நடிகர் விவேக் பைக் விளம்பரத்தில் சொல்வது போல 'சரி... குத்துதான்!'

குறிப்பாக, முழங்கால் வலி, இடுப்பு வலி, முதுகுவலி போன்ற பிரச்னைகள் மிகப் பரவலாகி விட்டன. வலி ஏற்படும் போது, நமக்குத் தெரிந்த வைத்திய முறைகளைப் பயன்படுத்தியோ, தைலம் தேய்த்தோ, வலி நிவாரண மாத்திரைகளை விழுங்கியோ தற்காலிகமாக ஒரு பெருமூச்சு விடுகிறோம். ஆனால் இந்த வலிகள் எல்லாம் பெரும்பாலும் ஏதோ ஒரு உடல் பிரச்னையின் அறிகுறியே என பலருக்குத் தெரிவதில்லை.

மூட்டுத் தேய்மானம், எலும்புகள் வலுவிழத்தல் பற்றி, சென்னை அசோக் நகர், 'தி ஆர்த்ரிடிஸ் அண்ட் ருமாடிஸம் கேர் சென்டர்' ருமடாலஜிஸ்ட் டாக்டர் ஜி. ராஜசேகரிடம் கேட்டபோது...

**சமீபகாலமாக, ஆஸ்டியோ ஆர்த்ரைடிஸ் நோய் பற்றி அதிகமாகப் பேசப்படுகிறது. அதைப் பற்றி விளக்குங்கள்.**

ஆஸ்டியோ ஆர்த்ரைடிஸ் என்பது மூட்டுத் தேய்மான நோய்! நாற்பது வயது கடந்தவர்களை வெகுவாக பாதித்து வருகிறது. இந்த நோய் தாக்கினால், அதிக நேரம் நிற்க முடியாது. அதிக தூரம் நடந்தால் முதுகு, கால் எல்லாம் வலிக்கும். தரையில் அமர்ந்து எழும்போது, மூட்டுக்களில் வலி பின்னும். மாடிப்படிகளில் ஏற சிரமமாகும்.



**ஆஸ்டியோ ஆர்த்ரைடிஸ் ஏன் வருகிறது?**

இரண்டு எலும்புகளுக்கிடையே ஜவ்வு






போன்ற பொருள் உள்ளது. இதற்கு கார்டிலேஜ் என்று பெயர். மிருதுவாகவும், வழவழப்பாகவும் இருக்கிற கார்டிலேஜ் உலர்வதால், மூட்டுகள் தேய்மானம் அடைகின்றன. வயதாகும் போது முழங்கால் மூட்டுகளில் உள்ள நீர் குறைவதாலும், ஜவ்வு தேய்வதாலும் இரு எலும்புகளுக்கிடையில் உள்ள இடைவெளி குறைந்து, மூட்டுத் தேய்மானம் ஏற்படுகிறது.

கடினமான வேலைகளைச் செய்பவர்களுக்கும், உடல் எடை அதிகமுள்ளவர்களுக்கும், உடற்பயிற்சி இல்லாதவர்களுக்கும் மூட்டுகள் பெரிதும் பாதிக்கப்படும். சிலருக்கு தூங்கி எழும்போது, மூட்டுகள் இறுக்கமாக இருக்கும். கால் வளைவு ஏற்படும். கழுத்து எலும்பில் தேய்மானம் ஏற்பட்டால், கை மரத்துப் போதல், வலி, உணர்ச்சிக் குறைவு போன்றவை ஏற்படலாம்.

**எலும்புகள் ஏன் வலுவிழக்கின்றன?**

எலும்புகளில். கால்ஷியம் சத்து குறைவதுதான் முக்கியக் காரணம். சுண்ணாம்புச் சத்து குறைபாட்டினால் எலும்புகளுக்கு எடையைத் தாங்கும் சக்தி குறைகிறது இந்தக் குறைபாட்டைதான் ஆஸ்டியோ போரோஸிஸ் என்பார்கள்.

தவறான உணவுப் பழக்கம், மாத விலக்கு நிற்கும் சமயங்களில் ஏற்படும் ஹார்மோன்களின் மாற்றம் போன்றவற்றால், நாற்பத்தைந்து வயதுக்குட்பட்ட பெண்களின் எலும்புகள் வலுவிழக்கின்றன.

புகை, புகையிலை, மது போன்ற பழக்கங்கள் உடையவர்களையும், எலும்புகளுக்கு வேலையே தராமல் உடல் அசைவுகள் ஏதும் இல்லாமல் ஒரே இடத்தில் அமர்ந்து வேலை செய்யும் ஆண்களையும் இந்த நோய் அதிகமாகத் தாக்குகிறது.



• டாக்டர் ஜி. ராஜசேகர்

வயதானவர்கள், குறிப்பாக பெண்கள் ;வறி கீழே விழுந்து விட்டால், இடுப்பு ாலும்பு முறிவதன் முக்கியக் காரணம், தொடை எலும்பின் மேற்பகுதி வலு விழந்து போவதுதான். மிதமான உடற் பயிற்சி செய்து, கால்ஷியம் மிகுந்த உண வைச் சாப்பிட்டு, உடல் எடை கூடாமல் பார்த்துக் கொண்டாலே, ஆஸ்டியோ போரோஸிஸ் வராமல் தடுக்கலாம்.

**கால்ஷியம் சத்து கிடைக்க என் னென்ன சாப்பிட வேண்டும்?**

நாம் உட்கொள்ளும் நூறு மில்லி பசும்பாலில், இருநூற்று இருபது மில்லி கிராம் கால்ஷியம் சத்து உள்ளது. அதே அளவு எருமைப் பாலில் இருநூற்றுப் பத்து மில்லி கிராம் கால்ஷியம் சத்து உள்ளது. சராசரியாக ஒரு பெண்ணுக்கு, நாள் ஒன்றுக்கு ஆயிரம் முதல் ஆயிரத்து ஐந்நூறு மில்லி கிராம் கால்ஷியம் தேவைப்படுகிறது. எனவே, அனைவரும் குறைந்த பட்சம் அரை லிட்டர் பாலா வது சாப்பிட வேண்டும். அது தவிர காலிஃப்ளவர், பீட்ரூட், முட்டைக் கோஸ் போன்ற காய்கறிகளிலும், கீரை களிலும், தவிடு கொண்ட கோதுமை, கேழ்வரகு, சோயா பீன்ஸ், மக்காச் சோளம், பருப்பு, பயறு வகையிலும், கால்ஷியம் மிகுந்துள்ளது. அசைவ உணவில் முட்டை, நண்டு, மீன் போன்றவற்றில் கால்ஷியம் அதிகமிருக் கும். சுண்ணாம்புச் சத்து, உடல் ஆரோக்கியம் தரும் சூப்பர் சத்து என்பதை நினைவில் கொள்ளவும்.

**மூட்டுத் தேய்மானத்தால் ஏற்படும் வலியை எப்படிப் போக்குவது?**

மருத்துவரின் ஆலோசனைப்படி வலி நிவாரண மருந்துகளை உட்கொள்ளலாம். 'வேக்ஸ்பாத்' எனப்படும் மெழுகு ஒத்தடம் மூட்டு வலியைக் குறைக்கும். நாளுக்கு நாள் முன்னேறிக் கொண்டி ருக்கும் மருத்துவ அறிவியலின் உதவி யால், மூட்டுக்களின் உள்ளே ஈரப் பசையை அதிகரிக்கச் செய்யும் மருந்து களும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. 'ஹையலூரானிக் ஆஸிட்' எனப்படும் மருந்து, பாதிக்கப்பட்ட மூட்டுக் குள் நேரடியாகச் செலுத்தப்படுகிறது. இதனால் ஒன்று முதல் ஒன்றரை வருடம் வரை மூட்டு வலி இல்லாமல் இருக்க முடியும். மூட்டு வலியைப் போக்க, ஃபிசியோதெரபி பயிற்சிகளும் உதவு கின்றன. குறிப்பாக, Quadriceps எக்ஸர் சைஸ்கள் முன் தசைகளைப் பலப்படுத்தி, வலியைக் குறைக்கும்.

**இதிலிருந்து தப்பிக்க என்ன வழி?**

எலும்புகளை பலவீனமாக்கும் ஆபத்தான நோய் என்ற விழிப்புணர்வு வர வேண்டும். ஆஸ்டியோ போரோஸிஸ் பாதிக்கப்பட்டவர் களுக்கு வலி இருக்க வேண்டும் என்ற அவசியமே இல்லை. சைலன்ட் கில்லர் போல, தன் வேலையைக் காட்டிவிடும். வயதானவர்களுக்கு கூன் விழுவதும் ஆஸ்டியோபோரோஸிஸ் தரும் அபாயம் தான்.

வந்த பின் அவஸ்தைப்படுவதை விட, வராமலிருக்க வழிமுறைகளைக் கையாள்வதே சிறந்தது. தினசரி உடற் பயிற்சி செய்து, உடல் எடை கூடாமல் பார்த்துக் கொண்டாலே பாதி சிக்கல் தீர்ந்தது. கால்ஷியம் சத்து மிக்க உணவை அதிகமாகச் சேர்த்துக் கொண்டால் மீதிச் சிக்கலும் தீரும்.

**— மினி**



"மந்திரியாரே... நம் மண்ட லாதிபதிகளிடமிருந்து இன்று ஓலைகள் ஏதும் வரவில்லையே, ஏன்?"

"இன்று புறாக்கள் ஸ்டிரைக் மன்னா!"

- அம்பைதேவா




# கோகுலம் சந்தா செலுத்துங்கள்; கதை கேளுங்கள்!

எப்படி பெறலாம்?

* புதிதாக சந்தா செலுத்தலாம் ☐
* ஏற்கெனவே உள்ள சந்தாவை மேலும் ஓர் ஆண்டுக்கு நீட்டிக்கலாம் ☐
* உங்கள் நண்பருக்குப் பரிசாக சந்தா கட்டி நீங்கள் காஸெட் பெறலாம். ☐

பெயர்: ..........................................................

முகவரி: ..........................................................

..........................................................

..........................................................

..........................................................

நண்பரின் பெயர்: ..........................................................

முகவரி: ..........................................................

..........................................................

..........................................................

..........................................................

ஒரு வருட சந்தா ரூ. 72/-. இதை டிமாண்ட் டிராஃப்ட் அல்லது மணியார்டராக அனுப்புங்கள். இந்தத் தொகை 'Gokulam Tamil' என்ற பெயருக்கு இருக்க வேண்டும். வெளியூர் காசோலைகள் அனுப்பினால் ரூ.20/- கூடுதலாக சேர்த்து அனுப்புங்கள்.

*அனுப்ப வேண்டிய முகவரி:*

**சர்க்குலேஷன் மானேஜர்,**
**கோகுலம் (தமிழ்)**
**கல்கி பில்டிங்ஸ்,**
**47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097**

# 4. போலித் துறவி

எந்தச் சந்தர்ப்பத்திலும் உணர்ச்சிகளுக்கு அதிகம் இடம் கொடுக்காதவரென்றும், எந்தச் சிக்கலான சூழ்நிலையிலும் பரம நிதானமாகச் செயல்படுபவரென்றும் பெயரெடுத்திருந்த சோழர் படைத்தலைவர் விக்கிரமவரையரின் சித்தத்தில், அந்த வாள் பெரும் நினைவலைகளைக் கிளப்பி விட்டிருக்க வேண்டும். கடந்து போன சரித்திர நிகழ்ச்சிகளாக அவர் அறிந்திருந்தவை எத்தனை உண்மை என்பதை, அவர் மனம் உணர்ந்திருக்க வேண்டும்.

அந்த வாளின் பூர்வீகம் என்ன என்பதிலோ, அது எவருடையது என்பதிலோ அவருக்கு எவ்விதச் சந்தேகமும் இல்லை. அந்த வாளைக் கண்ட அவரது விழிகளில் ஒரு பக்தியும், மரியாதையும் கூடத் தெரிந்தன.

அவரது கூர்விழிகள் சற்றுத் திரும்பி பராந்தகன் இருந்த இடத்தை நோக்கின. மயக்கத்திலிருந்து விடுபட்டிருந்த பராந்தகன், முதியவரிடம் ஏதோ கூறிக் கதறிக் கொண்டிருந்தான். அவனது அகன்ற நெற்றியையும், துயரம் மண்டிக் கிடந்த பெருவிழிகளையும் உற்றுக் கவனித்தவர் முகத்தில், அடையாளம் கண்டு கொண்ட திருப்தி பூரணமாகப் படர்ந்தது. அடுத்து, "சோழ உக்ரோதயம் உன்னை நாடி வந்ததன் காரணம் இப்போது புரிகிறது பராந்தகா" என்று அவர் உதடுகள் முணுமுணுத்தன.

பராந்தகனைத் தேற்றியபடியே அவனை படைத்தலைவரிடம் அழைத்து வந்த முதியவர், அவரது கரங்களில் கிடந்த பேழையையும், உள்ளிருந்த பெரும் வாளையும் கவனித்து, படைத் தலைவரின் விழிகளில் விரிந்த கேள்விக்கு பதிலாக மெல்ல முறுவலித்தார். அத்தனை சோகத்திலும் அந்த முறுவலில் ஒரு பெருமிதம் மிதந்தது.

"படைத்தலைவரே, தாங்கள் எண்ணுவது மிகச் சரியே. இது அந்த வாள்தான். பராந்தகனும் அதற்கு உரியவன்தான். ஆனால் அவனுக்கே இதைப் பற்றிய முழு விவரமும் தெரியாது" என்றார் முதியவர்.

"பராந்தகனின் தந்தை...?" இழுத்தார் படைத் தலைவர்.

"கருணாகரர்... அவரது பெயர் அதுதான். அவரது பாட்டனாரின் பெயரையே அவர் ஏற்றிருந்தார். அரசியல் சதிகளையும், போர்களையும், மன்னர்களையும் வெறுத்து, அமைதியான வாழ்வையே விரும்பினார் அவர். பராந்தகனையும் அவ்வாறே வளர்த்தார். ஆனால் என்ன? அரசியல் சிக்கல்கள் அவனை நாடி வருகின்றன" முதியவரின் குரலில் வருத்தம் தொனித்தது.

ஏதும் புரியாமல் விழித்துக் கொண்டு நின்றிருந்த பராந்தகனின் இடையில், தமது கச்சையைக் கழற்றி அணிவித்த படைத்தலைவர், தம் வாளுறையையும் அதில் மாட்டினார். அந்தப் பேழையிலிருந்து வாளை எடுத்து அதில் செருகியவர், "பராந்தகா, இந்த வாள் உன் முன்னோர் பயன்படுத்திய வாள். இந்த வாளைக் கண்டு சாளுக்கியர் நடுங்கினார்கள். அவர்கள் தலைநகரத்தையே எரித்தது இது. கங்கர்கள் சிதறி ஓடினார்கள். கலிங்கர்கள் கதி கலங்கினார்கள். கடாரத்திலிருந்து சீனம் வரை இதன் புகழ் பரவிக்

# முகுட வைரம்

விஷ்வக்ஸேனன்



கிடந்தது. வீரத்திலும், சிற்பக் கலையிலும் பெரும் காவியங்களைப் படைத்த மாமன்னனின் வாள் இது. சோழ நாட்டுப் பெண்ணொருத்தியின் மாசற்ற அன்புக்குக் கட்டுப்பட்டு, இங்கேயே தங்கி விட்டது.

நீ மீண்டும் இதை எடுத்துப் பயன் படுத்த வேண்டும். ராஷ்டிர கூடரைத் தமிழகத்திலிருந்து விரட்டி சோழ நாட்டை சுதந்திர நாடாக்க வேண்டும்'' என்றார் உணர்ச்சி பொங்கிய குரலில்.

,முதியவரின் குரலும் ஒலித்தது. ''ஆம். பராந்தகா, படைத் தலைவர் கூறியவை உண்மையென்பதை நீயே பின்னர் உணருவாய். தேவையான பயிற்சியை அளிக்க நம் படைத்தலைவர் இருக்கிறார். நீ இன்றே புறப்படு. சோழ மண்ணுக்கும், இந்த வண்டாழஞ் சேரிக்கும் பெருமை சேர்த்து வா''.

பராந்தகனின் முகம் தெளிவடையத் தொடங்கியது. இரண்டாவது தினம் உதயத்தில் புறப்பட்ட படைத் தலைவருடனும், சோழ வீரர்களுடனும் பராந்தகனும் புறப்பட்டான். ஒரு நாள் முழுதும்





"ஆன்னு அலறியபடி முழிச்சுக்கிட்டியே! ஏதும் பயங்கரக் கனவா?"

"ஆமா! உங்கம்மாவுக்கு நீங்க புதுப்புடைவை எடுத்துத் தர்றமாதிரி!"

- உ. ராஜாஜி

தெற்கு நோக்கி நீண்ட அவர்களின் பயணம், வடக்கே திரும்பி எதிரே தெரிந்த கானகத்துக்குள் ஊடுருவியது.

கானகத்தின் நடுவில் பந்தங்கள் பல எரிந்து கொண்டிருப்பதையும், புலிக் கொடி பறந்த கூடாரங்களையும், வீரர்கள் பலர் வெகு தீவிரமான பயிற்சிகளில் ஈடு பட்டுக் கொண்டிருப்பதையும் கண்டான் பராந்தகன்.

விரிவில், கதை, சக்கரம், முட்கரம், வாள், சுரிகைப் படை, சத்தி, சுருக்கடை, வேல், எரிமுத்தலை, சுப்பரை, மெய் பயிற்கோல் என தமிழகத்தின் அத்தனை ஆயுதங்களிலும், வீரர்கள் பயிற்சி பெற்றுக் கொண்டிருப்பதைக் கண்ட பராந்தகன் புரவியிலிருந்து குதித்து இறங்கினான்.

**பா**ண்டிய நாட்டின் வட கோடி எல்லைப்புறத்தை அடுத்திருந்தது அந்தப் பயணிகள் சத்திரம். ராஷ்டிர கூடத்தி லிருந்தும், மாளவத்திலிருந்தும், இன்னும் வட நாட்டிலிருந்தும் பாண்டிய நாட் டுக்குள் நுழையும் வணிகர்களுக்கெல் லாம் தங்கிச் செல்லுமிடமாகவும், உறையூர், மதுரை என்று பாண்டிய நாட் டின் நகரங்களை அடையும் வரை, உணவு சேமித்துக் கொள்ளவும் பயன்பட்டது அந்தச் சத்திரம். அன்றைய தினம் வழக் கத்துக்கு மாறாக, அந்தச் சத்திரத்தில் வணிகர்களைவிட, துறவிகளின் கூட்டம் அதிகமாகத் தெரிந்தது.

சத்திரத்தின் நடுவிலிருந்த பெரும் கூடத்தில் கூடியிருந்த காவியுடைக் கூட்டம், பார்வைக்கு துறவிகளாகத் தெரிந்ததேயொழிய, அவர்கள் நடையுடை களும், முரட்டுத்தனமான தோற்றமும், சிவந்து கிடந்த கண்களும் சந்தேகத்தை எழுப்பினாலும், அவர்களை நெருங்கி விசாரிக்கவோ, சகஜமாகப் பேசவோ, சத்திரத்திலிருந்த மற்ற வணிகர்களுக்குத் துணிவு ஏற்படவில்லை. போதாக் குறைக்கு கூடத்தின் கிழக்கு மூலையில் இருந்த நடராஜர் விக்கிரகத்தின் முன்பாக அமர்ந்த அந்தத் துறவிகளில் ஒருவர் தேவாரப் பாடலொன்றைப் பாட, மற்ற வர்கள் கர்ணகடூரமான குரல்களில் பின் தொடர்ந்து பாடவும் தொடங்கினார்கள். அவர்கள் பாடினார்கள் என்பதைவிட, கூச்சலிட்டார்கள் என்பதே பொருத்தமா யிருக்கும்.

தேவாரப் பாடலையும், தமிழையும் அவர்கள் கடித்துக் குதறிய விதத்தில், அவர்கள் வேற்று மொழி பேசுபவர்கள் என்பது தெளிவாகவே புரிந்தது. இன்னும் சற்று நேரம் அவர்களது இசை தொடர்ந் திருந்தால், கூடத்தின் மூலையில் இடது பாதம் தூக்கி நின்று நடமாடிக் கொண் டிருந்த நடராஜப் பெருமான், சர்வ நிச்சயமாக பாதத்தைக் கீழே இறக்கி, சத்திரத்தை விட்டு ஓடியிருப்பார் என்ற நிலை எட்டிக் கொண்டிருந்தது.

நடராஜப் பெருமானைக் காக்க, சத் திரத்தின் வாயிலில் வேகமாக வந்து நின்றது, ஒரு புரவி. புரவியில் வந்த மற்றொரு துறவியைக் கண்டதும், சங்கீதம் பயின்று கொண்டிருந்தவர்களின் பாடல்

சட்டென்று நின்றது. நிம்மதிப் பெருமூச்சு விட்ட நடராஜப் பெருமான், வாயிலில் புரவியில் வந்து அங்கேயே நின்ற துறவியை நன்றியுடன் கவனித்தார்.

அந்தத் துறவியின் முகத்தில் கருணைக்கு பதில் குரூரம் சொட்டிக் கொண்டிருந்தது. பழுப்பு நிற விழிகளில் நரியின் சாகசமும், ஓநாயின் குரூரமும் கலந்து கிடந்தன. அடுத்து அவன் காட்டிய சைகையைத் தொடர்ந்து, உள்ளேயிருந்த துறவிகள் அனைவரும் எழுந்து வெளியே நடந்தார்கள்.

சத்திரத்தை விட்டுத் தள்ளியிருந்த பெரும் மரமொன்றை அடைந்த துறவிகள், அதன் கீழே கும்பலாக அமர்ந்தார்கள். வந்த துறவி தன் குரூரம் சொட்டிய விழிகளால் அனைவரையும் ஒருமுறை அளவெடுத்தான். அவன் முக லாவண்யத்தை இன்னும் அதிகப் படுத்திய நீண்ட மீசையையும், நெற்றிக்குக் குறுக்கே கிடந்த தழும்பையும் அவன் விரல்கள் ஒருமுறை தடவிக் கொண்டன. அவனது கனத்த குரலும் அடுத்து பெரிதாக ஒலித்தது. அந்தத் துறவிகள் யாரென்பதும் உடனே புரிந்தது.

''வீரர்களே, கவனமாகக் கேளுங்கள். நாம் இன்றே, இப்போதே புறப்பட உத்தரவு வந்துவிட்டது. நாம் முதலில் பாண்டியர் படை திரட்டுவதைத் தடை செய்ய வேண்டும், பலவீனப்படுத்த வேண்டும்.''

''பலவீனப்படுத்துவதா? எப்படி தலைவரே?'' வெகு சிரத்தையுடன் சந்தேகம் கேட்கும் வேத பாடம் பயிலும் மாணவனாகக் கேட்டான் ஒரு வீரன்.

''பலவீனப் படுத்துவது என்றால், ... முக்கியப் படைத் தலைவர்களை அகற்றிவிடுவது, தீர்த்துக் கட்டுவது, படைகளுக்காக சேமித்து வைக்கப்பட்டிருக்கும் தானியக் கிடங்குகளையும், ஆயுத சாலைகளையும் அழிப்பது, புரிகிறதா?''

''புரிகிறது தலைவரே''

''இன்னும் கேளுங்கள். நாம் செல்வது நேரிடையான போர் செய்வதற்கு அல்ல. எந்த வகையிலும் நம் நோக்கம் நிறைவேற வேண்டும். அவ்வளவுதான். புறப்படுங்கள்''

துறவி வேடமணிந்த அந்தக் கூட்டம் அப்பொழுதே சத்திரத்தின் பின்புறம் கட்டியிருந்த புரவிகளை அவிழ்த்துக் கொண்டு, தெற்கு நோக்கிக் கிளம்பியது.

ஏறக்குறைய கதிரவன் மேற்கில் சரிய ஒரு நாழிகை இருக்கும்வரை பயணித்தவர்கள், எதிர்ப்பட்ட கானகத்தினுள் நுழைந்து ஊடுருவினார்கள். வரவர அடர்ந்து கொண்டே வந்த அந்தக் கானகத்தின் ஒரு பகுதிக்கு வந்ததும், அனைவரையும் நிற்க உத்தரவிட்டான் அந்தத் துறவி.

மிக நெருக்கமாக மரங்கள் அடர்ந்து கிடந்த அந்தக் கானகத்தில், மாலைப் பொழுது நெருங்கிக் கொண்டிருந்ததால் எழுந்த பறவைகளின் கூச்சல் உச்சத்தை எட்டிக் கொண்டிருந்தது. பட்சிகளால்

*"நான் காதலிச்ச ஆசாமி மனநிலை சரியில்லாதவனோனு சந்தேகமாயிருக்கு."*

*"ஏண்டி?"*

*"எப்ப நம் கல்யாணத்தை வச்சுக்கலாம்னு தினம் தொணப்பறானே!"*

*- உ. ராஜாஜி*



அவ்வப்போது கிளைகளிலிருந்து விரட்டப்பட்ட குரங்குகள் கிறீச்சிட்டு, தம் குரல் வளம் பறவைகளுக்குச் சற்றும் சளைத்ததல்ல என்று காட்டிக் கொண்டிருந்தன.

"தலைவரே, நாம் எங்கிருக்கிறோம்?" என்றான் ஒரு வீரன்.

"நாம் இருப்பது உறையூரின் வடக்குப் பகுதி. காவிரியின் வடகரையிலிருக்கும் கானகம் இது. இங்குதான் நம் முதல் பணி துவங்குகிறது."

"முதல் பணியா?"

"ஆம். பாண்டியர் படையிலிருந்து மிக முக்கியமாக அகற்றப்பட வேண்டியவர் உறையூரில்தான் இருக்கிறார். இவரைப் பொறுத்தவரை, அகற்றுவதென்பது செயலிழக்கச் செய்வதோ, கடத்தி வருவதோ அல்ல" என்றவன், கழுத்துக்குக் குறுக்கே தன் கையை வைத்து இழுத்துக் காட்டி, "புரிந்ததா?" என்றான்.

"உறையூரின் கோட்டை மிகப் பலமானதென்று கேள்வி. நாம் எப்படி உள்ளே புக முடியும் தலைவரே?"

"நாம் கோட்டைக்குள் புக வேண்டிய அவசியமில்லை. அந்த மனிதர் தினமும் வீரர்களுக்குப் பயிற்சியளித்து முடித்தபின், அந்தி சாயும் வேளையில் காவிரித் துறைக்கு வந்து நீராடிச் செல்வது வழக்கம். நாம் நிற்குமிடத்திலிருந்து நேர் தெற்கே, அரைக்காத தூரத்தில் காவிரித் துறை இருக்கிறது"

"அவருடன் காவலர்கள்... வீரர்கள்...?"

"எவரும் உடன் வருவதில்லை. நமது பணியை அங்கேயே முடித்துக் கொள்ளலாம். ஆனால்..."

"ஆனால் என்ன தலைவரே?"

"எச்சரிக்கையாக அணுக வேண்டும் அவரை. குறைந்தது இருபதின்மராவது என்னுடன் வரச் சித்தமாக இருங்கள்." தலைவன் குரலில் எச்சரிக்கை பலமாகத் தொனித்தது.

"என்ன, இருபது வீரர்களாவது தேவையா? அதுவும் தனித்து வரும் ஒருவரைத் தீர்க்க?" வீரன் குரலில் அவநம்பிக்கை ஒலித்தது.

"ஆம்."

"யார் அவர் தலைவரே?" வீரர்கள் குரலில் சந்தேகம் ஒலித்தது.

"பாண்டியரின் பிரதான படைத்தலைவர், அநிருத்தர்" என்றான் வீரர் தலைவன், தன் நெற்றியின் குறுக்கே ஓடிய தழும்பைத் தடவியபடியே.

(தொடரும்)

## நமக்கு மஞ்சள் டோய்!

ஒலிம்பிக் கொடியில் உள்ள ஐந்து வளையங்கள், ஐந்து கண்டங்களைக் குறிக்கும் என்பது நமக்குத் தெரியும். எந்த நிறம் எந்த கண்டத்தைக் குறிக்கும்?

நீலம் - ஐரோப்பா,
மஞ்சள் - ஆசியா,
கறுப்பு - ஆப்பிரிக்கா,
பச்சை - அமெரிக்கா,
சிவப்பு - ஆஸ்திரேலியா.

- ஆர்.ஆர். பூபதி,
திண்டுக்கல்



# அய்யனார்சாமி மட்டும்...

எல்லாம் மாறிவிட்டன
எங்கள் ஊரில்.
பச்சைப் பசேல்னு நெல் முளைச்ச
இடத்தில்
ஓட்டல் முளைத்து
விண்ணென்று விறைத்து நிற்கிறது.

எங்களூர் பொண்ணுகளெல்லாம்
முளைப்பாரி எடுத்துப்போகும்
மழைமாரியம்மன் கோவிலை மறைத்துக்
கொண்டு
வீடியோ பார்லர்.

மண்ரோடில்
புள்ளத்தாச்சி மாதிரி வந்து நிற்கும்
பஸ்சுகளுக்கெல்லாம்
தாய் மாதிரி விசிறிவிடும் அரசமரத்தை
வெட்டிவிட்டு
எஸ்.டி.டி.பூத்தும்
இன்டர்நெட் சென்டரும்
வைத்துவிட்டார்கள்.

கட்டணக் கழிப்பிடமாக மாறிவிட்டன
பூட்டும்வரை நான் அமர்ந்து
அன்றாடம் படித்த கிளை நூலகமும்
அதற்குப் பக்கத்தில் இருந்த
இத்தனூண்டு வ.உ.சி. சிலையும்.

பஸ் ஸ்டாண்டாகி விட்டன
ஜெயலட்சுமி டூரிங் டாக்கீசும்
சுற்றியிருந்த சத்தியமூர்த்தி பூங்காவும்.

நெத்திலியும் குரவைமீனும்
சாதி மறந்து நீந்தித் திரிந்த
கண்மாய் எல்லாம்,
ஃபிளாட் வீடுகளாக மாறிப்போக,

கண்மாய்க் கரையில் இருந்து
ஊர் காத்த
அய்யனார்சாமி மட்டும்
இன்னும் மாறாமல் -
அப்படியே -
அரிவாளும் கையுமாக!

பாலு மணிவண்ணன்

**மாணவர்கள் கட்டாயம் படிக்க வேண்டிய தொடர்!**





## ஹலோ, இறைவா 4

ஒரு பள்ளிக்கூடத்துக்குப் போயிருந்தபோது, மாணவர்கள் முகத்தில் உற்சாகமில்லாமல் ரொம்ப டல் அடித்தது.

பள்ளிக்கூட பிரின்ஸிபாலிடம், நான் கவனித்ததைச் சொன்னபோது, "ஆமாம், ஸ்வாமிஜி! நீங்கள் சொல்லுவது சரிதான்! இப்போதெல்லாம் மாணவர்களுக்கு ஏகப்பட்ட டென்ஷன்! காலையில் எழுந்தால், அவசரம் அவசரமாய் ஏதோ சாப்பிட்டதாகப் பேர் பண்ணி விட்டு, புத்தக மூட்டை, தண்ணீர் பாட்டில், லஞ்ச் பாக்ஸ் எல்லாவற்றையும் தூக்கிக் கொண்டு, நேரத்துக்கு ஸ்கூலுக்கு ஓட வேண்டுமே என்று டென்ஷன். பள்ளிக் கூடத்துக்கு வந்து விட்டாலோ, வகுப்பில் டென்ஷன். வீட்டுக்குப் போனால் டென்ஷன். டியூஷன் டென்ஷன், டெஸ்ட் டென்ஷன்... பார்க்கிற டீ.வி. சீரியல்களில் கூட டென்ஷன் டென்ஷன்... டென்ஷன்தான். எனக்கே கூட சில சமயங்களில் மாணவர்களைப் பார்க்க ரொம்பப் பரிதாபமாக இருக்கும். பள்ளிக்கூடம் என்பது சந்தோஷமான சூழ்நிலை கொண்ட இடமாக இருக்க வேண்டும்; பாடங்கள் சுவாரசியமாய் இருக்க வேண்டும். ஆனால் நடைமுறையில் என்ன நடக்கிறது? பள்ளிக் கூடம் டென்ஷன் கூடமாக இருக்கிறது" என்று ஆழ்ந்த கவலையை வெளிப்படுத்தினார்.

அடுத்து, நான் பங்கேற்ற நிகழ்ச்சியில், அந்தப் பள்ளிக் கூடத்தின் மாணவர்களுக்கு புது அனுபவம் ஒன்று கிடைத்தது. அவர்களுக்கு ஒரு மந்திரம் சொல்லிக் கொடுத்தேன். "நான் ஒரு திறமைசாலி; எனக்கு எதையும் கற்றுக் கொள்கிற ஆர்வம் இருக்கிறது. எனக்கு நிறைய தன்னம்பிக்கை இருக்கிறது" என்பதுதான் அந்த மந்திரம்.

நான் மாணவர்கள் மத்தியிலிருந்து ஐந்து பேரை அழைத்தேன். அவர்களை வட்டமாக நிறுத்தி வைத்தேன். மந்திரத்தைக் கொஞ்சம் மாற்றிச் சொல்ல வைத்தேன். அதாவது முதல் மாணவன், இரண்டாவது மாணவனைப் பார்த்து, 'நீ ஒரு திறமைசாலி! உனக்கு எதையும் கற்றுக் கொள்ளும் ஆர்வம் இருக்கிறது. உனக்கு நிறைய தன்னம்பிக்கை இருக்கிறது" என்று சொல்வான்.

அதனைத் தொடர்ந்து, இரண்டாவது மாணவன், மூன்றாவது மாணவனைப் பார்த்து, நான் சொல்லிக் கொடுத்த மந்திரத்தைச் சொல்லுவான்.

ஒரு சுற்று சொல்லி முடிந்ததும், நான் அந்த மாணவர்களைப் பார்த்துச் சொன்னேன்: "நான் சொல்லிக்

சுவாமி போதமயானந்தா

# டானிக் வார்த்தைகள்!

கொடுத்த மந்திரத்தை சரியாகச் சொன்னீர்கள். பாராட்டு. ஆனால் அதை வெறுமனே வார்த்தைகளாக நினைத்து உதடுகளால் உச்சரிப்பதற்கு பதிலாக, ஒரு நிமிடம் உங்கள் மனத்தில், பக்கத்தில் இருப்பவர் உங்களுக்கு மிகவும் நெருக்க மான நண்பர் போலவும், அவருக்கு ஏதோ மனச் சோர்வு இருப்பது போல வும், அவர் உங்களிடம் உதவி நாடி வந்தி ருக்கிறார், அவர் மீது மிகுந்த அக்கறை கொண்ட நீங்கள், அவரது மனச்சோர்வு விலகி, மனம் சந்தோஷப்படவேண்டும் என்பதற்காக, கொஞ்சம் டானிக் வார்த் தைகள் பேசுவது போலவும் கற்பனை செய்து கொள்ளுங்கள்."

"நீங்கள் மந்திரத்தை உச்சரிக்கிறபோது, முகத்திலே கனிவுடன், உண்மை அன்பை வெளிப்படுத்தி, மந்திரவார்த்தைகளைச் சொல்லுங்கள்" என்றேன். மாணவர்கள் அப்படியே செய்தார்கள். இது சுமார் ஐந்து நிமிட நேரம் நிகழ்ந்தது. அதன்பின், அந்த ஐந்து மாணவர்களிடமும், தங்களின் அனுபவத்தை மற்ற மாணவர்களுடன் பகிர்ந்து கொள்ளச் சொன்னேன்.

அதில் ஒரு மாணவன், "எனக்குநானே மந்திரத்தைச் சொல்லிக் கொள்வதைவிட, என் நண்பன் சொன்னபோது, நிஜமா கவே நான் திறமைசாலி, எனக்கு கற்றுக் கொள்ளுகிற ஆர்வம் நிறைய இருக்கிறது; எனக்கு நிறைய தன்னம்பிக்கை உள்ளது என்கிற மாதிரி ஒரு உணர்வு ஏற்பட்டது" என்றான். மனோதத்துவ ரீதியில், தன்னம்பிக்கையை வளர்க்க இத்தகைய மந்திரம் மிகவும் உகந்தது என்பது நிரு பணமான ஒரு உண்மை.

உங்களுடைய சோர்வான தருணங் களில், நீங்களே கூட இந்த மந்திர வார்த் தைகளைச் சொல்லி, உங்களுக்கு தன்னம் பிக்கை ஊட்டிக் கொள்ள முடியும்.

தன்னம்பிக்கையை வளர்த்துக் கொள்ள இன்னும் ஒரு வழியும் உண்டு. அது என்ன? நிறையப் புத்தகங்கள் படிப் பது! அதுவும் எப்படிப்பட்ட புத்தகங்கள் தெரியுமா? பெரிய மனிதர்களுடைய வாழ்க்கை வரலாறுகள்!

பெரிய மனிதர்களாகவே யாரும் பிறப்பது இல்லை. நற்பண்புகளைப் பெற்று, நன்றாய்ப் படித்து, கடுமையாக உழைத்து, மற்றவர்களுக்காகத் தயங்காமல் தியாகங்கள் செய்து... அவர்கள் வாழ்க் கையில் சந்தித்த சவால்கள், தோல்விகள், சோர்ந்து போய், தன்னம்பிக்கை இழந்து நின்ற தருணங்கள்... மறுபடியும் உத்வேகத் துடன் செய்த முயற்சிகள், வெற்றிகள், இவை எல்லாவற்றையும் ஆழ்ந்து, அனு பவித்துப் படிக்கிறபோது, அது உங்களுக் குள் கண்டிப்பாக நல்லவிதமான பாதிப்பை ஏற்படுத்தும். இதை எந்த சாமி முன்னாலும் சூடம் அணைத்து சத்தியம் செய்து தருவேன்.

(இப்போதைக்கு விடை பெறுகிறேன்)

படம்: **யோகா, ஸ்ரீஹரி**

# வெளிக்காற்று

## தமிழினியன்

"பார்வதி... இன்னிக்கு என்ன டிஃபன்?"

"ஏதோ ஒண்ணு... ஏன்.. எதுக்கு இந்தக் கேள்வி."

"மணி ஒன்பதாச்சு இல்லே."

"அப்படி, என்ன மணியடிச்ச அவசரம். வேலைக்கா போகப் போறீங்க."

"இல்லே.. நான் வேலை இல்லாதவன் தான். ஆனா அது வயித்துக்குத் தெரியாதே."

"வயித்துக்குத் தெரியலேன்னா... மூளைக்குத் தெரிய வேணாமா."

அட..... ராமா.

சுவரில் தொங்கிய பட்டாபிஷேக ராமனை நோக்கி பெருமூச்சுவிட்டார் சதாசிவம் - ஃபோர்மேன் (ரிடையர்டு). அவருக்கு குளித்து முடித்த கையோடு வயிற்றுக்கு ஈய வேண்டும். இல்லாவிட்டால் வயிறு அவரைப் பாடாய்ப் படுத்தும். ஆகவே - பணியில் இருந்த நாட்களில் அவர் குளியல் அறைவிட்டு வெளியேறக் கண்டாலே, "தோ... தட்டு வைக்கிறேங்க" என்று பரபரப்பாகி விடுவாள், பார்வதி.

ஆனால் இப்போதோ... 'நரி வலம் போனால் என்ன... இடம் போனால் என்ன' என்ற பாராமுகம்.

மனைவி மட்டும்தானா. மகன் முரளியும் அப்படித்தான். முன்பெல்லாம் பேத்திக்கு, அதாவது அவனது மகளுக்கு 'வாட்டர் பேக்'கூட அவரைக் கேட்காமல் வாங்கமாட்டான். ஆனால் சென்ற வாரம் ஆடித்தள்ளுபடியில் இரண்டு சவரன் செயின் வாங்கி இருக்கிறான். அப்பாவைக் கண்டுக்கவே இல்லை.

மாட்டுப் பெண்ணிடம் மட்டும் என்ன வாழ்ந்தது!

சாயந்திரம் மனுஷன் காலாற கொஞ்சம் வெளியே கிளம்பினால் போதும். அபாயச் சங்கு ஊதி விடுவாள், மகராசி.

"மா... மா... ஏழரைக்குள்ளாற வந்துரணும். லேட்டானால் அப்புறம் பத்தரை மணிக்குத்தான் சாப்பாடு."

சீரியல் படுத்தும்பாடு. கூத்தாட வந்த சின்னத்திரைதான் இப்போது குடும்ப உறவையே பந்தாடிக் கொண்டிருக்கிறதே, என்ன செய்ய?

ஆனால் இதே மருமகள் முன்பெல்லாம் இப்படி இருந்தவள் அல்ல. சதாசிவம் ஒன்பது மணிக்கு ஓவர் டைம் முடிந்து வருவார். எந்த சீரியல் எக்கேடு கெட்டால் என்ன, ஓடி வந்து விடுவாள் மாமாவுக்குத் தட்டு வைக்க.

ஆனால் இன்று அவளிடமும் தலைகீழ் மாற்றம்.

பணி ஓய்வு இப்படியா ஒரு மனிதனைப் பழிவாங்கும்? அச்சாணியாய் இருந்தவரை அடிமாட்டைவிடக் கேவலமாய்... சேச்சே...

மனசு பாரமாய் கனத்தது. கடைவிழிகளில் அவரையும் மீறிய ஈரம். துடைத்துக் கொண்டார்.

அன்று மின்சாரக் கட்டணம் செலுத்தக் கடைசி நாள். புறப்பட்டார் சதாசிவம்.

வாடிக்கையாளர்கள் வரிசையாய் உட்கார்ந்திருந்தார்கள்.

சதாசிவத்தைக் கண்டதும் இரட்டைக் கால் போட்டு அமர்ந்திருந்த ஒருவன் சட்டென்று எழுந்தான். அன்பு கனிந்த புன்னகையுடன், "வணக்கம் சார்" என்றான்.

"அடடே.... ராமதாசா... வணக்கம்... வணக்கம்... எப்படிப்பா இருக்கே?"

"உங்க புண்ணியத்திலே நல்லாருக்கேன், சார்."

"ரொம்ப ஆச்சரியமா இருக்குப்பா."

"எது சார்."

"ரிடையரானாலும்... இத்தனை பேருக்கு முன்னாலே எழுந்து, எனக்கு மரியாதை செய்யறியே. அதைச் சொல்றேன்."

"ரிடையரானால் என்ன சார். எனக்கு நீங்கள் என்றைக்குமே ஃபோர்மேன்தான். அதை மறக்க முடியுங்களா." களங்கமின்றிப் பேசினான் ராமதாஸ்.

சதாசிவத்தின் முகத்தில் ஒரு திடீர் குற்றாலச் சாரல். அவரது கண்கள் இப்போதும் ஈரமாயின. ஆனால் இது வித்தியாசமாக... விருப்பமாக... ●



● ஜெயா தொலைக்காட்சி செய்தி சேனலைத் துவங்குவதில் ஜரூராக இருக்க, மலரப்போவதாகச் சொன்ன ஒரு தொலைக் காட்சி, தனது திட்டங்களைத் தள்ளிப் போட்டிருப்பதாகச் சொல்கிறார்கள். காரணம்: மத்தியில் பா.ஜ.க. போனதில், வாக் களிக்கப்பட்ட நிதியுதவி தாமதமாவதுதானாம்.

● 2003ம் வருடம் தமிழக அரசின் நிதிநிலை அறிக்கையில் 105 கோடி செலவில் வேலைக்கு பணம் + அரிசி என்ற திட்டம் அறிவிக்கப்பட்டது. ஏரிகளை தூர் வாரும் வேலைகளுக்கு, கால் பங்கு பணமாகவும், முக்கால் பங்கு அரிசியாகவும் கூலி கொடுக்க வேண்டும். இதில் பணமாகக் கொடுக்கவேண்டியதைக் கொடுத்து விட்டார்களாம். ஆனால் இருபது மாவட்டங்களில் அரிசி கொடுக்கவில்லையாம். வேலை செய்தவர்கள், "அரிசி எங்கே?" என்று உள்ளூர் அதிகாரி களிடம் நச்சரிக்க, மாவட்ட ஆட்சியா ளர்கள் 'அரிசிக்கு எங்கே போவது?' என்று விழித்துக் கொண்டிருக் கிறார்களாம்.

● தமிழ்நாடு காங்கிரஸ் இனி கொஞ்சம் ஆறுதல் அடையலாம். ஏனென்றால். அங்கே இருக்கும் கோஷ்டிப் பூசல் இப்போது தமிழக பா..ஜ.க.விலும் தொற்றிக் கொண்டுவிட்டதாம். திருநாவுக் கரசரின் செல்வாக்கு. மத்திய பா.ஜ.க. தலைவர்களிடம் உயர



● சிலை சிறப்பு...

# வருகிறது வன்னிய நாடு?

உயர, தமிழக பா.ஜ.க.வில் கோலோச்சிக் கொண்டிருந்தவர்களிடம் படபடப்பை உண்டாக்கியிருப்பதுதான் கோஷ்டிப் பூசலுக்குக் காரணம் என்று சொல்கிறார்கள்.

● தமிழக அமைச்சர்கள் அம்மாவைப் பின்பற்றி, பக்தி சிரத்தையுடன் இருப்பது தெரிந்த விஷயம்தான். அதிலும் அமைச் சர் நைனார் நாகேந்திரன், அலுவலகத்திலும், வீட்டிலும் பூஜை, வழிபாடு என்று அசத்துகிறாராம். அமைச்சர் காலையில் பூஜையை முடிக்காமல் எந்தக் காரியத்திலும் ஈடுபடுவதில்லையாம்.

● சர்க்கரை. நோயால் அவதிப்படும் அமைச்சர் ஓ.பன்னீர் செல்வம் மறக்காமல் காலையில் யோகா செய்கிறார். இரவு

# பிட்டா படியுங்க!



* ''எல்லாம் நாங்களே!''



* வழிபாடு துறை!



* 'யோக' செல்வம்



* உயரே... உயரே...

பன்னிரண்டு மணி வரை விஸிட்டர்களைப் பார்க்கிறார்.

● கோடம்பாக்கம் 'முரசொலி' பத்திரிகை அலுவலக வளாகத்தில் மாறனின் மார்பளவு சிலை வைக்கும் ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன. மாறனுக்குத் தமிழகத்தில் வைக்கப்படும் முதல் சிலை இதுதான்.

● வைகோ நடைப் பயணத்தின் போது, பேசும் பேச்சுக்களை உன்னிப்பாக கவனித்துக் கொண்டிருக்கிறது தி.மு.க. 'தமிழை செம்மொழி ஆக்கியதும், சேது சமுத்திரம் கொண்டு வந்ததும், தாம்தான் என்று வைகோ பேசுவது கண்டு, கொஞ்சம் ஆச்சர்யத்துடன் புருவத்தை உயர்த்துகிறார்கள் தி.மு.க. பிரமுகர்கள். ''எங்களுக்கு என்ன, பதினைந்து அமைச்சர்கள் மத்தியில் இருக்கிறார்கள். இருந்தும் குறைந்தபட்ச பொதுத்திட்டத்தில் நாங்கள் சொன்னதுதான் வார்த்தை மாறாமல் போடப்பட்டிருக்கிறது'' என்று வைகோ கூறியிருப்பது, அவர்களை பதற்றப்பட வைத்திருக்கிறது.

● ''பெரிய மாநிலங்களைப் பிரித்து சிறிய மாநிலங்கள் அமைப்பதில் காங்கிரஸுக்கு எதிர்ப்பு இல்லை'' என்ற நிலைப்பாடு, பா.ம.க. பிரமுகர்களிடம் புதிய எழுச்சியை உண்டாக்கியிருக்கிறது. ''தெலுங்கானா, விதர்பா, ஹரி பிரதேஷ் ஆகிய மாநிலங்களுக்கான கோரிக்கைகள் ஏற்றுக் கொள்ளப்படும் நிலையில், தமிழ் நாட்டில் தென் தமிழகத்தைப் பிரித்து ஒரு மாநிலமாகவும், வன்னியர்கள் வாழும் மத்திய வடக்குப் பகுதிகளைப் பிரித்து மற்றொரு மாநிலமாகவும் அமைக்க, மத்திய அரசை வற்புறுத்துவோம்'' என்கிறார் பா.ம.க. பிரமுகர் ஒருவர்!

**- கௌசி**

# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம்:** பிரேமதேசா ஸ்டேடியத்தை விட விசாலமான உங்க பூர்வ புண்ணிய ஸ்தானத்தில் கிரக சஞ்சாரம்கறதால, உங்க தெய்வ பலம் கூடி, தெய்வீக ஈடுபாடும் சேர்ந்து, இதுவரை இழுத்தடிச்சிட்டிருந்த சாதகமான விஷயங்களை முடிச்சி வெச்சிடும். புதிய பாதை ஒண்ணு உங்களுக்காகக் காத்திருக்கு. வி.ஐ.பிக்கள் ஆதரவு, சரளமான பண நடமாட்டம்னு வெற்றித் தேவதையின் ஆதரவில் ஜமாய்க்கப் போறீங்க. யந்திரம், காண்ட்ராக்ட்ஸ், கமிஷன், கம்ப்யூட்டர் வியாபாரங்கள் செழிக்கும். குடும்பத்தில் சுப மங்கள காரியம் கூடி வரும். பெண்களுக்கு ஆடை, ஆபரணச் சேர்க்கை உற்சாகம் தரும்.

**ரிஷபம்:** கிரக சஞ்சாரத்தில் கொஞ்சம் டிராபிக் ஜாம். சிறுசிறு குழப்பங்கள். தடங்கல்கள் ஏற்பட்டு விலகும். இதெல்லாம் 19ம் தேதி வரைக்கும்தான். பிறகு எடுத்த காரியங்களெல்லாம் வெற்றிதான். உத்தியோகத்தில் அனுகூலமான திருப்பம் காத்திருக்கு. எலக்ட்ரானிக்ஸ், கம்ப்யூட்டர், கெமிக்கல்ஸ் துறைகள் அனுகூலம் பெறும். குடும்பத்தில் செலவுகள் கூடப் போகுது, உஷாரா இருங்க. பெண்களுக்கு இதுவரை இருந்த குழப்பங்கள் மறைந்து தெளிவு பிறக்கும். எதற்கும் ஆஞ்சநேய சுவாமியைப் பார்த்து பிரார்த்தனை பண்ணுங்க. நன்மையே கிட்டும்.

**மிதுனம்:** உங்க ஜென்ம ராசியில் சனியும், சுக்கிரனும் ஒண்ணா நடமாடறதால எதிர்பாராத அதிர்ஷ்டம், அனுகூலம் உங்களுக்காகக் காத்திருக்கு. உத்தியோகத்திலயும் நல்ல திருப்பம் உண்டாகும். எதிர்ப்புகள் மறைந்து போகும். தொழில் உபகரணங்கள், காண்ட்ராக்ட்ஸ், உலோக வகை தொழில்கள் வளம் பெறும். கலைத் துறையிலிருப்பவர்களுக்கு மேன்மை கிட்டும். குடும்பத்தில் உறவினர் வருகையால் மகிழ்ச்சி கூடும். பெண்கள் உற்சாக மனநிலை பெறுவார்கள். மகான்கள் தரிசனம், தான தருமங்கள் மூலம் நன்மை பெறலாம்.

**கடகம்:** குரு பகவான் வீடு மாறுகிற வேகத்தில் சிலதையெல்லாம் மாற்றிப் போடறார். சிறு குழப்பங்களும், பிரச்னைகளும் ஆரம்பத்தில் இருந்தாலும், உடனுக்குடனே நிவர்த்தியாயிடும். புதிய அறிமுகங்கள் கிடைக்கும். உத்தியோகத்தில் மாமூலான பலன்கள்தாம். உணவுப் பொருள், வாகனம், உபகரணங்கள், டிராவல்ஸ் துறைகள் லாபம் தரும். குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும். வெளிநாடு போனவங்க திரும்புவாங்க. பெண்களுக்கு உடன் பிறந்தவர்களால் மகிழ்ச்சி கிடைக்கும். மாணவர்கள் கடினமான உழைப்பைத் தர வேண்டியிருக்கும்.

**சிம்மம்:** துணிந்தவனுக்கு துக்கமில்லைங்க. உங்க துணிச்சல், நம்பிக்கை, அதிகரிக்கிற வேகத்திலேயே எதிர்ப்புகள் அடங்கிப் போயிடும். புதிய அறிமுகங்களால அனுகூலம் கிட்டும். உத்தியோகத்தில் உங்களுக்கு அவார்டு கிடைக்கிற நேரம். புதிய முயற்சிகள் வெற்றி பெறும். ஓட்டல், டிராவல்ஸ், ஆபரணத் தொழில் போன்றவற்றில் அனுகூலம் கிட்டும். சட்டம், ராணுவம், காவல் துறையினருக்கு ஏற்றமான காலம். குடும்பத்தில் குதூகலமான திருப்பம் நிகழும். பெண்கள் நினைச்சதை சாதிப்பாங்க.

**கன்னி:** கல்வி, விஞ்ஞானம், ஆராய்ச்சின்னு இருக்கறவங்க சாதனை நிகழ்த்தப்போறாங்க. படிப்புக்காக வெளிநாடு போக காத்திருப்பவர்கள் ரெடியாகலாம். வி.ஐ.பி.க்கள் ஆதரவு கைகொடுக்கும்.




**'எதிர்நீச்சல்' டி.வி. தொடர் கதாநாயகிகளுக்கு என்ன பலன்னு படிச்சு தெரிஞ்சுக்குங்க...**

**விஜயலக்ஷ்மி - மீனம், ஸ்ருதி - மேஷம், ஸ்ரத்தா - ரிஷபம், திவ்யதர்ஷிணி - மகரம், சிந்து - மகரம்.**

உத்தியோகத்தில் நீங்க உண்டு, உங்க வேலை உண்டுன்னு அமைதியாவே இருங்க. உத்தியோக சம்பந்தமான பயணம் வெற்றிதரும். வெளி நாட்டுத் தொடர்புள்ள தொழில், கலைத்துறை, ஆபரணத் தொழில், கமிஷன் துறைகள் லாபமும் அனுகூலமும் பெறும். குடும் பத்தில் கருத்து வேறுபாடு மறைந்து நிம்மதி கிடைக்கும். பெண்கள் தெளிவா கவும், ஆரோக்கியமாகவும் இருப்பாங்க.

**துலாம்:** தொட்டதெல்லாம் வெற்றி தான். தொடர்வதெல்லாம் அனுகூலம் தான். உங்க காட்டில மழைதாங்க. ஒரு பெண் தேவதை உதவிக்கு வரக் காத்தி ருக்கு. எதிர்பாராத சந்திப்பு, பண வசதின்னு எல்லாமே 'ஓஹோ'தான். உத்தியோகத்தில் எதிர்ப்புகள் குப்பைக் கூடையைத்தான் நிரப்பும். அங்கேயும் அதிர்ஷ்ட தேவதை பூச்செண்டோட காத்திருக்கு. இண்டஸ்ட்ரீஸ், கமிஷன், கெமிக்கல்ஸ், கம்ப்யூட்டர் துறைகள் மேன்மை அடையும். கலைத்துறையினர் முன்னேறி முதலிடத்துக்கு வருவாங்க. குடும்பத்தில் சுபச் செலவுகள் ஏற்படும். வீடு விற்கவோ, வாங்கவோ ஏற்ற நேரம். பெண்கள் மேன்மை பெறுவார்கள். மாணவர்களுக்கு வெற்றி கிட்டும்.

**விருச்சிகம்:** *19*ம் தேதி வரை பொறுங்க. உங்கள் காரியங்களுக்கு இதுவரை இருந்த தடைகள், குறுக்கீடுகள், எதிர்ப்புகள் எல்லாம் மறையும். துணிவும் நம்பிக்கையும் கூடும். உத்தியோகத்தில் இருந்த குழப்பமான நிலை தெளிவாகி, நல்ல பலன்கள் கிட்டும். உங்கள் கோரிக் கையும், புதிய முயற்சியும் வெற்றி பெறும். யந்திரம், இண்டஸ்ட்ரீஸ், கமிஷன் துறை கள் முன்னேறும். குடும்பத்தில் நெருக்கடி தீர்ந்து, சுபிட்சம் ஏற்படும். சுப காரிய முயற்சிகள் நல்ல பலன் தரும். பெண் களுக்கும் மாணவர்களுக்கும் ஏற்றமான

**ஆகஸ்ட் 18 முதல் 24 வரை**

| இது நல்ல நேரம் | | | | |
|---|---|---|---|---|
| கிழமை | தேதி | நட்சத்திரம் | திதி | மற்றவை |
| புதன் | ஆகஸ்ட் 18 (ஆவணி - 2) | பூரம் | துவிதியை | சந்திர தரிசனம் - மதுரை ஆவணிப் பெருவிழா |
| வியாழன் | ஆகஸ்ட் 19 (ஆவணி - 3) | உத்திரம் | திரிதியை | குருபெயர்ச்சி |
| வெள்ளி | ஆகஸ்ட் 20 (ஆவணி - 4) | ஹஸ்தம் | சதுர்த்தி | கருட பஞ்சமி மதுராந்தகம் ஏரிகாத்த ராமர் உற்சவம் |
| சனி | ஆகஸ்ட் 21 (ஆவணி - 5) | சித்திரை | பஞ்சமி | மதுரை சுந்தரேஸ்வரர் தருமிக்கு பொற்கிழி அளித்தல் |
| ஞாயிறு | ஆகஸ்ட் 22 (ஆவணி - 6) | சுவாதி | ஸப்தமி | மழை கூடும் தினம். வாஸ்து செய்ய நன்று |
| திங்கள் | ஆகஸ்ட் 23 (ஆவணி - 7) | விசாகம் | அஷ்டமி | குலச்சிறை நாயனார் நட்சத்திரம் - சிவாலய பூஜை |
| செவ்வாய் | ஆகஸ்ட் 24 (ஆவணி - 8) | அனுஷம் | நவமி | மாலை - கார்த்திகை தொடக்கம் |

காலம்.

**தனுசு:** தெளிவான மனநிலையும், குழப்பமில்லாத பேச்சும் உங்க டிரேட் மார்க். இதனால எடுத்த காரியங்கள் கொஞ்சம் தடைப்பட்டாலும் அசராம செய்து முடித்து, வெற்றிக்கொடி கட்டு வீங்க. முக்கியஸ்தர் ஆதரவு, தேவைக் கேற்ற பணவசதி உங்களோட பக்க பலமா இருக்கும். உத்தியோகத்தில் சுமுக மாக போக்கையும், நிதானத்தையும் கடைப்பிடியுங்க, பிரச்னை வராம பார்த் துக்கலாம். கூட்டுத் தொழில், இரும்பு, கமிஷன், கலைத்துறை, அரசியல் - துறை கள் மேன்மை அடையும். குடும்பத்தில் ஒற்றுமை அதிகரிக்கும். பெண்கள் எண்ணப்படி எல்லாம் நிறைவேறும்.

**மகரம்:** உங்க துணிவும், நம்பிக்கையும் வெற்றிகளைத்தரும் நேரம் இது. எதிரிங்க உங்க மூச்சுக் காத்திலேயே சுருண்டு போயிடுவாங்க. பயணங்கள் எல்லாம் வெற்றிப் பயணம்தான். உத்தியோகத்தில் சிறு பிரச்னைகள் ஏற்பட்டு நிவர்த்தியா யிடும். சுமுகமான பேச்சு உங்களைக் காப் பாற்றும். ஊதிய உயர்வும், இடமாற்றமும் நீங்க எதிர்பார்த்தபடி கிடைக்கும். தோல் பொருள், எண்ணெய் வகை, ஃபர்னிச்சர், ரியல் எஸ்டேட் துறை யினருக்கு அனுகூலம் கிட்டும். குடும்பத்தில் இதுவரை இருந்த குழப்பம் மறைந்து நிம்மதி கிடைக்கும். பெண்கள் உற்சாகமா இருப்பாங்க.

**கும்பம்:** தெய்வ பலம், தெய்வீக ஈடு பாடு உங்களுக்கு நன்மை தரும். பொரு ளாதார நிலை கொஞ் சம் தடுமாறும், உஷா ராயிருங்க. உறவினர், நண்பர் உதவுவாங்க. உத்தியோகத்தில் கூடு தல் பொறுப்பினால், நல்லதும் கெட்டதுமான பலன்கள் கிடைக்கும். புதிய முயற்சிகளைக் கொஞ்சம் தள்ளிப் போடுங்க. இரும்பு, காண்ட்ராக்ட்ஸ், கமிஷன், தோல் பொருள், எண்ணெய் வகை - தொழில்கள்ல இருக்கிறவங்களுக்கு லாபம் கூடும். குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும். சுபமங்கள காரியம் கூடி வரும். பெண்களுக்கும், மாணவர்களுக்கும் முன்னேற்றம் ஏற்படும்.

**மீனம்:** எந்தப் பக்கம் திரும்பினாலும் சங்கடம், தாமதம், குறுக்கீடு என்று இருந்த நிலைமை மாறிடும். எதிர்ப்பு களும் எதிரிகளும் அடங்கி வழி விடு வாங்க. வி.ஐ.பிக்கள் ஆதரவு கை கொடுக் கும். உத்தியோகத்தில் பாராட்டு, ஆதரவுன்னு கூடி ஒரு அதிர்ஷ்ட வாய்ப்புக்கு வழி வகுக்கும். புதிய தொழில், கூட்டுத் தொழில், யந்திரம், சினிமா, நாடகம், ஆபரணத் தொழில், சட்டம், ராணுவம், காவல் துறையினர் முன்னேற்றம் பெறுவார்கள். குடும்பத்தில் சிறு பிரச்னைகள் ஏற்பட்டு மறையும். பெண்கள் ஆரோக்கியத்தில் கவனம் செலுத்துவது அவசியம்.




**பொ**றியியல் பட்டத்தோடு கனவுத் தொழிற்சாலைக்குள் கால் பதித்தவர்களைப் பார்த்திருக்கிறோம். ஆனால் மருத்துவப் பட்டதாரிகள்? அந்தக் குறையைப் போக்க சேலத்திலிருந்து வந்திருக்கிறார் தமிழ். பல் மருத்துவத்தில் கோல்டு மெடலிஸ்ட்! வெற்றிகரமாக ஓடிக் கொண்டிருக்கும் 'லவ்ஸ்' படத்தின் நாயகன்.

"நான் என்ன சார் பண்றது? உயர் நிலைப் பள்ளி படிக்கும்போதே வகுப்புக்கு டிமிக்கி கொடுத்துவிட்டு, காலைக் காட்சிக்கு ஓடி விடுவேன். அதற்காக படிப்பில் கோட்டை விட்டதில்லை. அப்பா - அம்மாவை சந்தோஷப்படுத்த படிப்பு; எனக்காக நடிப்பு'' என துடிப்புடன் பேசும் இவருக்கு கோடம்பாக்கத்தில் வழி காட்டுவது நடிகர் சூர்யாவாம்! "அவர் தான் என்னை சண்டைப் பயிற்சி, டான்ஸ் பயிற்சி, நடிப்புப் பயிற்சின்னு சேர்த்துவிட்டார். நான் ஒரு திறமையான நடிகன் என்று பெயர் வாங்கினால், அதில் சூர்யாவுக்கும் பங்குண்டு'' என்று நெகிழ்ந்து போகும் தமிழின் இயற்பெயர் விக்ரம்!

- ஸ்ரீ

# 16

நெருப்பு என்பது ஒளியும், வெப்பமும் கலந்தது. பிராணவாயு, பிற எரியும் தன்மையுடைய பொருள்களுடன் விரைந்து சேரும் பொழுது நெருப்பு உண்டாகிறது. நெருப்பு ஜ்வாலையைத் தருகிறது. ஜ்வாலை பிரகாசத்தைத் தருகிறது. நெருப்பு உண்டாக, எரியும் தன்மையுடைய பொருளும், தீப்பற்றிக் கொள்ளத் தோதுவாக கொஞ்சம் அதிக வெப்ப நிலையும், போதுமான உயிர்வளியும் போதும்.

ஜ்வாலைகளுடன் மேல் எழுந்து எரியும் நெருப்பானது, தனது வாழ்வை முற்றிலும் எரித்து சாம்பலிடப்போவது தெரியாமல் கதிரேசன் பெயரேட்டில் கணக்கு எழுதிக் கொண்டிருந்தான்.

மறுநாள் முத்தையா செட்டியார் மணிவிழா, கம்பன் மணி மண்டபத்தில் நடைபெற உள்ளது. முதல் நாள் விசேஷங்களான பூர்ணாஹுதி போன்றவற்றைப் பார்க்க அழகப்பனும், அண்ணாமலையும் முதலிலேயே கிளம்பிவிட்டார்கள். நாகப்பனை, பழனி பாத யாத்திரைக்குப் பின் கண்ணிலேயே பார்க்க முடிய வில்லை. நடுவில் ஒரு நாள் திருஞானத்துடன் வீட்டிற்கு வந்திருந்



தான். திருஞானத்தைப் பார்த்தாலே என்னவோ செய்கிறது. அவனுடைய கள்ளப் பார்வையும், அசட்டுத்தன மான சிரிப்பும் நம்பத்தகுந் தவையாக இல்லை. நாகப்பன் ஏன் மேலும், மேலும் சிறுமைப்பட்டுப் போகிறானோ?

"அய்யா" ரத்னத்தின் குரல் கேட்டு கதிரேசன் தலை நிமிர்ந்தான்.

"என்ன?"

"மணி பத்தாகுது. இனிமே யாரும் கடைக்கு வரமாட்டாக. நான் கௌம்பிக் கிறேன்" என்றான்.

"உம். நாம் கணக்குகளைச் சரி பார்த்து கம்ப்யூட்டரில் ஏத்த ஒரு மணி நேரம் ஆயிரும். கௌம்புங்க."

"பசங்க யாரும் கடைக் குள்ள படுக்கலீங்களா?"

"வேணாம் ரத்னம். ஒரு நாள் தானே. மணி இப்பமே பத்தாயிடுச்சு. நாளைக்கு வெள்ளன வந்திடுங்க" என்றான்.

ரத்தினம் போனதும் கணக்குகளை கணினியில் பதிவு செய்ய ஆரம்பித்தான்.



# வலம்புரி முத்து

சத்தியப்ரியன்

மணி பதினொன்று அடித்தது. பேரேட்டை மூடினான். மீண்டும் ஒரு முறை எல்லாக் கணக்குகளிலும் உள்ள பற்று, வரவுகளைப் பார்வையிட்டபடி வந்தான். ப்ராஸ்ப்ரின் கம்பெனிக்காரர் களின் பற்றை நேர் செய்ய அளிக்கப் பட்ட தொகை, நிலுவைக் கணக்கில் ஏழு லட்சமாக பயமுறுத்திக் கொண்டிருந்தது. நாகப்பனிடம் இனி பேசிப் பயனில்லை. மேலும், மேலும் சிறுமைப்பட மனம் இடம் கொடுக்கவில்லை. எதற்காக அவனுக்கு தற்காப்பு - அளிக்கப்போய், தான் அகப்பட்டுக் கொள்ள வேண்டும்? இரண்டொரு நாளில் அழகப்பனிடம் விவரம் சொல்லிவிட வேண்டும். கம்ப்யூட்டரை ஷட்-டவுன் பண்ணினான். எல்லா விளக்குகளையும் அணைத்தான். கைப்பையை எடுத்துக் கொண்டான். கல்லாவை மூடி சாவியை கைப்பையில் போட்டுக் கொண்டான். கதவுகளை மூடி ஷட்டரை இழுத்து விட்டான்.

வெளியில் சைக்கிளை எடுத்துக் கொண்டு கிளம்பும்பொழுது, கடைச் சிப்பந்தி ராமசந்திரன் எதிர்ப்பட்டான். கையில் ஒரு துண்டை ஐந்து லிட்டர் பிடிக்கும் மண்ணெண்ணெய் கேனின் பிடியின் வழியாகக் கொடுத்து, அந்தத் துண்டோடு கேனைத் தூக்கிக் கொண்டு வந்தான். பதினொரு மணிக்கு அவனை மண்ணெண்ணெய்க் கேனுடன் பார்ப்பது வினோதமாக இருந்தது.

"என்ன ராமசந்திரா! நடு ரோடில் சீமெண்ணெய்க் கேனோடத் திரியற?" என சொல்லிவிட்டு, அவன் முன்னால் சைக் கிளை ஸ்டாண்ட் போட்டு நிறுத்தினான்.

"உங்களுக்கு என்னய்யா! கேஸ் அடுப்பு. கூப்பிட்டா ஏஜன்ஸிகாரவுக சிலிண்டர் அனுப்பிடுவாக. எங்களுக்கு

சிமெண்ணெய நம்பித்தானே பொளப்பு ஓடுது." ராமசந்திரனின் குதர்க்கம் எரிச்சலூட்டுவதாக இருந்தது. அவன் பிறப்பில் அந்தணனாக இருப்பினும், இவர்களுடன் பேசும்பொழுது அவனுடைய வழக்கு மொழியில் ப்ராமணத்வனி ஏதுமின்றி, செட்டிக்குடியில் பிறந்தவன் போல் பேசுவது கதிரேசனுக்கு அறவே பிடிக்காது.

"ஒன் வீடு அஞ்சு லாந்தர் பக்கந் தானே? கொடு, நான் சைக்கிள் கேரியரில் வச்சு கொண்டாறேன்"

"வேணாம்! கதிரு, நீ ஒருத்தன்தான் சிதம்பரஞ்செட்டியாருக்குத் தப்பிப் பொறந்த பைய" என்றான் இரு த்வனியில்.

ராமசந்திரனை முறைத்தான். வேலியில் போகும் ஓணானை வேட்டிக்குள் விட்டுக் கொண்ட கதையாகிவிடுமோ?

"ஒதவி செய்யோணும்னு பிரியப் பட்டா, இந்த கேனை ஒரு நிமிசம் புடி" என ஒரே தூக்காக கதிரேசனின் மார்பு வரை வரும்படி நீட்டினான். முன் யோசனை ஏதுமின்றி, ஓர் அனிச்சைச் செயலாக கதிரேசன் கேனின் இருபுறச் சுவரிலும் தனது கைரேகைகளை அழுந்திப் பதியுமாறு கேனைப் பெற்றுக் கொண்டான்.

"இடுப்பு வேட்டி அவிளுது" என வேட்டியை இறுக்கிக் கட்டிக் கொண்டு, "கேனைக் கொடு" என்றான்.

கதிரேசன் நீட்டிய கேனில் தன் கைவிரல் அதன் எந்தப் பக்கத்திலும் படாமல், அதன் பிடியில் நுழைக்கப்பட்டிருந்த மேல் துண்டைப் பற்றி கேனை வாங்கிக் கொண்டான். ராமசந்திரன் சொன்ன காரணத்தில் நியாயம் இருந்ததால், அவனுடைய செய்கையின் சூழ்ச்சி எதுவும் விளங்கவில்லை.

"சரி அப்பச்சி! நீ கௌம்பிக்க! நான் டீக்கடையில் தம்மடிச்சிட்டு வீட்டுக்குப் போயிக்கிறேன்" என்றான் ராமசந்திரன்.

கதிரேசன் சைக்கிளில் கிளம்பினான்.

அண்ணி சரஸ்வதிதான் விழித்திருந்து சோறு பரிமாறினாள்.

"முத்தையா செட்டியார் மணி விழா விசேஷத்துக்குப் போயிருந்தீகளா அண்ணமுண்டி?" என்றான்.

"ஆமா"

"கூட்டமா? விருந்து பலமா?"

"ஊரே தெரண்டா மாதிரி கூட்டம். முத்தையா செட்டியாருதான் ஒன்னயக் காணும், அவுகளக் காணும்னு வருத்தப் பட்டாக. இவுக ரெண்டு பேரும் தான் கடையைக் களுத்துல கட்டிக்கிட்டு, தொங்குறவுகன்னேன். நாளைக்கு நீ அவசியம் மணி விழாவுக்கு வரணுமாம். சாப்பிட்டுப்புட்டு படு. வெள்ளன எந்திரிச்சாத்தான் மணிவிழாவுக்குப் போக முடியும்" என சரஸ்வதி அவசரப்படுத்தினாள்.

"தாமரை வீட்டிலிருந்து யாராச்சும் வந்திருந்தாகளா?"

"பார்க்கலை கதிரு. தாமரை வந்திருந்தா கண்ணில் பட்டிருப்பா. ஆம்பிளங்க வந்தா தெரியாது. நாளைக்கு மொத்தமா பார்த்துக்க" என்று அவனைப் பார்த்துச் சிரித்தாள்.

போய் படுத்தான். தாமரை, முத்தையா செட்டியார், பழனியப்பன் சார், அழகப்பன். நாகப்பன், ராமசந்திரன், அவன் மண்ணெண்ணெய் கேன் என பலவிதமாக நினைவு சுழன்றது.

நாகப்பன், கதிரேசனை ஒரு பெரிய தூணில் கட்டிப் போடுகிறான். ராமசந்திரன் முழங்காலிட்டபடி ஊர்ந்து, ஊர்ந்து வருகிறான். அவன் முதுகில் ஒரு மண்ணெண்ணெய் கேன் இருக்கிறது. "எனக்கு வயித்த வலிக்கறது கேட்டேளா? அதான் முதுகுல சொமந்துண்டு வர்ரேன்" என்றான் அந்தணர் பேச்சு வழக்கில். நாகப்பன் அந்த மண்ணெண்ணெய் கேனின் மூடியைத் திறந்து கதிரேசன் மேல் ஊற்றுகிறான். வாயிலும் மூக்கிலும் மண்ணெண்ணெய் நுழைந்து, நெடி சகிக்க முடியாமல் இருக்கிறது. திருஞானம் பலமாகச் சிரித்தபடி காற்றிலிருந்து தோன்றினான். ஸ்டைலாக தன் பாக்கெட்டிலிருந்த லைட்டரைப் பற்ற வைத்து, கதிரேசனைப் பார்த்து ஓங்காரமாய்ச்

*"காலத்துக்கு ஏத்த மாதிரி மாறிக்கறதுல எங்க தாத்தா கில்லாடி"*

*"எப்படி?"*

*"சிம்ரன் ரசிகர் மன்றத்தை கலைச்சிட்டு த்ரிஷாவுக்கு ரசிகர் மன்றம் தொடங்கிட்டார்!"*

*- எஸ். தமிழ்மணி*

சிரித்தபடி "ஒழிந்து போ" என ஜ்வா லையை அருகில் கொண்டு வந்தான்.

"நெருப்பு! நெருப்பு" என அலறிய கதிரேசன் விழித்துக் கொண்டான்.

அவன் அருகில் தேக்குமரக் கட்டிலில் படுத்துக் கொண்டிருந்த தெய்வானை ஆச்சி எழுந்து "கதிரு! கதிரு!" என்றாள்.

"என்ன ஆச்க?"

"கனா கண்டியா கதிரு! சாமியறையில போய் துந்நூறு இட்டுக்கினு வந்து படு. தீ! தீன்னு அலறிப்புட்டியே."

வெளி இரும்புக் கதவு அருகில் அழகப் பனும், அண்ணாமலையும் வெளி ஆள் ஒருவனுடன் பேசிக் கொண்டிருந்தார்கள்.

"கதிரு! நம்ம குடோன் தீப்பிடிச்சுக் கிச்சாம். ஃபயர் வண்டி வந்திருக்காம். நீ உள்ளாற போயி சட்டைய மாட்டிக்கினு வா. மூணு பேரும் காரில் போயிட்டு வந்திருவோம்" என்றார்.

நாகப்பன் உள்ளூரில் இல்லை. திருஞானத்தைப் பார்ப்பதற்கு சென்னைக் குப் போயிருக்கிறான்.

சட்டையை மாட்டும்பொழுது தெய் வானை ஆச்சி விசாரித்தாள். கதிரேசன் விஷயத்தைச் சொன்னான்.

"ஆத்தி! இப்பந்தானே நீ கெனா கண்டு தீ, தீன்னு கத்தின. இரய்யா நானும் வந்துடறேன்."

"வேணாம் ஆச்சி, நாங்க பார்த்துக் கிடறோம்."

"வள்ளி மெடிக்கல்ஸ் நான் உருவாக் கினது கதிரு. அதுக்கு ஒண்ணுன்னா என் உயிருக்கு ஒண்ணுன்னு நெனச்சுக்க" என்று கூந்தலை முடிந்து கொண்டு கிளம் பிய ஆச்சியைத் தடுக்க முடியவில்லை.




காரில் செல்லும்பொழுது அழகப்பன் விசாரித்தார். "கடையை நைட்டு தொறந்து வைக்கலியா கதிரு?"

"நாளைக்கு ஞாயித்துக்கிளமைண்ணே. பசங்க இன்னிக்கு நைட்டு ஸெகண்ட்ஷோ பார்த்துட்டு விளுந்து கெடப்பாங்க. நானே கிளம்புறப்ப பதினொரு மணி ஆயிடுச்சுன்னுதான் கதவை மூடிட்டு வந்துட்டேன்" என்றான்.

இது வழக்கமாக நிகழக் கூடிய ஒன்றுதான். வள்ளி மெடிக்கல்ஸ் இரு பத்துநாலு மணி நேரமும் திறந்திருக்கும் கடை என்பது நியதி. ஆனால் இது போன்ற ஏதாவது ஒரு சனிக்கிழமை இரவு, கடையை முழுவதும் மூடிவிடுவது உண்டு. ஆனால் இந்த நேரத்தில் அழகப்பன் அந்தக் கேள்வியை கேட்டது, உறுத்தியது.

கல்லுக்கட்டியில் இவர்களது வள்ளி மெடிக்கல்ஸ் கட்டடத்துக்கு நான்கு கட்டடங்கள் தள்ளி, தனி வீடு போன்ற அமைப்பில் இருந்த அந்த குடோனின் இரண்டு அறைகள் எரிந்து கொண்டிருந் தன. வாசல் வெராண்டாவில் ராமசந்திர னின் கையில் பார்த்த மண்ணெண்ணெய் கேன் இருந்தது. தெருவில் ஜனம் சேர்ந்துபோய், தீயணைக்கும் படையின ரின் லாரி ஒன்று நெருப்பை அணைத்துக் கொண்டிருந்தது.

"சரக்கு ரொம்ப இருந்துச்சா அழ கப்பன்?" என்றாள் ஆச்சி.

"இல்லை" என்றான் கதிரேசன். இப் பொழுதுதானே கணினியில் சரக்கு இருப்பு, குடோன் இருப்பு எல்லாம் பார்த்துவிட்டு வந்திருக்கிறான். மாச ஆரம்பம் என்பதால், வந்த சரக்குகள் எல்லாமே அனைத்து வள்ளி மெடிக்கல்ஸ் கிளைகளுக்கும் அனுப்பப்பட்டுவிட்டன. ஆனால் தீ வண்டி அணைத்து நிறுத்திய தில், நூற்றுக்கும் மேற்பட்ட பெட்டிகள் எரிந்து போயிருந்தன.

அருகில் இருந்த காவல் நிலையத்தினர் விபத்தைப்பார்வையிட்டு குறிப்பெழுதிச் சென்றனர்.



# கலக்கப் போகுது காரு!

நகர வாழ்க்கையில் கார் வாங்குவது கடலை மிட்டாய் வாங்குவது போல் ஆகிவிட்டது. புதுக் கார்களின் அறிமுகம் நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டே வருகின்றது.

டீசல் செக்மெண்ட் பிரிவில் மிகச் சமீபத்திய ஃபியட் பெட்ரா ஈ.எல்., ஈ.எல். எக்ஸ், ஆகியவற்றை ஃபியட் இந்தியா பிரைவேட் லிமிடெட் தாஜ் கன்னிமராவில் காட்சிக்கு வைத்திருந்தது. உட்புறத்தில் இத்தாலியக் கலை வண்ணத்தில் பவர் விண்டோ, ஆறு ஸ்பீக்கர் மியூசிக் சிஸ்டம், ஏர்கண்டிஷனர், ஹீட்டர் உடன் கறுப்பு நிற ஃபியட் ஈ.எக்ஸ். கண்ணடித்தது.

"விபத்து ஏற்பட்டால் தீப் பிடிப்பதைத் தடுக்க, எரிபொருள் சப்ளையைத் துண் டித்துவிடும் அமைப்பு இதன் ஸ்பெஷா லிட்டி!" என்கிறார் கமர்ஷியல் டைரக்டர் பரத்வாஜ்.

காரின் விலை சுமார் 6 லட்சம் மட்டுமே... மட்டுமே... மட்டுமே!

- ஷிவ்

நெருப்பு அணைந்தது என்றே அனைவரும் நம்பினார்கள். ஆனால், மறுநாள் காலையில் ஒரு நெருப்பு எழுந்தது.

தீக்காயங்களுடன் மருத்துவமனையில் சேர்ந்த கடைப்பையன், பொய்யான குற்றச்சாட்டை காவல் துறையினரிடம் கூறிய பொழுது, ஒரு நெருப்பு எரிய ஆரம்பித்தது. காப்பீட்டு நிறுவனத்தில் நஷ்டஈடு கிடைக்கும் என, காலி அட்டைப்பெட்டிகளை போடச் சொல்லி தன்னை நிர்பந்தித்து, குடோனுக்கு தீ வைத்தது கதிரேசன்தான் என்பது அக்குற்றச்சாட்டு!

ராமசந்திரனை வழியில் பார்த்ததைச் சொன்ன பொழுது, "நேத்திக்கு ஒம்பது மணியிலேருந்து அவர் ஆத்திலதான் இருந்தார். புதுசா கலர் டீ.வி. வாங்கி யிருக்கோம். எல்லா சீரியலையும் பார்த்தார். லோகல்சானலில் காட்டின சினிமாவை இரவு ஒரு மணி வரைக்கும் பார்த்திருந்துட்டு, லேட்டாத்தான் தூங் கினார்" என அவனது மனைவி பொய் சாட்சி சொன்ன பொழுது, ஒரு நெருப்பு எரிய ஆரம்பித்தது.

"ஏழு லட்ச ரூபாய்க்கு கணக்கு எங்கன்னு கதிரேசனைக் கேட்டப்பல லாம், அவனுக்கு ஸப்போட்டா பேசினீங்க இல்ல. இப்ப என்ன ஆச்சு? அந்தக் காசை சரிக்கட்ட, குடோனை எரிச்சு லாஸ் க்ளெய்ம் பண்ணப் பார்த் திருக்கானே. ஆச்சிக்குப் பொறந்திருந்தா இப்படி ஒரு கோணபுத்தி வருமா?" என சென்னையிலிருந்து காலையில் வந்திறங்கிய நாகப்பன் அலறிய அலறலில், ஒரு நெருப்பு எரிய ஆரம்பித்தது.

சோதனையிட்ட காவல்துறையினர் மண்ணெண்ணெய் கேன் முழுவதும் கதிரேசனின் கைரேகை இருப்பதைக் கூறிய பொழுது, ஒரு நெருப்பு எரிய ஆரம் பித்தது.

"ஏய்ய இப்படிப் பண்ணிப்புட்ட?" என்று தெய்வானை ஆச்சி கதிரேசனிடம் கேட்டபொழுது, அந்த நெருப்பு தெய் வானை ஆச்சியையும் சேர்த்து பொசுக் கியது. அந்த நெருப்பிலிருந்து இருவருமே மீளவில்லை.

(தொடரும்)



**சேலம் மாநாடுக்கான ஏற்பாடுகள் தடபுடலாக நடந்து கொண்டிருக்கின்றன... ஆனால் வி.ஜே. ( அதாங்க விழா ஜாக்கி ) வீரபாண்டியார் வெளிப்படுத்தும் அதிரடி இறுதி நோக்கம் தான் சர்ச்சைக்கும் சச்சரவுக்கும் வித்திடுகிறது!**

இது மண்டல மாநாடா, மாவட்ட மாநாடா, மாநில மாநாடா என்றெல்லாம் துவக்கத்தில் பெரிய குழப்பம் இருந்தது. ஆனால் இப்போது சிறப்பு மாநாடு என்று அறிவித்துவிட்டார்கள். இத்துடன் கலைஞரின் முத்து விழாவும், நாடாளுமன்ற வெற்றி விழாவும் சேர்ந்து கொண்டாடப்பட உள்ளன. இந்த மாநாட்டு ஏற்பாடுகளை





# அசத்தல் மாநாடு அதிரடி நோக்கம்!



முழுக்க முழுக்க, தமது பொறுப்பில் எடுத்துக் கொண்டு, கடந்த இரண்டு மாத காலமாக பம்பரமாகச் சுற்றிக் கொண்டிருக்கிறார், வீரபாண்டி ஆறுமுகம். தி.மு.க. தொண்டர்களும், பிரமுகர்களும், ஏன் கலைஞர் உட்பட அனைவரும் மாநாட்டு பிரம்மாண்டங்களைப் பார்த்து ஆச்சர்யப்பட வேண்டும் என்று, சிறு சிறு விஷயங்கள் உட்பட எதையும் விட்டு வைப்பதில்லை அவர். இப்படி ஒரு கௌரவப் பிரச்னையாக வீரபாண்டியார் எடுத்துச் செயல்பட ஒரு காரணமிருக்கிறது. இரண்டு வருடங்களுக்கு முன்னர், விழுப்புரத்தில் கழக மாநாடு நடந்தது. நடத்தியவர் பொன்முடி. அந்த மாநாட்டில் பேசிய ஸ்டாலின், "இது போன்று, இவ்வளவு சிறப்பாக கழக மாநாடு நடந்ததில்லை, இனியும் நடக்கப் போவதில்லை" என்று பேசிவிட்டார். மேடையில் இருந்த வீரபாண்டியாருக்குப் பொறுக்க முடியவில்லை. அவர் பேசும் போது, "இந்த மாநாட்டுச் சிறப்பைப் பாராட்டுங்கள். அதை விட்டு விட்டு, 'இனிமேலும் இப்படி யாராலும் நடத்த முடியாது' என்று சொல்லாதீர்கள். அதிலும் என்னை மேடையில் வைத்துக் கொண்டு" என்று அதிரடியாக ஒரு போடு போட்டார். எனவே, இப்போது மிகச் சிறப்பாக நடத்திக் காட்டும் நிலையிலிருக்கிறார் வீரபாண்டியார். அவருக்கு இது ஒன்றும் பெரிய விஷயமல்ல. இதற்கு முன்னரே மூன்று மாநாடுகளை, சேலத்தில் வெற்றிகரமாக நடத்திக் காட்டியவர்தான் அவர்.

மாநாடு, பொதுக்கூட்டம் என்றாலே மக்கள் மிரள்கிறார்கள். போக்குவரத்து நெரிசல், மாமூல் வாழ்க்கை பாதிப்பு என பல சங்கடங்கள். ஆனால் சேலம் தி.மு.க. மாநாட்டால், பொதுமக்களுக்கு எந்த சிரமமும் வராது என்றே தோன்றுகிறது. இதற்குக் காரணம் மாநாடு நடத்த தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் இடம் தான். சேலம் நகரத்திலிருந்து பத்து கி.மீ. தொலைவில், பெங்களூர் பை பாஸ் சாலையில் மாநாடு நடக்கவிருக்கிறது. பந்தலுக்குப் பின்னணியாக அழகான குமரகிரி மலைத் தொடர். அதன் உச்சியில், பட பட படக்கும் கறுப்பு சிவப்புக் கொடிகள். குவாலியர் கோட்டை போன்ற அசத்தும் முகப்பு. இருபத்தியிரண்டு ஏக்கர் பாறை நிலத்தைத் திருத்தி சமன்படுத்தி, மாநாட்டுத் திடலை உருவாக்கியிருக்கிறார்கள். மாநாட்டுக் கூரை ஐம்பத்தியிரண்டு அடி உயரம். தமிழகம் முழுக்க இருந்து பல்வேறு துறை தொழிற் கலைஞர்கள், இரவு பகல் பாராது உழைத்துக் கொண்டிருக்கிறார்கள். மேடையின் பின்புறம் கலைஞர் ஓய்வெடுக்க ஏ.ஸி அறை. மாநாடு நடக்கும் இரண்டு நாட்களில், சேலம் நகரம் மட்டுமல்ல; சேலம் மாவட்டமே ஜொலிக்கும் என்று சொல்கிறார்கள் உள்ளூர் உடன் பிறப்புகள். சேலத்தைச் சுற்றி நாற்பது கி.மீ. தொலைவிற்கு வரிசையாக டியூப் லைட்கள், ஸீரியல் லைட், கட்-அவுட், பேனர்கள், அலங்கார வளைவுகள் என்று, களை கட்டப் போகிறதாம் மாவட்டம். வழக்கமாக மாநாட்டு ஏற்பாடுகள் நடக்கும்போது, கலைஞர் இடையில் வந்து ஒரு முறை பார்ப்பார். ஆனால் வீரபாண்டியார் எதையும் கச்சிதமாகச் செய்து முடிப்பார் என்ற நம்பிக்கை அவருக்கு உள்ளதால், முழுப் பொறுப்பையும் அவரிடம் விட்டு விட்டார்.



மாநாட்டு பேனர்களிலும், சுவர் விளம்பரங்களிலும், பதாகைகளிலும், விழுப்புரம், விருதுநகர் மாநாடுகளில் பரவலாக இடம் பெறாமலிருந்த பெரியார், அண்ணா, பேராசிரியர் படங்கள் இடம் பெற்றிருக்கின்றன. மாநாட்டு முகப்புக்கு அருகிலும், அதையொட்டி ஒரு கி.மீ. சாலையின் இரு புறமும் கட் அவுட்கள், பேனர்கள் வைப்பதற்கும், மாநாட்டு விழாக் குழுவே தலைவர்களையும் வரிசையையும் இடங்களையும் தேர்ந்தெடுத்திருக்கிறது. இதற்குக் காரணம் ஆர்வமிக்க சில பிரமுகர்கள், அவர்களுக்குப் பிடித்த தலைவர்களின் அபிமானத்தைப் பெற சகட்டு மேனிக்கு கட் அவுட், பேனர் வைக்கக்

போகிறது. அதற்கேற்றபடி பெரிய இடமாகப் பார்க்க வேண்டியிருக்கிறது. செலவு அதிகரிக்கிறது. எல்லா ஏற்பாடு களையும் சட்டதிட்ட விதிகளுக்கு உட்பட்டு, அனுமதி பெற்று செய்திருக் கிறோம்."

"இந்த மாநாட்டில் அ.இ.தி.மு.க. அரசைக் கலைக்க வேண்டும் என்று தீர்மானம் கொண்டு வரப்படுமா?"

"இதைப் பற்றியெல்லாம் தலைவர் கலைஞர்தான் முடிவெடுப்பார். மதச் சார்பற்ற கூட்டணி அமைத்து மத்தியில் ஆட்சியமைத்திருக்கிறோம். குறைந்த பட்ச பொதுத் திட்டம், அதில் அடங்கி யிருக்கும் தமிழகத்தின் நலன் ஆகியவை பற்றிப் பேச, மக்களுக்குச் சொல்ல, நல்ல வாய்ப்பாக மாநாடு அமையும். கொள்கை ரீதியாக அரசியல் சட்டம் 356ஐ பயன்படுத்தக் கூடாது என்பது கழகத்தின் நிலை. ஆனால் மக்களுக்குப் பெரும் பாதிப்பாக உள்ள ஜெ. ஆட்சியை அகற்ற வேண்டும் என்று உணர்ந்து கொண்ட என்னைப் போன்ற எண்ணம் கொண்டவர்கள், 356ஐ அ.இ.அ.தி.மு.க. ஆட்சியின் மீது பயன்படுத்துவதில் தவறில்லை என்றே கருதுகிறோம்" என்று அதிரடியாக முடித்தார் வீரபாண்டி ஆறுமுகம்.



* மாநாடு முகப்பு



* பார்வையிடும் தி.மு.க. பிரமுகர்கள்

கூடாது என்பது தான். மாநாட்டில் இரண்டு டஜனுக் கும் மேற்பட்ட தலைவர்களின் படங்கள் திறந்து வைக்கப்படவிரு கின்றன. ஐம்பத்தி மூன்று பிரமுகர்கள் தமக்குக் கொடுக் கப்பட்டிருக்கும் தலைப்பில் பேச்சு மழை பொழிய இருக்கிறார்கள். முதல் நாள் உணவு இடை வேளைக்கு முன்பு ஸ்டாலின் பேச இருக்கிறார். பெரும் பாலோர் சாப்பாட்டுக்கு ஜூட் விடும் அந்தச் சமயத்தில், மாநாட்டுத் திடல் நிரம்பியிருக்க வேண்டுமென்று இளைஞரணி ஆட்கள் முனைகிறார்கள். பேச்சாளர்களில் மத்திய உள்துறை இணை அமைச்சர் ரகுபதியும் ஒருவர். அவருக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் தலைப்பு, "தமிழகத்தில் சட்டம் ஒழுங்கு படும் பாடு" யாரைச் சங்கடப்படுத்த இந்தத் தலைப்பு என்பது தெரிந்த விஷயம்தானே!

**"மூன்று மாநாடுகளை ஏற்பாடு செய்த அனுபவத்தில் சொல்லுங்கள்? இந்த மாநாடு எப்படி? என்று வீரபாண்டியாரைக் கேட்டோம்.**

"ஒவ்வொரு மாநாட்டின் போதும் கூட்டம் அதிகரித்துக் கொண்டே

**- ப்ரியன்**

படங்கள் : **ராஜன்**

**2004** ஒலிம்பிஸ் நடக்கப் போவது ஏதென்ஸிலா? ரோம் நகரிலா? இறுதிக் கட்டம்வரை சஸ்பென்ஸ் நிலவியது. மீண்டும் ஓர் அதிர்ச்சியை நாங்கள் தாங்கமாட்டோம் என்று கிரேக்க நாட்டு விளையாட்டுப் பிரியர்கள் கருத்து தெரிவிக்கத் தொடங்கினர். அதென்ன மீண்டும்? ஒலிம்பிக்ஸ் நூற்றாண்டு போட்டிகள் நடத்தும் வாய்ப்புகள் தங்களுக்கே கிடைக்கும் என நம்பியிருந்த ஏதென்ஸ், அந்த வாய்ப்பு அட்லாண்டாவுக்குச் சென்றதால் இடிந்து போயிருந்தது.

ஒருவழியாக நம்பிக்கை வாக்கெடுப்பில் ஏதென்ஸுக்கு சாதகமாக அதிக ஓட்டுகள் விழ, 2004 ஒலிம்பிக்ஸ் வாய்ப்பைப் பெற்ற கிரீஸ் நாடு, அப்போதே விழாக்கோலம் பூண்டது.



பண்டைய ஒலிம்பிக்ஸ் துவங்கியது மட்டுமல்ல, நவீன ஒலிம்பிக்ஸ் பந்தயங்கள் தொடங்கியதும் கிரேக்கத் தலைநகர் ஏதென்ஸில் தான்.

அப்போது மிகவும் முயற்சித்தும் 1896ல் முதல் நவீன ஒலிம்பிக்ஸை நடத்தும் வாய்ப்பு பாரிஸுக்குக் கிடைக்கவில்லை. ஏதென்ஸுக்குதான் அந்தப் பெருமை கிட்டியது. பண்டைய ஒலிம்பிக்ஸ் விளையாட்டுகள் நடைபெற்றன, கிரீஸில் உள்ள ஒலிம்பியாவில்தானே, எனவே அந்தச் சலுகை.

அதற்கும் இப்போதைய ஒலிம்பிக்ஸுக்கும் தான் எவ்வளவு வேறுபாடு!

**இ**ந்த முறை முதல்முறையாக பெண்கள் மல்யுத்தம் அரங்கேறப் போகிறது. முதல் முறையாக குத்துச்சண்டைப் போட்டியில் சந்தேகமான தருணங்களை முடிவு செய்ய புகைப்படக் கருவிகளைப் பயன்படுத்தப் போகிறார்கள். இப்படிப் பல 'முதல்'கள்.

ஆனால் 1896ல் நடைபெற்ற போட்டிகளின் பெயர்தான் 'நவீன ஒலிம்பிக்ஸ்'. பெண்களுக்கு போட்டிகளில் பங்கேற்கும் அனுமதி மறுக்கப் பட்டது.

தற்போது நடக்கும் ஒலிம்பிக்ஸை ஒன்றரை மில்லியன் மக்கள் நேரிலும், நாற்பது மில்லியன் பேர் தொலைக் காட்சியிலும் கண்டு ரசிக்கிறார் களாம். ஆனால் முதல் நவீன ஒலிம்பிக்ஸில், ஐம்பதாயிரம் பார்வையாளர்கள் உட்கார்ந்து ரசிக்கும்படியாக ஸ்டேடியம் புதுப்பிக்கப்பட்டது. பதிமூன்று நாடுகளிலிருந்து முன்னூற்றுப் பதினொரு தடகள வீரர்கள் மட்டுமே கலந்து கொண்டனர்.



ஒரு பெரிய வேடிக்கையும் அப்போது நடந்தது. போட்டிகளைத் தொடங்குவதற்கு பன்னிரண்டு நாட்களுக்கு முன்பே ஏதென்ஸுக்குச் சென்று பயிற்சி பெற வேண்டுமென்று முடிவெடுத்தனர் அமெரிக்க தடகளவீரர்கள். ஆனால் அவர்களுக்கு அதிர்ச்சி காத்திருந்தது. ஏதென்ஸுக்குச் சென்ற அடுத்த நாளே போட்டிகள் துவங்கி விட்டன. வேறொன்றுமில்லை. கிரேக்கக் காலண்டருக்கும் அமெரிக்கக் காலண்டருக்கு மிடையே உள்ள வித்தியாசத்தை அவர்கள் கவனிக்கத் தவறிவிட்டனர்.

ஏதென்ஸில் நடைபெற்ற முதல் நவீன ஒலிம்பிக்ஸில் பெரும்பாலான பதக்கங்களை வென்றவர்கள், அமெரிக்க மற்றும் கிரீஸ் நாட்டு விளை











# ஒலிம்பிக் திருவிழா

யாட்டு வீரர்கள்தாம். முதலில் வந்தவருக்கும் வெள்ளிப் பதக்கம்தான். அடுத்து வந்தவருக்கு வெண்கல மெடல், மூன்றாவது பரிசு கிடையாது. கொசுறாக முதல்வருக்கு ஆலிவ் கிளைகளால் செய்யப்பட்ட மகுடம் சூடப்பட்டது. அந்த ஒலிம்பிக்ஸில் முப்பத்தியேழு வயதான கிரேக்க விளையாட்டு வீரரான ஜியோனியோஸ், வயதில் மிக மூத்த பதக்கக்காரர் என்றால், ஹங்கேரியைச் சேர்ந்த நீச்சல் வெற்றி வீரரான ஆல்ஃப்ரெட் ஹஜோசுக்கு வெறும் பதினெட்டு வயதுதான். இந்த ஒலிம்பிக்ஸில்? இன்னும் ஓரிரு வாரங்களில் தெரிந்துவிடும்.





ஒலிம்பிக் போட்டிகளை நடத்த எவ்வளவு செலவு ஆகும்? 1996ல் அட்லாண்டாவில் நடைபெற்ற போட்டிகளுக்கு, 1.72 பில்லியன் அமெரிக்க டாலர்கள் (நூறாவது ஒலிம்பிக்ஸ் என்பதால் ஸ்பெஷல் ஏற்பாடுகள்). அடுத்து 2000 ஒலிம்பிக்ஸுக்காக சிட்னி 1.5 பில்லியன் அமெரிக்க டாலர்கள் செலவழித்தது. இப்போது ஏதென்ஸ் ஏற்கவிருக்கும் செலவு சுமார் பத்து பில்லியன் அமெரிக்க டாலர்களாம்.

- ஜி.எஸ்.எஸ்.



இந்தியாவிலிருந்து இராக் போன மூன்று லாரி டிரைவர்களின் உயிர் இன்னும் போராளிகளிடம் சிக்கிக் கொண்டு ஊசலாடிக் கொண்டிருக்கிறது. இந்தப் பின்னணியில், இராக் போகும் லாரி டிரைவர்களின் நிலைமை என்ன?

அமெரிக்கப் படைகளுக்குக் காய்கறிகள் கொண்டு போய்க் கொடுத்துவிட்டு வந்துகொண்டிருந்தார் ஹுஸ்னி ரட்வான் என்ற லாரி டிரைவர்; இவர் ஜோர்டான் நாட்டுக்காரர். அபு கிராய்ப் சிறையில். காய்கறிகளை இறக்கிவிட்டு, லாரியைத் திருப்பிய ரட்வானின் தலையில் துப்பாக்கிக் குண்டு பாய்ந்து, அந்த



# மரணத்தைச் சந்திக்கும் லாரி டிரைவர்கள்!

இடத்திலேயே இறந்தார். இந்த ஒரு வருடத்தில் மட்டும், சுமார் நூறு ஜோர்டான் லாரி டிரைவர்கள், இப்படி இராக்கில் மரணத்தைச் சந்தித்திருக்கிறார்கள்.

இராக்குக்குப் போகும் நெடுஞ்சாலையைத் தவிர்த்துவிடச் சொல்லி, தங்கள் உறுப்பினர்களைக் கேட்டுக் கொண்டிருக்கிறது, ஜோர்டான் லாரி உரிமையாளர்கள் சங்கம். இதன் காரணமாக ஆயிரத்துக்கும் மேற்பட்ட லாரி டிரைவர்கள், ஜோர்டானில் வேலை இல்லாமல் அவதிப்படுகிறார்கள்.

"அமெரிக்கப் படைகளுக்குப் பொருள்கள் கொண்டு செல்லும் எந்த லாரியும் பாதுகாப்பானது அல்ல. தெரியாத்தனமாக நாங்கள் இந்த வேலையை ஒப்புக் கொண்டுவிட்டோம். இது மிகப் பெரிய தவறு" என்கிறார் சங்கத் தலைவர் அப்துல் மஜீத். சங்கத்தில் பதினோராயிரம் டிரைவர்கள் இருக்கிறார்கள்!

இராக் போகும் நெடுஞ்சாலைகளில்தான் டிரைவர்களைக் கடத்திக் கொண்டு போய்விடுகிறார்கள். அல்லது கொன்று விடுகிறார்கள். அதிலும், இராக்கின் தலைநகர் பாக்தாத்தை இணைக்கும் மேற்குப்புற ஜோர்டான் எல்லை வரை வரும் பாலைவனப் பகுதியான முந்நூறு மைல் சூப்பர்ஹைவே, மிக மிக ஆபத்தானதாம். பராமரிப்பு இல்லாதபோதும், தொடர்ந்து போர் நடந்து சீரழிவு நடந்தாலும்கூட, இந்த சூப்பர்ஹைவே மட்டும் இராக்கின் நெடுஞ்சாலைகளில் ஒரு மணி மகுடம் மாதிரி இருக்கிறதாம்.

இராக்கில் உள்ள அமெரிக்கப் பாதுகாப்புப் படையினரால் ஏதும் பலன் உண்டா?

"ஊஹூம். துளிக்கூடக் கிடையாது!" என்கிறார்கள் இந்த லாரி டிரைவர்கள்.

செக் போஸ்ட்டுகளில் இருக்கும் காவல் துறை அதிகாரிகளைவிட, அதிக ஆயுதங்களுடன் வந்து தாக்கிவிடும் கொள்ளையர்களும், சதாம் ஆதரவுப் போராட்டக்காரர்களும், ஏராளமாக இருக்கிறார்கள்.

கலீத் மேதே என்ற ஜோர்டான் லாரி டிரைவர், பத்து நாட்களாக லாரி ஓட்டுவதை நிறுத்திவிட்டார்.



ஆரம்பத்தில் குறிப்பிட்ட லாரி டிரைவரின் கதைதான் சோகமானது.

ரட்வான் தமது லாரியை ஓட்டிக் கொண்டு, ஃபலூஜா அருகே, வந்தபோது ஒரு பிற்பகலில் கொலை செய்யப்பட்டார். அபு கிராய்ப் சிறைச்சாலையில், அமெரிக்கப் படையினருக்குப் பொருள்களை இறக்கிவிட்டுத் திரும்பியவரை, போராளிகள் சுட்டுக் கொன்றுவிட்டனர்.

உடலைத் திரும்பப் பெற ரட்வானின் சகோதரரும், லாரி கம்பெனியும் படாத பாடு பட்டிருக்கிறார்கள். மருத்துவமனையில் லஞ்சம், உடலை அம்மான் நகருக்குக் கொண்டுவர ஏராளமான செலவு... இத்தனைக்கும் அமெரிக்கப் படையினருக்கு என்றே பொருள்களை லாரியில் ஏற்றி வந்தவர் ரட்வான்.



* கலீத் மேதே



* ஹுஸ்னி ரட்வான்

"எங்களால் எந்தவித உதவியும் செய்ய முடியாது!" என்று மறுத்துவிட்டதாம் அமெரிக்க ராணுவம். ஜோர்டனில் உள்ள அமெரிக்கத் தூதரகத்தில், நஷ்ட ஈடாக ஏதாவது கேட்கலாம் என்று முயன்றால், வாசல் கேட்டிலேயே தடுத்து நிறுத்தி விட்டார்களாம். "நாங்கள் இதற்குப் பொறுப்பல்ல!" என்று ஒரேயடியாக மறுத்துவிட்டார்களாம்.

"ஃபலூஜாவில் இருக்கும் அமெரிக்கப் படைத் தளத்தை நெருங்குமுன், போராளிகள் மெஷின் கன், துப்பாக்கிகள் சகிதம் வந்து லாரிகளை வளைத்துக் கொண்டு விட்டார்கள். எல்லா லாரிகளையும் கடத்திக் கொண்டு போய்விட்டார்கள்!' என் கூடவே நடக்கவில்லையானால் சுட்டுக் கொன்றுவிடுவேன்!' என்று காலில் துப்பாக்கியால் ஒரு போடு போட்டார் ஒரு போராளி. நல்ல வேளையாக, தற்செயலாக எதிரே வந்த அமெரிக்கப் பாதுகாப்பு ரோந்துப்படை வண்டி ஒன்றைப் பார்த்ததும், அவர்கள் மறைந்துவிடவே, நான் தப்பிப் பிழைத்தேன்!" என்கிறார் கலீத். நாற்பத்தைந்து வயதாகும் கலீத், இருபத்தைந்து வருடங்களாக லாரி ஓட்டித்தான் தமது பதினான்கு குழந்தைகளைக் காப்பாற்றி வருகிறார். ஜோர்டானில் ஓட்டுவதை விட, பாக்தாத்துக்கு லாரி ஓட்டுவது லாபகரமாக இருக்கிறதாம். ஆனால் வழியில் இத்தனை அபாயங்கள்!

இரண்டாவது முறை ரமாடி அருகே போராளிகளிடம் சிக்கிக் கொண்டபோது, விட்டுவிட்டார்களாம். இனியொரு தடவை மாட்டிக் கொண்டால், நிச்சயம் கொன்றுவிடுவார்கள். ஆனால் லாரி ஓட்டாமல் குடும்பத்தைக் காப்பாற்றுவது எப்படி?

இராக்கை, குறிப்பாக - பாக்தாதை, நரக பூமியாக்கிவிட்ட அமெரிக்கா, இப்போது தன் பார்வையை இரான் நாட்டை நோக்கித் திருப்பியிருக்கிறது. எச்சரிக்கைகளைவிட ஆரம்பித்து விட்டது!

- சாருகேசி

சென்னை புறநகரிலுள்ள பெருங்குடியைத் தாண்டி சிவரத்தில் இருக்கிறது தினேஷ் கார்த்திக்கின் செழிப்பான வீடு.

"ஓ அந்தப் பையன் வீடா?" என்று அடையாளம் காட்டுகிறார்கள். இனி 'அந்தப் பையனின்' பெயர் காஷ்மீரிலிருந்து குமரிவரை பல குடும்பங்களில் உச்சரிக்கப்பட வாய்ப்பு உண்டு. கிரிக்கெட் பைத்தியம் பிடித்து அலையும் இந்த தேசம், இந்திய கிரிக்கெட் குழுவின் புதிய வரவான தினேஷைக் கண்டு கொள்ளாமல் விடுமா? விக்கெட் கீப்பராக இவரைக் கண்டு கொண்டிருக்கிறது இந்தியத் தேர்வுக் குழு.

நம்மை வரவேற்றது அவரது அம்மா பத்மினி கிருஷ்ணகுமார் ('தினேஷ் ப்ராக்டிஸுக்குப் போயிருக்கான். இப்போ வந்துடுவான். அவன் அப்பா கூட இன்னிக்குதான் இந்தியாவுக்கு வந்தார்').

தினேஷைச் சந்திப்பதற்கு முன் அவரது குடும்பப் பின்னணி பற்றி அறிய முடிந்தது. அப்பா கிருஷ்ணகுமார், குவைத்தில் சிஸ்டம்ஸ் கன்சல்ட்டண்ட்டாகப் பணிபுரிகிறார். தினேஷுக்கு ஒரே தம்பி. வினேஷ் சந்தன். எட்டாம் வகுப்பு படிக்கிறான்.

அம்மா பத்மினி கிருஷ்ணகுமார் ஓ.என்.ஜி.ஸி. நிறுவனத்தில் உயரதிகாரியாகப் பணி புரிந்தவர்.

"'ஃபர்ஸ்ட் க்ளாஸ் கிரிக்கெட்டில் நீ தேர்வு பெற்ற நிமிடமே, நான் என் வேலையை விட்டுவிடுகிறேன்'னு தினேஷிடம் சொல்லியிருந்தேன். அதே மாதிரி வேலையை விட்டுட்டேன்" என்கிறார்.

தினேஷின் அப்பா அம்மா இருவருக்குமே விளையாட்டில் ஆர்வம் உண்டு. அப்பாவுக்குக் கிரிக்கெட்டில் தேர்ச்சி உண்டு. அம்மாவுக்கு டேபிள் டென்னிஸ் விளையாட்டில்.

"கொஞ்சம் லேட்டாயிடுச்சு" என்றபடி சற்றே வருத்தத்துடன் நுழைந்த தினேஷ், நாம் அடிக்கடி சந்திக்கும் ஒரு 'பக்கத்து வீட்டு' இளைஞராகத்தான் படுகிறார், பந்தா இல்லை.

"ஹராரேவில் ஜிம்பாப்வே அணிக்கெதிராக ஆடிக் கொண்டிருந்தபோதுதான், பெவிலியனிலிருந்து சந்தீப் பாடீல் என்னைப் பார்த்து உற்சாகக் கூக்குரலிட்டு, தன் கட்டை விரலைத் தூக்கிக் காண்பித்தார். இந்திய அணியில் இடம் பெற்றுவிட்டேன் என்பதைப் புரிந்து கொண்டேன். ரொம்ப சந்தோஷமாக இருந்தது. ரஞ்சி கோப்பைப் பந்தயங்களில் பெற்ற இரட்டை சதங்கள் இந்த கௌரவத்தை எனக்கு அளித்திருக்கலாம்" என்கிறார்.

செயின்ட் ஜான்ஸ் பள்ளி, செட்டிநாடு வித்யாஸ்ரமம், டான் பாஸ்கோ, செயின்ட் பீட்ஸ் என்று பல பள்ளிகளில் அடுத்தடுத்துப் படித்த தினேஷ் இப்போது பி.டெக். படிக்கிறார், அலஹாபாத் பல்கலைக் கழகத்தில். தொலைதூரக் கல்வி. "கல்லூரி வாழ்க்கையை மிஸ் செய்கிறீர்களா?" என்ற கேள்விக்கு "சின்ன வயதிலிருந்தே கிரிக்கெட், கிரிக்கெட் என்று ஆடியதில் பல வகுப்புகளை இழந்து பழக்கமாகிவிட்டது. ட்யூஷன் வகுப்புகள் மூலமே படித்தேன். என்றாலும் நிறைய மதிப்பெண்கள் வாங்கி வந்தேன். எப்போதுமே என் முதல்

# தில்லக தில்லக தினேஷ்!

விருப்பம் கிரிக்கெட்டாகவே இருந்தது'' என்று பதில் வந்தது.

"பதினான்கு வயதுக்குள்ளேயே என்னை ஆட அனுமதித்த தமிழ்நாடு கிரிக்கெட் குழு. பயிற்சியாளர்கள் செந்தில்நாதன், பாசு" என்று தொடங்கி, நீள்கிறது தினேஷ் நன்றி கூற வேண்டியவர்களின் பட்டியல்.

கிரிக்கெட் அல்லாத பிற விருப்பங்கள் எப்படி? "அதிகம் தமிழ்ப் படங்கள் பார்ப்பதில்லை. ஆங்கிலம் தான். ஆனால் சமீபத்தில் பார்த்தது இந்திப் படம். கல் ஹோனா ஹோ. ஷாருக் பிடிக்கும்" என ஆரம்பித்து "மற்றபடி மன அமைதி தேவைப்படும்போது,


* தாயார் பத்மினியுடன் தினேஷ்

எஸ்.பி.பி., ஜேசுதாஸ் பாடல்களைக் கேட்பேன். ஆழ்ந்த சுவாசப் பயிற்சி என் டென்ஷனைப் போக்கும். அதுவும் ஆடும்போது மொத்த ஸ்கோர் பற்றியெல்லாம் கவலைப்படாமல், ஒவ்வொரு பந்தையும் மட்டுமே முக்கியமானதெனக் கருதி ஆடுவேன். முழு உழைப்பு நிச்சயம். தில்லா ஆடி ஜெயிப்பேன்'' என்கிறார்.

ரோல் மாடல்கள்? ஆடம் கில்கிறிஸ்ட், ராகுல் ட்ராவிட், சச்சின் டெண்டுல்கர். சௌரவ் கங்குலி களத்திலும் வெளியிலும் காட்டும் தைரியமும் ரொம்பப் பிடிக்குமாம்.

- **ஜி.எஸ்.எஸ்.**

படங்கள் : **ஸ்ரீஹரி**



• போலீஸ் தாக்கு

# அடங்காத

செ**ன்னை, டாக்டர் ராதாகிருஷ்ணன் சாலை. சி.எஸ்.ஐ. கல்யாணி மருத்துவமனையின் பெண்கள் பிரிவு. குறிப்பிட்ட வார்டிலிருந்து கும்பல் கும்பலாகக் கல்லூரி மாணவர்களும், மாணவிகளும் கவலை தோய்ந்த முகத்துடன் வெளியே வருகிறார்கள். உள்ளே வார்டில் கட்டில் மேல் அமர்ந்திருக்கிறார் வெண்மதி. பச்சையப்பாவில் எம்.ஃபில் செய்யும் வெண்மதி இந்திய மாணவர் சங்கத்தின் (Students federation of India) இயக்கத்தில் மாநிலக் கமிட்டி உறுப்பினர். நடந்த சம்பவங்களை கோர்வையாகச் சொல்லத் துவங்கினார் வெண்மதி. இடையில், மூச்சு வாங்கி சிரமத்துடன் நிறுத்த வேண்டியதாயிற்று. அவ்வப்போது வலி பிறாண்டியெடுக்க, வயிற்றைப் பிடித்துக் கொண்டார் வெண்மதி.



• வெண்மதி



• சண்முகசுந்தரம்

''கல்வியை வியாபாரமாக்காதே; எல்லோருக்கும் கல்வி, அனைத்துப் பள்ளிகளுக்கும் ஒரே பாடத்திட்டம்'' என்ற இந்த மூன்று கோரிக்கைகளை வலியுறுத்தி, பள்ளிக் கல்வி இயக்குனர் அலுவலகத்தின் முன் ஆர்ப்பாட்டம் நடத்தி மனு கொடுப்பதாக இருந்தோம். ஆனால் போலீஸ் அனுமதி கொடுக்கவில்லை. எனவே மனு மட்டும் கொடுப்பதாக ஏற்பாடு. மனு கொடுக்கலாம் என்று பார்த்தால், பள்ளிக் கல்வி இயக்குனர் அலுவலகத்திற்கு வரவில்லை. எங்கள் மாநிலத் தலைவர் செல்வம், 'என்ன செய்யலாம்?' என்று கேட்டுக் கொண்டிருக்கும்போதே, எஸ்.ஐ. முருகன், செல்வத்தின் சட்டையைக் கழுத்தோடு சேர்த்துப் பிடித்து "ஓடுங்கடா நாயே" என்றார். அதற்குள் வேறு பல காவலர்கள் எங்களைக் காட்டுத்தனமாகத் தாக்கினார்கள். செல்வத்தையும் எங்கள் இயக்கத்தைச் சேர்ந்த முருகன் என்ற உடல் ஊனமுற்ற இளைஞரையும், தாக்க முயன்றபோது நான் குறுக்கே புகுந்து தடுத்தேன். "..... வந்துடறாங்க... பையைத் தூக்கிட்டு" என்று ஆபாசமாகக் கத்திய காவலர் ஒருவர் என் மணிக்கட்டில் நறுக்கென அடித்தார். நான் 'ஐயோ' என வலி தாங்காமல் கீழே விழுந்து விட்டேன். ஷகிலா என்ற மற்றொரு மாணவியை, கன்னத்தில் பளாரென்று அறை விட்டார் காவலர் ஒருவர். அவர் தலை சுற்றிக் கீழே விழுந்துவிட்டார். எங்கள் இயக்கத்தைச் சேர்ந்த பன்னிரண்டு பேரை ஜீப்பில் ஏற்றி நுங்கம்பாக்கம் ஸ்டேஷனுக்குக் கொண்டு வந்தார்கள். ஜீப்பிலேயே அந்த எஸ்.ஐ. முருகன், லத்தியால் எங்களைக் குத்திக் கொண்டே வந்தார். ஸ்டேஷனில் இறங்கியவுடனேயே, ஒவ்வொருவரையும் கழுத்தில் கை வைத்துத் தள்ளிவிட்டார். பலர் கீழே விழுந்து விட்டனர். அதன் பிறகு எங்களை லாக்-அப்பிற்குக் கொண்டு சென்றார்கள். அப்பப்பா... அடுத்த அரை மணி நேரத்தை நினைத்தால் இன்னமும் உடல் நடுங்குகிறது. சகட்டு மேனிக்கு எங்களை லத்தியால் தாக்கினார்கள். மாணவர்கள் மீது எங்களை அடித்துத் தள்ளினார்கள். அடிக்கு அடி ஆபாச அர்ச்சனை வேறு. 'நாங்கள்

என்ன தப்பு செய்தோம்; எங்களை ஏன் இப்படி காட்டுமிராண்டித்தனமா தாக்க றீங்க?" என்று கேட்டவுடன், அந்த எஸ்.ஐ. முருகனுக்குக் கோபம் உச்சிக்கு ஏறி விட்டது. தனது பூட்ஸ் காலாலேயே என் அடிவயிற்றில் ஓர் உதை விட்டார். அவ்வளவுதான், அடுத்த அரை மணி நேரம் நான் கண் விழிக்கவில்லை.



• ஷகிலா

# அராஜகம்?

"இயக்குனர் அலுவலகத்தில் போலீஸார் தாக்குவதைக் கண்ட பத்திரிகை நிருபர்களும், போட்டோகிராபர்களும், தொடர்ந்து ஸ்டேஷனுக்கு வந்து, அங்கு நடந்த அராஜகத்தைப் பார்த்து அதிர்ந்து போனார்கள். உடனே சட்டமன்ற உறுப்பினர் மகேந்திரனுக்கும், மற்றவர்களுக்கும் தொலைபேசியில் தகவல் சொன்னார்கள். அது மட்டுமல்ல, அன்று அவர்கள் தக்க சமயத்தில் குறுக்கிடாமல் இருந்திருந்தால், எங்களில் யாரை யாவது கொலையே செய்திருப்பார்கள்" என்று நடுக்கத்துடன் சொல்லி முடித்தார் வெண்மதி.

"பெண் காவலர்கள் போலீஸ் ஸ்டேஷனில் இருந்தும், ஆண் காவலர்கள் தோழியர்களைத் தாக்கும்போது பார்த்துக் கொண்டு நின்றிருக்கிறார்கள்" என்றார் மாநிலச் செயலாளரான சண்முகசுந்தரம்.

இப்போது இலாகா பூர்வமான விசாரணை போடப்பட்டிருப்பால், போலீஸ் வட்டாரம் அமைதி காக்கிறது. நுங்கம்பாக்கம் இன்ஸ்பெக்டர், எஸ்.ஐ. முருகன், மற்றும் சம்பவம் நடந்தபோது இருந்த காவலாளிகள் ஆகியோர் மாற்றப்பட்டிருக்கிறார்கள். விசாரணை அதிகாரியாக இணைக் கமிஷனர் சுனில் குமார் நியமிக்கப்பட்டிருக்கிறார். "பாதிக்கப்பட்ட எல்லோரையும் சந்தித்து, தீர விசாரித்து தான் அறிக்கை தருவேன்" என்கிறார் சுனில் குமார். மாணவர் சங்க நிர்வாகிகளுக்கு அவர் நடவடிக்கை எடுப்பார் என்ற நம்பிக்கை இருக்கிறது. "நீதிமன்றங்கள், மனித உரிமை ஆணையம் ஆகியவை என்னதான் வழி காட்டு நெறிமுறைகளை வகுத்தாலும், கீழ்நிலையிலுள்ள போலீஸார், அதைக் கடைப்பிடிக்காத வரை, காவலர்கள் செயல்பாடுகளில் பெரிய மாற்றம் இருக்காது. அதிகாரிகளுக்கு வகுப்புகள் எடுப்பதைவிட, காவலர்களுக்கு அறிவுரைகள், பிரச்னை இல்லாமல் கூட்டத்தைச் சமாளிக்கும் விதிமுறைகள் ஆகியவைகளைக் கற்றுக் கொடுக்க வேண்டும்" என்கிறார் ஓய்வு பெற்ற போலீஸ் அதிகாரி ஒருவர்.

"அன்று அந்த மாணவர்கள் கலைந்து செல்வதற்குப் பதில் கோஷமிட்டபடி அலுவலகத்தில் உள்ளே நுழைந்து விடுவார்களோ? என்ற பதட்டம் ஏற்படவே, கொஞ்சம் வேகமாக போலீஸார் செயல்பட்டு விட்டார்கள்" என்கிறார் போலீஸ் அதிகாரி ஒருவர். இந்த நிலையில், தாக்கிய போலீஸ் அதிகாரிகள் எந்தக் காரணம் கொண்டும் தப்பிக்காத வகையில் விஷயத்தை நீதிமன்றத்துக்கும், மனித உரிமை ஆணையத்துக்கும் கொண்டு சென்றிருக்கிறது இந்திய மாணவர் சங்கம்.

- ப்ரியன்

படங்கள் : ராஜன்

பாரதியார் உயரத்தில் பெரியவர். அரவிந்தர் உருவத்தில் சிறியவர். பாரதியார் ஸங்கோஜி. அரவிந்தரும் ஸங்கோஜி தான். பாரதியாரின் சொற்கள் முல்லை மலரின் தாக்கும் மணம் கொண்டவை. அரவிந்தரின் சொற்கள் செந்தாமரை மலரின் பரந்து விரிந்த அழகைத் தாங்கியவை. இருவருக்கும் புதிய புதிய கருத்துகளும், சித்திரச் சொற்களும் திடீர் திடீரென்று புதைவாணங்களைப் போலத் தோன்றும். பாரதியார் ஆகாயத்தில் ஓடுவதை எட்டிப் பிடித்து வந்ததாகச் சொற்களைப் பொழிவார். அரவிந்தர் பூமியைத் துளைத்துத் தோண்டி பொக்கிஷத்தைக் கொணர்ந்ததாகப் பேசுவார். இருவர் சொற்களிலும் கவிச்சுவை நிறைந்திருக்கும். பாரதியாரைப் போலவே அரவிந்தரும் கலகலவென்று விடாமல் சிரிப்பார்.

('மகாகவி பாரதியார்' என்ற நூலில் அறிஞர் வ.ரா.)

ஸ்ரீ அரவிந்தரைச் சந்தித்து அவரால் வசீகரிக்கப்பட்ட இன்னொருவர், பாரதியாரின் வாழ்க்கை வரலாற்றை எழுதிய வ.ரா. பாரதியின் மேல் மட்டற்ற அபிமானம் வ.ரா.வுக்கு. தமிழைத் தம் அற்புதமான கட்டுரைகளால் நவீனப்படுத்திய பற்றிய செய்திகளை ஒன்றுவிடாமல் வாசித்து, அவர் ஓர் உன்னத புருஷர் என ஐயமின்றி முடிவெடுத்தது அவர் உள்ளம். அரவிந்தரைத் தரிசிக்க வேண்டும் என்று மாளாத தாகம் அவருக்கு.

ஆனால் ஸ்ரீ அரவிந்தர் எங்கே? 'ஸ்விட்

# மனிதர் அல்ல புனிதர்!

வ.ரா., மகாகவியின் கவிதைகளில் மனம் பறி கொடுத்தது பற்றி ஆச்சரியப்பட என்ன இருக்கிறது! கவிதைக்கு பாரதி என்றால், கட்டுரைக்கு வ.ரா. என்பது நிருபணமான உண்மைதானே! கவிதைப் பாம்பின் காலைக் கட்டுரைப் பாம்பின் கால் அறிந்து கொண்டது! காந்தம் இரும்பை ஈர்ப்பதுபோல், பாரதி வ.ரா.வை ஈர்த்தார். பாரதியின் கவிதையில் சொக்கிய வ.ரா., புதுச்சேரியில் இருந்தபோது தான் அவரை முதன்முதலாகச் சந்தித்தார்.

ஆனால் அவர் புதுவை வந்ததென்னவோ அரவிந்தரைத் தேடித்தான். கொடியாலம் வ. ரங்கசாமி ஐயங்கார் என்ற அப்பழுக்கில்லாத தேச பக்தர் ஒருவர் இருந்தார். பெரும் செல்வந்தரான அவருக்கு, அரவிந்தரின் மேல் மகத்தான பக்தி. அரவிந்தர் சர்லாந்தில் இருக்கிறார், ஜெனிவா போய் விட்டார்' என்றெல்லாம் பத்திரிகைகள் செய்திகளை வெளியிட்டு வந்த காலம். யாரோ சொன்னார்கள், அரவிந்தர் பாண்டிச்சேரியில் இருக்கிறாராம். உண்மையாக இருக்குமா? வ.ரா. வை அழைத்தார் ரங்கசாமி ஐயங்கார். பணத்தைக் கொடுத்து 'அரவிந்தர் புதுச்சேரியில் இருக்கிறாரா, போய்ப் பார்த்து வாரும்' என்று அனுப்பினார். கரும்பு தின்னக் கூலி வேறு! வ.ரா.வுக்கு புதுச்சேரியில் இருக்கும் பாரதியாரைச் சந்திக்கலாம் என்று உற்சாகம். (கொடியாலம் ரங்கசாமி ஐயங்கார், பிறகு ஸ்ரீ அரவிந்தருக்குப் பொருளுதவி செய்யும் பேறு பெற்றார். அரவிந்தரது யோக சாதனா என்ற புத்தகத்தை வெளியிடும் செலவையும் அவரே ஏற்றார்.)

புதுச்சேரிக்குப் போய் பாரதியாரைச் சந்தித்த வ.ரா., பாரதி மூலமாகவே அரவிந்தரையும் சந்திக்கச் சென்றார். மண்டயம்

திருப்பூர் கிருஷ்ணன்


அரவிந்த அமுதம் - 20

சீனிவாசாச்சாரியாரும் பாரதியுமாக வ.ரா.வை அழைத்துக் கொண்டு சங்கரன் செட்டியார் வீட்டுக்குப் போனார்கள்.

செட்டியாருக்குத்தான் அரவிந்தர் மேல் அபார பக்தி உண்டே! அரவிந்தரைப் பற்றிய ஒவ்வொரு விஷயமும் அவருக்கு வியப்புத்தான். ஸ்ரீ அரவிந்தர் இருபத்து மூன்று நாட்கள் உண்ணா விரதம் இருந்த பிறகு, செட்டியாரின் பக்தி பல நூறு மடங்கு உயர்ந்துவிட்டது. அது எப்படி, எதுவுமே சாப்பிடாமல் இத்தனை நாள் சோர்வே இன்றிச் செயல்பட முடிந்தது? நினைத்து நினைத்து மாளவில்லை அவருக்கு. ராமாயணத்தில் விஸ்வாமித்திரர் 'பலை, அதிபலை' என்ற இரண்டு மந்திரங்களை ராம லட்சுமணருக்குச் சொல்லித் தந்ததாகச் செய்தி வருகிறதே! அவற்றின் மகிமையால் கானகத்தில் ரிஷியுடன் செல்லும்போது, எதுவும் சாப்பிடாமலே அவர்களால் வாழ முடிந்ததாமே! அரவிந்தரின் உள்ளத்தில் குடிகொண்ட வாசுதேவன், அதுபோன்ற ஏதாவது மந்திரங்களை உபதேசித்தானோ என்னவோ! யாருக்குத் தெரியும் இந்த ஸித்த புருஷரின் அந்தரங்க மகத்துவங்கள்! என் வீட்டில் இவர் தங்கக் கிடைத்த பாக்கியமே பாக்கியம்! செட்டியார் பக்திப் பூரிப்பில் திளைத்துக் கொண்டிருந்தார்.

பாரதியும் சீனிவாசாச்சாரியாரும் வ.ரா.வுடன் செட்டியார் வீட்டுக்கு வந்தபோது செட்டியார் புதுநபரான வ.ரா.வைப் பார்த்து மகிழ்ச்சி கொண்டார். தான் பெற்ற அரவிந்தர் என்ற தெய்வ தரிசனத்தைப் பலரும் பெற வேண்டும் என செட்டியாரின் மனம் ஆசைப்பட்டது. பல உன்னத மனிதர்கள் அரவிந்தரைத் தேடிவர, ஸ்ரீஅரவிந்தரோ தன்னைத் தேடித் தன் வீட்டுக்கு வந்து, கொஞ்ச நாள் தங்கினாரே என்று அவர் மனம் பக்திக் கனிவில் தழுதழுத்தது.

செட்டியாரோடு மூவருமாக மாடிக்குச் சென்று அரவிந்தரைச் சந்தித்தார்கள். அருள் தவழும் அந்த அரவிந்த வதனம்! அவரைச் சுற்றிப் பரவியிருந்த இனந்தெரியாத அமைதியும் நிம்மதியும்! எங்கெங்கோ அலைந்து திரிந்த மனத்தையே ஒரு மலராக்கி, அவர் பாதங்களில் அர்ப்பணித்துவிட்டு அங்கேயே வாழலாம் என்றல்லவா தோன்றுகிறது! உலகில் மனிதர் உண்டு. இவர் மனிதர் அல்ல, புனிதர்! செட்டியார் அரவிந்தரைப் பரவசத்தோடு கண்களால் பருகியவாறே, பேச்சோய்ந்து அமர்ந்திருந்தார்.

ஆனால் பாரதியும், சீனிவாசாச்சாரியும், வ.ரா.வும் அரவிந்தரிடம் பேசித் தீர்த்தார்கள். அன்று மட்டுமல்ல. அடிக்கடி இவ்வாறு நடைபெற்றது. பாரதியார் ஏறக்குறைய நாள்தோறும் அரவிந்தரைச் சந்தித்தார். அவர்கள் பேசாத விஷயம் கிடையாது. அரசியல், இலக்கியம், ஆன்மிகம் என்று எல்லாத் துறைகளிலும் அரவிந்தருக்கென்று தனித்த, கூர்மையான ஒரு பார்வை இருந்தது.

அரவிந்தரால் கவரப்பட்ட வ.ரா. அரவிந்தரோடு தங்கினார். அரவிந்தரின் மனைவி மிருணாளினி தேவியின் ஒன்று விட்ட சகோதரர், சௌரின் அரவிந்தர் தத்துவங்களில் ஈடுபாடு கொண்டு, புதுச்சேரிக்கு வந்து அவரோடு தங்கி விட்டார். இப்படி ஆன்மிக நாட்டம் கொண்ட பலர், அரவிந்த ஆலமரத்தின் நிழலில் இளைப்பாறலானார்கள். அரவிந்த ஆலமரம் தன் விழுதுகளை இந்து

## அருள்வாக்கு

நிஜமான மநுஷ்யர்களாக நல்லபடி வளர்ச்சி பெறாமல் தாங்கள் வீணாகப் போய்விடக் கூடாதா? என்ற கவலை, தாபம், விசாரம் மட்டும் வாலிபர்களுக்கு இருந்து விட்டால் போதும்; ப்ரியப்பட்டு மூக்கணாங் கயிறு போட்டுக் கொண்டு விடுவார்கள்; மற்றவர்கள் போடுவதற்கும் இஷ்டப்பட்டு விட்டுவிடுவார்கள்.

அவர்களுக்கு இந்தக் கவலையை எப்படி உண்டு பண்ணுவது? பெரியவர்கள்தான் விடாமல் ப்ரியத்துடனும் பொறுமையுடனும் எடுத்துச் சொல்லிக் கொண்டேயிருக்க வேண்டும். அப்படிச் சொல்ல வேண்டுமானால் சொல்பவர்களும் கட்டுப்பாடான வாழ்க்கை நடத்துபவர்களாக இருக்க வேண்டும். இல்லாவிட்டால் அவர்களுடைய வாயுபதேசத்திற்கு என்ன மதிப்பு இருக்கும்? அதற்கு யார் காது கொடுப்பார்கள்? அதுவும் ஜெனரேஷன் கேப் என்று நன்றாகவே ஊறிப் போய்விட்ட இளந்தலைமுறைக் காரர்கள் கேட்பார்களா? அவர்களுக்காகவே கேப் தெரியாவிட்டாலும், இக்காலச் சிந்தனையாளர்களும், மனோதத்துவ ஆராய்ச்சி



யாளர்களும் நவநாகரீகர்களும் சொல்லிக் கொடுத்தாவது இப்படி ஒரு கேப்-ஐ தெரிந்து கொண்டு விட்ட இளந்தலை முறைக்காரர்கள் கேட்பார்களா?

தற்காலத்திலுள்ள பெரும்பாலான பெரியவர்கள் இந்தக் கட்டுப்பாடான வாழ்க்கை நடத்தும் விஷயத்தில் கேள்விக் குரியவர்களாகத்தான் இருப்பதாகத் தோன்றுகிறது. அவர்களுடைய வார்த்தைக்கு என்ன 'வால்யூ' இருக்கும்? ஆகையினால் இளம் தலைமுறையினரை உத்தேசித்தாவது வயதான தலைமுறையினர் நன்னெறிகளில், நல்லொழுக்கங்கள் என்கிறவற்றில் - கட்டுப்பட்டு வாழ ஆரம்பிக்க வேண்டும். அதை அடுத்த தலைமுறையினருக்கும் உரிய முறையில் பக்குவமாக எடுத்துச் சொல்ல வேண்டும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்**

மதத் தத்துவங்களில் ஊன்றித் தன் கிளைகளை உலகெங்கும் பரப்பி, பேராலவிருட்சமாய்ச் செழித்து வளரத் தொடங்கியது.

அரவிந்தரைத் தேடி வந்தவர்களில் இன்னொருவர் கே.வி. ரங்கசாமி ஐயங்கார். அவர் வந்ததன் பின்னணியில் ஒரு தனிக் குறிப்பு உண்டு. அவரது குலகுரு நாகை ஜபதா என்பவர். குலகுரு மரணப் படுக்கையில் முக்தி அடையும் தறுவாயில் இருந்தபோது, ரங்கசாமி ஐயங்கார் பயபக்தியோடு அவரைக் கேட்டார் :

'சுவாமி! தங்களது சரணாரவிந்தங்களையே நம்பி வாழ்ந்து வந்தேன். தாங்கள் தேகத்தை உதறச் சித்தமாகி விட்டீர்கள். இந்த ஏழையின் மேல் கருணை கூர்ந்து சொல்லுங்கள் சுவாமி. தங்களுக்குப் பின் நான் யாரை குருவாகக் கொண்டு சரணடைவது?'

'கலங்காதே மகனே! வடக்கிலிருந்து ஒரு யோகி, புகலிடம் தேடித் தென்னகம் வருவார். அவதார புருஷரான அவரைச் சரணடைந்து வாழ்வாயாக.'

'ஆனால் அவர் யார் என, நான் எப்படி அடையாளம் காண்பது?'

'தானே உனக்கு அடையாளம் காட்டப்படும். அவரது மூன்று மொழிகளால், அவரை நீ அறிந்து கொள்வாயாக.'

இந்த இறுதி அறிவுரையோடு, நாகை ஜபதாவின் நயனங்கள், நிரந்தரமாய் மூடிக் கொண்டன.

கொஞ்ச காலத்தில் புகலிடம் தேடி ஸ்ரீஅரவிந்தர் புதுச்சேரிக்கு வந்தார். அரவிந்தரைத் தரிசித்த ரங்கசாமி ஐயங்கார், அவரே தம் குருவால் அறிவுறுத்தப்பட்டவர் எனப் பார்த்ததுமே தெளிவடைந்தார். மூன்று மொழிகள் என்று சொல்லப்பட்டவை, அப்போது அரவிந்தரது வாழ்வில் பிரதானமான மொழிகளாய், வியப்போடு நாடெங்கும் பேசப்பட்டுக் கொண்டிருந்தன. நீதிமன்றத்தில் சமர்ப்பிக்கப்பட்ட கடிதத்தில் இருந்த அந்த மூன்று மொழிகளைப் பத்திரிகைகள், வியப்போடு பிரசுரித்திருந்த காலகட்டம் அது. தன் மனைவி மிருணாளினி தேவிக்கு அரவிந்தர் எழுதிய மடல். தனக்கு மூன்று பைத்தியங்கள் இருப்பதாக அவர் விவரித்திருந்த விதம். இவற்றை வாசித்திருந்த ரங்கசாமி ஐயங்கார், தம் குரு நாகை ஜபதா சொன்ன மூன்று மொழி அடையாளம், அவையே என உறுதி கொண்டார்.

தேடி வரும் அடியவர்கள் எண்ணிக்கை அதிகமானவுடன், அதற்கேற்ப ஓரிரு இடங்கள் மாறி, பின் தம் ஆசிரமம் எனக்கருதி ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்து, அங்கே வசிக்கலானார் ஸ்ரீஅரவிந்தர். தற்போது புதுச்சேரியில் அரவிந்த ஆசிரமம் அமைந்துள்ள அந்த இடம் அதுதான். புதுச்சேரியின் பழைய வரலாறு பற்றி ஆய்வுகள் மேற்கொண்டவர், பிரெஞ்சுப் பேராசிரியர் ஜோனியோ டியூபிரிவில். பழைய ஏடுகளையும், கல்வெட்டுகளையும் ஆராய்ந்து, தற்போதைய அரவிந்த ஆசிரமம் அமைந்துள்ள இடம் பற்றி அவர் தெரிவிக்கும் வரலாற்று உண்மை, ஆன்மிக அன்பர்களை பிரமிப்பிலும் மகிழ்ச்சியிலும் ஆழ்த்தக் கூடியது. அந்த உண்மை...

(அமுதம் பெருகும்)



# 4 ஸ்டூடண்ஸ்

மகன் உட்பட லஞ்சம் வாங்குபவர்களை வர்மக் கலையால் வைகுண்டம் அனுப்பும் சுதந்திரப் போராட்ட தியாகி இந்தியன் தாத்தா. மாணவர் சக்தியின் துணையோடு துறைவாரியாக களையெடுக்கும் கல்லூரிப் பேராசிரியர் ரமணா. இவர்களது வன்முறை வழியைத்தான் ஃபோர் ஸ்டுடண்ஸூம் தேர்ந்து கொண்டிருக்கிறார்கள். சின்ன ஆறுதலாக, லஞ்சம் வாங்குகிறவர்களைக் கொன்றுவிடாமல், அவர்களின் கை அல்லது கைவிரல்களைத் துண்டித்து விடுகிறார்கள்.

சிலிக்கான் வேலி டாலர் கனவுகளில் வாழும் இளைய தலைமுறைக்கு மத்தியில், இந்த நால்வருக்கு மட்டும் தேசத்தின்மீது அப்படியென்ன காதல்? யோசித்துக் கொண்டிருக்கும்போதே அவர்களது குடும்பப் பின்னணி தரும் நியாயத்தை, இவர்களை நெருங்கிவிட்ட போலீஸ் அதிகாரியின் துரத்தல் வழியே சொல்லும்போது, இயக்குனரின் திரைக்கதை உத்தி சிலிர்ப்பூட்டுகிறது.

நான்கு மாணவர்களை உணர்ச்சிகர புரட்சியாளர்களாக மட்டும் காட்டாமல், படிப்பில் திறமையுடனும், காதலுக்கும் லட்சியத்துக்கும் இடையில் அடிக்கடி ஊசலாடும் இளமைப் போராளிகளாகவும் சித்திரித்திருப்பது, பாத்திர அமைப்புக்கு யதார்த்தம் கூட்டியிருக்கிறது. இவர்களில் இருவரை நேசிக்கும் நாயகிகளில் ஒருவரை, வாழ்க்கையின் எதிர்காலம் சுயநலம் பற்றிப் பேசும் சராசரி மனுஷியாகவும், மற்றொரு வரை "உனது லட்சியம் தவறல்ல! மேலே செல்" என்று உற்சாகமூட்டும் ஐடியல் மனுஷியாகவும் காட்டியிருக்கும் இயக்குனர், நால்வரணியில் ஒருவரையாவது மாணவியாகக் காட்டியிருக்கலாம்.

திரைக்கதையின் விரைவான பாய்ச்சலில் ஏற்படும் மன அழுத்தத்தைக் குறைத்து, தளர்ச்சியூட்டும் விதமாக சரியான இடங்களில் உள்ளிடப்பட் டிருக்கும் ஜாஸி கிஃப்டின் பாடல்கள், படத்துக்கு ஜனரஞ்சக 'டச்' தந்து விடுகின்றன.

மலையாளத்திலிருந்து மொழி மாற்றம் செய்யப்பட்ட குறை கொஞ்ச மும் தெரியாமல் செய்திருக்கும் நகாசுகள், டப்பிங் குவாலிட்டி, இவற்றுக்காக பாராட்டியே தீர வேண்டும்.

\- விஷுவல்தாசன்

ஆடுகளம்

# "விளம்பரங்களில் நடிக்க முடியலையே!"

இந்திய அளவில் தமிழ்நாடு எந்த விளையாட்டில் நெ.1 இடத்தைப் பல ஆண்டுகளாக கெட்டியாகப் பிடித்து வைத்திருக்கிறது? கிரிக்கெட், ஹாக்கி, ஃபுட்பால், பாக்ஸிங், நீச்சல், அத்லெடிக்ஸ்..? இது எதுவுமில்லை. இந்தியாவால் தோற்றுவிக்கப்பட்ட 'செஸ்'ஸில் தான் தமிழ்நாடு கால் மேல் கால் போட்டு அமர்ந்து மற்ற மாநிலங்களுக்கு 'செக்' வைத்துள்ளது. அபுதாபி ஓபன் செஸ் போட்டிக்காக பறக்கத் தயாராக இருந்த, வுமன் கிராண்ட் மாஸ்டர் ஆர்த்தி மிகப் பெருமையுடன், தான் பிறந்த மண்ணின் அருமை பெருமைகளை நம்மிடம் பகிர்ந்து கொண்டார்.

"செஸ் எப்பொழுது இந்தியாவில் தோன்றியதோ அப்பொழுதிலிருந்தே தமிழர்களின் ஆதிக்கம் இன்றுவரை தொடர்ந்து வருகிறது.

நமக்கெல்லாம் விஸ்வநாதன் ஆனந்த் வெற்றிக்குப் பிறகு தான் செஸ்ஸின் மகத்துவம் தெரிந்தது. ஆனால் அதற்கு முன்பே மேனுவல் ஆரோன் எனும் தமிழர், ஒன்பது வருடங்களாக நேஷனல் சாம்பியனாக கொடிகட்டிப் பறந்திருக்கிறார். இந்த தலைமுறையிலும், நம்மூரைச் சேர்ந்த சசிகிரண் தான் டாப்பில் இருக்கிறார். என்னுடைய முதலிரண்டு வரிகள் சரிதானே?

ஆனந்த் படிப்படியாக முன்னேறிச் சென்றது தான் இந்திய செஸ்ஸிலும் தமிழகத்திலும் பெரிய திருப்பு முனையை ஏற்படுத்தியது. இதோடு விப்ரோ, ராம்கோ போன்ற பெரிய ஸ்பான்சர்களும் இப்பொழுது ஊக்கம் தருவதும் ஆரோக்கியமான விஷயம். ஆனால் சில வருடங்களுக்கு முன்பு, நல்ல ஸ்பான்சர் கிடைக்க தவம் கிடப்போம். கிரிக்கெட்டினால் மற்ற விளையாட்டுகள் பாதிக்கப்பட்டிருந்தாலும், செஸ்ஸுக்கு அந்த பாதிப்புகளில்லை. ஆனாலும் டீவியில் இந்த கேமை கிரிக்கெட் போல சுவாரசியமாக ஒளிபரப்ப முடியாது என்பதால், மீடியா வெளிச்சம் எங்கள் மீது அதிகமாகப் படுவதில்லை. விளம்பரங்களில் நடித்து மேலும் புகழ், பணம் பெறுவதும் இதனால் தடைபடுகிறது. (ஆர்த்தியின் ஆதங்கத்தை யாராவது தீர்த்து வைக்கக் கூடாதா?)

தமிழ்நாட்டில் திறமையான கோச்சிங்கும் போட்டிகளும் உள்ளதால் வெளி மாநிலங்களிலிருந்து பலர் இங்கு குடியேறியிருக்கிறார்கள். ஆனாலும் அவர்கள் தமிழ்நாடு அணிக்காக விளையாடுவதில்லை. தமிழக அரசாங்கம் கிராண்ட் மாஸ்டர் பட்டம் வென்றால், ஐந்து லட்சம் தருகிறார்கள். மாநில அளவில் நடைபெறும் போட்டிகளில் முதலிடம் பெறுபவர்களுக்கு, ஸ்காலர்ஷிப்பாக ரூ.12,000 வழங்கப்படுகிறது. இது தவிர பல சலுகைகளும் உண்டு. போலீஸ் வேலையிலும் கோட்டா ஒதுக்கியிருக்கிறார்கள். ஆனால் நான் அதைத் தவிர்த்து, இந்தியன் ஏர்லைன்ஸில் ட்ராபிக் அஸிஸ்டெண்டாக பணிபுரிந்து வருகிறேன். நமக்கு அடுத்தபடியாக மேற்கு வங்கம் தொடர்ந்து வந்தாலும், ஆந்திர அரசு அங்குள்ள செஸ் ப்ளேயர்களை ஊக்கப்படுத்துவது போல் வேறெவரும் செய்வதில்லை.

ஸ்பெயினில் வசித்து வரும் ஆனந்த் வருடத்திற்கொருமுறை சென்னை வரும் போது அவரைச் சந்தித்து ஆலோசனைகளைக் கேட்டுக் கொள்வேன். வெளிநாடு செல்லும்பொழுது நான் இந்தியன் என்று தெரிந்து கொண்ட பிறகு அவர்கள் கேட்கும் அடுத்த கேள்வியே 'ஆனந்த் இருக்குமிடத்திலா இருக்கிறீர்கள்?' என்பதுதான். 'ஆமாங்க. அவர் எங்க ஊருதாங்க' என்று பெருமிதம் கொள்வேன்.

"இப்போ இருக்கிற வாண்டுகளெல்லாம் சிறு வயதிலேயே தேசிய அளவிலும் சர்வதேச அளவிலும் சாதிக்கிறதைப் பார்க்கும்போது, செஸ்ஸைப் பொறுத்தவரை என்றைக்குமே தமிழ்நாடு தாங்க நெ.1" என்றபடி செஸ்ஸின் அபுதாபியிலும் தமிழனின் வெற்றிக் கொடியைக் கட்ட...

ச.ந. கண்ணன்

---

கார்ட்டூன் கார்னர்

முதலைப் பண்ணை

---

நீருமாராஜியில் சிக்கித் தன் பெயரை மாற்றிக் கொண்ட சிவனுக்கு கண் கொடுத்தவருக்கு தற்போது இரண்டு சிக்கல்கள் ஏற்பட்டுள்ளதாகத் தெரிகிறது. அதில் ஒன்று மீண்டும் 'தாய்' கழகத்தில் சங்கமிப்பது பற்றிய 'பக்குவ' சிக்கல். மற்றொன்று வாக்கில் தாயகத்தின் திசைத் தூது சிக்கல். இரண்டு சிக்கலில் எந்த சிக்கலுக்கு பதிலளிப்பது என்ற குழப்பத்திலிருக்கிறாராம் அந்த முன்னாள் அமைச்சர்.

(நீருமாராஜி நல்ல சிக்கலைக் காட்டினா 'தேசத்துக்கு' நல்லது தான்!)

## முத்துக்கள் மூன்று

★ மத்திய அரசின் குறைகளை எடுத்துக் கூறினால் தான் அது ஆரோக்கியமான கூட்டணி.

★ ஆட்சியின் குறைபாடுகளை வெளிப்படையாகப் பேசுவதில் தவறு இல்லை.

★ ஆட்சியின் நிறைகுறைகளைச் சொல்வது தான் ஜனநாயக முறை.

- ஜி.கே.வாசன்

(வாசன் சார்! ஒரு முடிவுக்கே வந்துட்டீங்க போல!)

## சென்னையின் ராம் ஜெத்மலானி

சதாம் உசேனுக்கு ஆதரவாக வாதாடுவதற்கு உலக அளவில் அமைக்கப்பட்ட வழக்கறிஞர்கள் குழுவில் நம்ம சென்னை வழக்கறிஞர் பி.வி. பக்தவத்சலம் இடம்பிடித்துள்ளார். குற்றவாளிகளுக்கு ஆதரவாகவே வாதாடி புகழின் உச்சியில் இருக்கும் ராம்ஜெத்மலானி போல, இவரும் 'புகழ்' பெறுவாரா என்பது இனிமேல்தான் தெரிய வரும்.

## ஹாட்டாகும் சென்னை வானொலி

ஹாட்டு மச்சி, செம ஹாட்டு மச்சி போன்ற வந்தால் நிலை குலைந்துள்ள சென்னை ரேடியோவிற்கு, புத்துயிரூட்டும் நடவடிக்கையாக தற்போது இரண்டு அலைவரிசைகளுக்கும் 'ஹாட்' ரேஞ்சுக்கு பெயர் வைக்க முடிவெடுத்துள்ளது சென்னை வானொலி நிலையம். நேயர்களும் பெயரை எழுதி அனுப்பலாமாம்! (ஸ்டேஷனையும் மாத்துங்க!)

கலை

பொலிட் பீரோ

# திக் திக் ஸ்டேஷன்!

பயணச்சீட்டு கிடைக்கவில்லை என்று ரயில் நிலையம் வரை சென்று ஏமாற்றத்துடன் திரும்பி வரும் பயணிகளைக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? திருவள்ளூருக்கு அருகில் அப்படி ஒரு விசித்திரமான ரயில் நிலையம் இருக்கிறது. அதன் பெயர் செஞ்சி பானம்பாக்கம்.

“இந்த ஸ்டேஷனை நம்பி வேலைக்குப் போறது முடியாத காரியம். சீசன் டிக்கெட்டும் கிடைக்கிறதில்லை. 'பேசெஞ்சர் டிக்கெட்டும் கிடைக்கிறதில்லை. எப்போ கேட்டாலும் ஸ்டாக் இல்லைன்னு சொல்றாங்க” என்று வருத்தத்துடன் குறைபட்டுக் கொண்டார் நாகராஜன்.

ஆவடிக்கு டிக்கெட் கேட்டால் சென்ட்ரல் ஸ்டேஷனுக்குதான் டிக்கெட் இருக்கிறது என்று சொல்லி கைவிரிக்கிறார்கள் டிக்கெட் கௌண்டரில். வேறு வழியின்றி ஐந்து ரூபாய் கொடுக்க வேண்டிய இடத்தில் பத்து ரூபாய் கொடுத்து போய் வருகிறார்கள் பயணிகள்.

பிரச்னைகள் இத்தோடு முடிந்ததா என்றால் இல்லை. அப்படியே அதிர்ஷ்டவசத்தால் பயணச்சீட்டு கிடைத்துவிட்டாலும்கூட வண்டி வந்தவுடன் சுலபத்தில் யாராலும் ஏறிவிட முடியாது. இங்குள்ள நடைமேடைகள் ரயில் வண்டிகளைவிட சுமார் இரண்டரை அடி குறைவாக அமைக்கப்பட்டுள்ளன. (பார்க்க படம்) மிகுந்த சிரமத்துடன் ஆபத்தான நிலையில் சற்றே தாவி தான் ரயிலில் ஏற முடியும். சிறிது தவறினாலும் உயிருக்கே ஆபத்து என்கிற நிலை.



எத்தனையோ முறை பொதுமக்கள் முறையிட்டும் சண்டையிட்டும் கூட நடைமேடைகளை உயர்த்துவதற்கான எந்தவித நடவடிக்கைகளும் எடுக்காமல் அலட்சியம் காட்டி வருகிறார்கள் நிர்வாகத்தினர். வயதானவர்களும் குழந்தைகளும் அருகிலிருப்பவர்கள் கைப்பிடித்து தூக்கி விட்டாலன்றி, ரயில் வண்டிகளில் ஏற முடியாது என்கிற பரிதாபகரமான நிலை இங்கு நிலவி வருகிறது.

பறக்கும் ரயில், மிதக்கும் ரயில் என்று பெருமைப்பட்டுக் கொண்டிருக்கும் நேரத்தில் இப்படியும் ஒரு ரயில் நிலையம் பொது மக்களுக்கு இடையூறாக கவனிப்பாரற்று கிடப்பது வேதனையளிக்கக் கூடிய விஷயம். சம்பந்தப்பட்டவர்கள் உடனடியாக கவனிப்பார்களா?

+ மருதன்

# ஸ்ருதிலயா

‘சரிகமபதநி’ உலகத்தோடு சிநேகம் கொண்டுள்ள அனைவருக்கும் ஸ்ருதிலயாவை கட்டாயம் தெரிந்திருக்கும். வீணை, மிருதங்கம், தபேலா, ஹார்மோனியம் என்று பல்வேறு இசைக் கருவிகள் ஸ்ருதிலயாவில் காத்துக் கொண்டிருக்கின்றன. இவை மட்டுமின்றி இசையோடு தொடர்புடைய புத்தகங்கள், காஸெட்டுகள், சிடிகள் போன்றவையும் இங்கே கிடைக்கும்.

இந்திய இசைக் கருவிகள் பலவற்றை வெளிநாடுகளுக்கு இவர்கள் ஏற்றுமதி செய்கிறார்கள். உலகிலேயே நம்பர் ஒன் மியூசிக்கல் இன்ஸ்ட்ருமென்ட்ஸ் மேகர் இவர்கள் தானாம்! இவர்களது ஸ்பெஷாலிட்டி வீணை. ஒவ்வொரு நாட்டின் தட்ப வெப்ப நிலைக்கேற்றவாறு வீணைகளுக்கு ஸ்பெஷல் டச் கொடுத்து அசத்துகிறார்களாம். வீணை காயத்ரி உட்பட, திரை இசைப் பிரபலங்கள் பலரும் ஸ்ருதிலயாவின் கஸ்டமர்கள்.

ஸ்ருதிலயாவின் இசைக் கருவிகள் பெரும்பாலும் பலா மரங்களிலிருந்தே தயாரிக்கப்படுவதால் இனிய இசையமைக்க பலரும் ஸ்ருதிலயாவையே நாடிப் போகிறார்கள்.

ஸ்ருதிலயா,
933, ராயப்பேட்டை,
மைலாப்பூர், சென்னை - 600 004.
போன் : 24994945, 24982625

**Numerology**
PALMISTRY
NAMELOGY
GEMOLOGY
YANTRA

Specialist gives solution for Business, Education, Career, Marriage and for all your problems
Sri Devi Upasak P.R. Sriram
Call : 98400 63723
90, G.N. Chetty Road, T. Nagar
E-mail: prsriram@yahoo.com
Consultation by appointment

Phone : 5208 4540 Cell : 94442 23007
**Angels Beauty Parlour & Fashion Art Jewels**
Exclusive for Ladies & Kids
All types of Facials, Hair Care, Waxing, Manicure / Pedicure, Mehandi, Bridal Make up Pimple Treatment & Dandruff Treatment etc.,
Pearls, Corals, Teva Sets, American Diamond Jewels, Imported Sets, Payals, Bangles, Toe Rings etc.,
Bridal Jewels for Hire Also
For Both Parlour & Jewellery
Mobile Services also Available *
No.31/17, Sundaram Pillai Street, Purasaiwakkam, Chennai - 7.
Opp. Street to Adayar Ananda Bhavan
* Condition Apply
Bridal Makeup with Hairstyle for Rs.600 only

**ONE PHONE 31 GREAT BENEFITS**
Refundable Deposit Rs.1000/-



**Pay Rs.2000/-* Own A Mobile**
No EMI


* Condition apply
TATA Indicom
**Viltel Communications (P) Ltd.,**
Chennai. Cell : 92821 68000
Tambaram : 5587 5784 Nungambakkam : 5587 0499
Thiruvanmiyur : 5528 1616 Ashok Nagar : 5587 5990
For Free Demo Call : 92821 01772 / 92821 01761 / 92821 01767

# தமிழின் நிறம் சிவப்பு!



"மார்க்சியம் என்பதை ஓர் அரசியல் தத்துவமாக மட்டுமே பொருள் கொள்வது தவறு. அது ஒரு பன்முகம் கொண்ட கருத்தியல். சமூகவியல், தொல்பொருளியல், வரலாறு, பெண்ணியம், இலக்கியம் போன்ற பல துறைகளில் மார்க்சியத்தின் வளமான கூறுகளை ஒருவர் காண முடியும். குறிப்பாக, இலக்கிய வளர்ச்சியில் மார்க்சியத்தின் பங்கு குறிப்பிடத் தகுந்தது. மார்க்சிய தத்துவத்தை மெய்யாக உள்வாங்கி செயல்படும் இலக்கியவாதிகளால் ஒரு சமூகத்தின் முக்கியச் சிக்கல்களை அடையாளம் காண முடியும். அவற்றைக் களைவதற்கான யோசனைகளை முன்வைக்கவும் முடியும்." என்ற கருத்துகள் எதிரொலித்தன கம்யூனிஸ்ட் கழகம் (மார்க்சிய பிரிவு) தலைமையில் காமராஜர் அரங்கில் நடைபெற்ற மாநாட்டில்.

சில கோரிக்கைகளும் முன் வைக்கப்பட்டன. தமிழ்ச் சேவை எனும் பெயரால் நடக்கும் சில அரசியல் கூத்துகள் எடுத்துக்காட்டப்பட்டன. 'எக்ஸ்கியூஸ் மீ' என்று சொல்வதற்குப் பதில் மன்னித்துக் கொள்ளுங்கள் என்று நீங்கள் சொல்வதாகயிருந்தால் உங்களை உண்மையில் யாரும் மன்னிப்பார்களா என்று தெரியவில்லை. 'கொட்டை வடிநீர்' தான் வேண்டும் என்று நீங்கள் அடம் பிடித்தால் உங்களுக்கு அநேகமாக இந்தப் பிறவியில் காபி கிடைக்காது. பொதுவுடைமை கருத்துகளில் பற்றுக் கொண்ட ஜீவா இதனை ஒப்புக் கொண்டார். பெரும்பாலாக பேச்சு வழக்கில் கலந்துவிட்ட வேற்று மொழிச் சொற்களை தமிழ்ப்படுத்தித் தான் தீரவேண்டும் என்று சொல்வதில் பொருளில்லை என்பது அவர் கருத்து. பல வருடங்களுக்குப் பிறகு திராவிட கழகத்தினரும் ஜீவாவின் இந்தக் கருத்தை ஆதரிக்க வேண்டியிருந்தது. ஆங்கிலம் உட்பட உலகின் அனைத்து மொழிகளும் கலப்பு மணம் புரிந்து கொண்டு தான் சுமுகமாக வாழ்கின்றன.

இவ்வாறிருக்க புதிய புதிய சிந்தனைகளின் மூலமும் புதிய புதிய கண்டுபிடிப்புகளின் மூலமும் தான் தமிழில் பல புதிய வார்த்தைகளைக் கோக்க முடியும்.

இலக்கியவாதிகள் பொது மக்களோடும் கல்வி மற்றும் சமூகத் துறைகளோடும் ஒன்றிணைந்து தமிழ் மொழி வளர்ச்சிக்காக போராட வேண்டும் என்ற சங்கரய்யாவின் வேண்டுகோள் கவனிக்கத்தக்கது.

மருதன்

# வரலக்ஷ்மி வருவாள்

ஒரு பானையில் அரிசியை நிரப்பி வரலக்ஷ்மி படம் மாட்டிய தேங்காயை அதனுள் வைத்து அடுத்த நாள் இதில் கண் விழித்து சமையலுக்கு உபயோகப்படுத்தினால் வரலக்ஷ்மி வீட்டுக்கே வந்து ஆசீர்வாதம் தருவாள் என்பது ஐதீகம். பெண்களின் வழிபாடான தாலி பூஜை (அ) வரலக்ஷ்மி பூஜைக்கான அனைத்துப் பூஜைப் பொருள்களும் 28 வருடங்களாக மயிலாப்பூர் கபாலீஸ்வரர் குளத்திற்கருகே உள்ள விஜயா ஸ்டோரில் குவிந்துள்ளது. கடவுளை பல வடிவங்களில் காண இதைவிட வேறெங்கும் வாய்ப்புக் கிடைக்காது.



# எழில்மிகு சென்னை?

அடையாறு - காந்தி நகர் பஸ் டெர்மினல் அருகில் பூங்கா போன்று ஒரு பகுதி உள்ளது. படத்தைப் பார்த்தால் சத்தியமாய் நம்ப மாட்டீர்கள். காரணம் அந்த இடம் மிகுதியாக சிதிலமடைந்து காணப்படுகிறது. அது மட்டுமின்றி அடையாறு காந்தி நகர் - கஸ்தூரிபா நகரின் ஒட்டுமொத்த குப்பை மேடாக மாறி வருகிறது. இப்பகுதி ஒன்றும் யார் கண்ணிலும் தென்படாத பகுதியே அல்ல. சென்னையின் முக்கிய நபர்கள் வசிக்கும் பகுதி. அதற்கு எதிர்ப்புறம் முன்னாள் எம்.பி ஜெகத்ரட்சகன் வீடும், வெகு அருகில் மாநகராட்சியின் துணை மேயர் வீடும் உள்ளன. அது மட்டுமில்லாமல் அடிக்கடி டிராபிக் ஜாமாகும் பகுதியில் அதுவும் ஒன்று. இவ்வளவு இருந்தும், இதுவரை அப்பகுதியின் நிலைமை மோசமாகவே இருக்கிறது. இவ்விஷயத்தில் இரு வேதனைகள் உண்டு. அவை: அப்பகுதியின் சுவரில் 'எழில்மிகு சென்னை' என எழுதப்பட்டிருப்பது. மற்றொன்று, அதற்கடுத்து உள்ள பகுதி மின் விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டு தண்ணீர் ஊற்றுகள் மற்றும் குரோட்டன்ஸ் செடிகளால் நிரப்பப்பட்டிருக்கிறது. ஏன் இந்த ஓர வஞ்சனை?

கலை




## அதிர்ஷ்டம் உங்கள் கையில்!

வெற்றி நிறைந்த சுகவாழ்க்கை உங்களுக்கு உரிமையானதே! மனம், உடல், செல்வநிலை, தொழில், இல்வாழ்க்கை, திருமணத் தடை முதலிய எல்லா பிரச்னைகளுக்கும் சுலபமாக வெகு விரைவில் வெற்றி பெற அணுகவும்.



**Pattapirajan, Numerologist,**
**9, Somu Mudali Street, (Near Amir Mahal)**
**Royapettah, Chennai - 14.**
**Ph: 28483333 / Cell : 9840275610, 9840163318**

**ANUGRAHA**
A/C Mini Hall
Ayush Homam, Upanayanam
Betrothal and Seemantham
Rent Rs.3,750 150 seats capacity
32, Raju Naicken Street, West Mambalam.
Ph : 24712584, 9840248080

MUSICAL INSTRUMENTS SALES & SERVICE
Sri Saraswathy Musicals
17/1, Madley Road, T. Nagar
Call: 2433 3691, 94440 40691
Also buying & selling old Veenas, Violins etc.



சென்னை ஸ்கேன்

**Advertisement Rates**

| Display (col/cm) Column width 5 cm | B & W | 4 Colour |
|---|---|---|
| Regular page | Rs. 80 | Rs. 150 |
| Premium Pg.1 | Rs.120 | Rs. 220 |
| Back Pg. | Rs.100 | Rs. 180 |
| Ear Panel (5.5cm x 4cm) | — | Rs.900 |
| Classifieds Rs.150 for first 20 words, Rs.10 for every additional word, Max. 80 words. | | |

To Advertise contact
2232 4281 / 2231 4673

• படம் : இரா. சண்முக சுந்தரம்

# திடீர்ப் பரிசுப் போட்டி – 3

படத்தைப் பார்த்து ரசிச்சா மட்டும் போதுமா? பொருத்தமான, ஃபோட்டோ காமெண்ட் ஒன்றை அஞ்சல் அட்டையில் மட்டுமே எழுதி அனுப்பினால் பரிசு கிடைக்குமே! ப்ளீஸ் ட்ரை!

அசர வைக்கும் வாசகத்துக்கு ரூ.200 பரிசு!

பிரசுரமாகும் மற்ற வாசகங்களுக்கும் பரிசு நிச்சயம் உண்டு.

**கடைசித் தேதி : 30.8.2004**

ஆசிரியர் என்ன தீர்ப்பு சொல்றாரோ, அதுதான் இறுதி!

'திடீர்ப் போட்டி - 3' என்று மறக்காமல் குறிப்பிட்டு 'கல்கி'க்கு அஞ்சல் செய்யவும்.

